

ஓம்ஸத் குரவேநம:

ஸ்ரீ ம யூ ர கி ரி

# ஷண்முகப்பிரபந்தம்



இஃது

சிவகெங்கைஸமஸ்த்தானம் வேப்பங்குளம் தேச

திலகரான ஸ்ரீலஸ்ரீ சின்மயதேசிகரவர்கள் பௌ

திரனும் ம - ள - ள - ஸ்ரீ சோணமுத்தம்பல

காரரவர்கள் புத்திரனுமாகி மதுரகவி

ஆண்டவ னென்றுவழங்கிய

முத்தய்யப்பாவலரவர்களால்

இயற்றியதை

ஷை ஸமஸ்தானத்தில்சஞ்சீவிமலையென்னும்

எரிமாககரம்

மு-க-ரு, மீனுட்சிசுந்தரதம்பிள்ளை

யவர்களால்.

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1913.

Registerd Copy right.

சுத்தப் பதிப்பு காப்பி 2000.

இதன் விலை] [ரூபா 1—8

உ



உ

வேலுமயிலுந் துணை.

# முகவுரை.

பரதகண்டத்தின் கண்ணே சிறப்புற்று பல வழங்களுஞ் செழித்து விஸ்வகம்மியனால் நியமிக்கப்பெற்ற மாடகூடங்கள் பொருந்திய சிங்கார நகரங்கள் செறிந்து விழங்கும் பாண்டி நாட்டின் கண் கித்திலத்தை யுகுக்கும் கழனிகள் நிறைந்தும் யெத்தலத்தினும் யிதர்க்குவமையில்லை யென்று கவீசுரர்களாலும் ப்ரபலவான்களாகிய ப்ரபுக்களாலும் புகழப் பெற்றுள்ள சிவகெங்கைச் சமஸ்தானச் சேகரம் தேவிமா நகரமென்று பேர்விழங்கிய தேவிகோட்டைக்கு மேற்பால் மணிமுத்தாநதி பரவப்பெற்றுள்ளதும் மா, பலா, தேங்கு, வாழை, கமுகு, யெலுமிச்சை, கொளுமிச்சை இன்னு மநேக விதமான தருக்கள் நெருங்கிய சோலைசூழப் பெற்றதுமான வேப்பங் குளத்தில் தேவேந்ர குலத்தில் சென்ற இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னிருந்து வேதாந்த சித்தாந்த சமரச சுபாநுபவரு யில்லர தர்மத்தை வழாது நடத்தி ஈஸ்பர சொரூப முத்தி யடைந்த ஸ்ரீலஸ்ரீ சின்மய தேசிகனென்று பேர்விளங்கிய சின்னையா அம்பலகார ரவர்கள் பௌத்திரனும் மேற்படி புண்ய சீலரான சின்னையா அம்பலகார ரவர்களருந் தவத்திலுதித்த தர்ம சொரூபியான சோனை முத்தம்பலகார ரவர்கள் புத்திரனுமாய் முன்னோர்களால் ஆண்டவனென்றியற் பெயரமைக்கப் பெற்ற முத்தய்ப னென்று காரணப் பெயரோடு விளங்கியிருக்குங் குகனடிச் செல்வ னிளமையிற் கற்று பனிரெண்டு பிராயத்தின் மேற் பக்தி முதிர்ச்சியாற் சதாகுக சிந்தனையும் குக நாம ஸ்மரணையோடு மிருந்து மெய்பறி வுறுத்தும் வேதாகம புராணாதிகளுங் கற்று நித்யத்தை யடைய முயர்ச்சித்து வருங்கால் சென்ற வழு வருடங்களுக்கு முன் மதுநதி யென்று பேர் விளங்கிய தேனாறு புடை சூழ்ந்து மடந்தடஞ் சோலை நந்தன வனங்களாற் சிறப்புற்று வட மொழியில் மயுரகிரி யென்று பேர் விளங்கிய குன்றக்குடியின்

கண்ணிச் சாசத்தி யென்ற வள்ளியம்மை யாரொடுங்கிரியா சத்தி
யென்ற தெய்வயானை யம்மையாரொடும் ஞானசத்தியென்ற வேற்
படையைக் கரத்திற் றரித்து வாசி யென்ற மயின்மீதி லாரோகணி
த்து உலகினுள்ளோர்க ளுய்யும் பொருட்டுத் திருக்கோவில் கொண்
டெழுந்தருளி யிருக்கும் லோகநாதனாகிய, சாட்சாது சிவ சுப்பிர
மணியக் கடவுள் திருவருட்கண் ணோக்கம் பாலித்து சனவிற்
றோன்றி நம் பாலக நும்மீது மிகுந்த அன்பு கொண்டோம் நாளை
யுதய மாரம்பித்து நமதுபேரி லொரு பிரபந்த மியற்றுக. உனக்கு
வேண்டியபாவையு மளித்தோமென்று திருவாய் மலர்ந்தருளி அநு
க்ரகஞ் செய்து மறைந்தருளினார் அதுபோற் சில தினங்களிற் பிரபந்
தத்தை இயற்றியானவுட னென்னை யடிமையாய்க் கொண்ட கருணை
யங் கடலாகிய வள்ளலே அடியேனை ஒருபொருட்டாய் மதித்து
கனவிற் றோன்றித் திருவாய் மலர்ந்தருளியபடி சிற்றறிவுக் கியன்ற
ஒரு பிரபந்தஞ் செய்து முடித்தனன் யென்று விண்ணப்பித்து நித்
ரை செய்யும் போது முன்போலவே கனவிற் றோன்றி நமதருமைச்
சுதநீ யியற்றிய பிரபந்தத்திர்க் கடங்கா மகிழ்ச்சி கொண்டோம்.
மதுர கவி யென்ற காரணப் பெயருங் கொடுத்தோ மிந்தப் பிரபந்தத்
தை சிரத்தா பத்தியுடன் நாடோறும் பாராயணஞ் செய்து வருபவர்
களுக்கு அஷ்டாயிசுவரியமு மிஷ்ட்ட சித்தியும் புத்திர பாக்கிய
மும் நீடித்த ஆயுளுங் கொடுத்து இறுதியில் நம்மிட பதவியும் அளிப்
போமென் றநுக்கிரகித்து உருக்கரந் தருளினார் அன்று தொட்டு
இதுகாறு மென்மேலுஞ் சிரத்தா பத்தியோடு வழிபட்டு வருகின்ற
னர். ஆகையா லுலகத்திலுள்ள கல்விமான்கள் பிரபுக்களாகிய யாவ
ருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் கிருபை யெளிதிற் கிடைக்கும்
பொருட்டு பல வித்வான்களாலும் பரிசோதித்து பிரபுக்களுடைய
முயர்ச்சியா லச்சிட்டு வெளியிட் டிருக்கின்றனன் இந்தப் புத்தகம்
வேண்டியவர்க ளடியிற்கண்ட விலாசத்திர்க் கெழுதிப் பெற்றுக்
கொள்ளலாம்.

மு-க ரு, மீனாட்சி சுந்தரம்பிள்ளை
யேரியூர்
திருக்கோஷ்டியூர் போஸ்ட்

உ

# சாற்றுக்கவி.

இஃது
இந்நூலியற்றியவரது தமிழாசிரியர்
மலைசையம்பதி மதுரகவி
பெ. பெருமாளாசாரியா ரவர்களியற்றிய
நேரிசையாசிரியப்பா.

சீர்பெரும்பாண்டித் தென்னாடதனி
லேர்பெரும்பூங்கமு கிலகிடவோங்கி
லியனுறவோங்கு வேப்பங்குளமதி
னயமுறுசுரர்பதி நாயகன்மரபில்
வந்தசின்னய்ய வள்ளனெறிமுறை
சிந்தவிடாத்திட சித்தமுடைத்தவன்
பெட்பிலாக்கயவர் பேரிலனுவெனும்
நட்பிலான்றேவன டியற்கடியவன்
சிவகாருண்யஞ் சிந்தையிலனுதின
மாவலாய்க்கொண் டதின்படிபுரிவோன்
ஞானவானந்த நதியினின்மூழ்கித்
தானெனதில்லாத் தத்துவமுளவன்
சதுர்வேதாந்தத் தலைமையரிந்ததா
லெதுவுஞ்சதமில்லையென வுணர்ந்திட்டவன்
கொல்லாவிரதங் குறியார்மிகவும்
பொல்லாரென்றவர்க்குப் போயொளிந்திட்டவ
னில்லந்திருந்தின் னியற்கைபுரிவது
நல்லதென்றுளத்தி னாட்டிவாழ்ந்திட்டவ
னாதியுமந்தமுமில்லா வருமபொருட்
சோதிவடிவேற் சுந்தரன்மீது
கந்தப்புராணங் கமழ்ந்திடவேயா
னந்தக்களிப்பு னயமுடனுரைத்தோ
னின்னமுங்கந்தவே ளின்புறச்சில
பன்னெட்டுப் பிரபந்தமருளிய

சின்மயதேசிகன்சேய் சோணைமுத்து
மன்னவன்றன்மதியா லுதித்த
ஆண்டவனெனும் புராதனப்பெயருடன்
பூண்டமுத்தய்ய புனிதகுணாளன்
கல்விபயின்றிடு காலைதொடர்ந்து
நல்வடிவேலனடி கெதியெனவே
குன்றுக்குடிவாழ் குமரனிருசர
ணன்றெனத்துதி நல்கிவருங்கால்
பராபவவாண்டிற் பைங்குனியுத்திரத்
திருமகோற்சவச் சேவைகண்டுகந்து
கந்தாகுகவேற் கையாநினதரு
ளெந்தநாளீய்வையெனத் துதித்திரால்
நித்திரைசெயுங் கானின்மலன்கனவிற்
புத்திரநமதருள் புரிந்தனமுனக்கு
நம்பராக்கிரம நயமதைவியரிசை
சம்பிரமத்துடன் சண்முகப்பிரபந்
தம்மொன்றுபாடுகத் தனயாவென்றுறைத்
தெம்மண்ணலும் மறைந்திட்டாகம்புள
காங்கிதங்கொண் டிராக்கண்டகணுவினை
யாங்குநம்பிட மரிவித்திடவும்
ஆசையாமிருளி லலைவுறுதருணு
வாசாமகோசர வள்ளலைப்பாடுத
னன்றெனச்சுப நாட்கணித்துக்கொடுத்
தன்றுகுன்றையம் பதிதனிலே
காப்பாரம்பங்க ளரியதுதொடர்ந்
தாப்பியாயநமாகிச் சிலசந்
தப்பாவெண்பாகீர்த் தனப்பாவாசிரி
யப்பாகலித்துறையான பாவொடுகண்
ணிகளிந்துஸ்த்தானி புணமெட்டுந் திருப்
புகன்மெட்டுகளும் புதுச்சந்தங்களும்
நவரசமெனவே நாவலர்காவல
ரவனியிலுளவரியா வருமதிசயப்
பண்ணென்றின் புறப்பாவித்திடவே
சண்முகப்பிரபந்தம் முற்றுணபின்

## சாத்துக் கவிகள்

முத்தையப்பெயர் மூதறிவுடையோன்
நித்தநின்மலநிட் பிரபஞ்சனே
யென்கனாவினி லியப்பியபடியாய்
நின்புகழனைத்தும் நிகழ்த்தினேனருள்செய்
யென்றுதுதித் திரஞ்சிநின்றேத்த
அன்றுநித்திரை யிலருமுகன்கனவினிற்
றனையாபிரபந்தம் முகித்தனையால்
உனதுபாவினுக் குளமகிழ்வுற்றனம்
பாலகாவிதைப்படிப் பலர்பூசையிற்
சீலமாய்மனதில் சிந்திப்பவரும்
நமதுதிருவடி நண்பருயந்தம்
எமவாதனையற் றிருப்பரென்றருளி
மறைந்தனனித்திரைமாறிட வெழுந்தெம்
பிறைவன்கிருபை யீதென்றிறைஞ்சிப்
பிரபந்தத்தைப் பேரிசீவோடு
நிரஞ்சனம்பூசையி னியமித்திடுங்கால்
இங்கிதசஞ்சீவி யென்னுமாக்ஷேத்திரந்
தங்கிவாழ்விலிங்க தாரணமரபினில்
வந்திடுங்கருப்ப வள்ளனற்றவத்தில்
தந்தமீனாட்சிசுந்தர மெனும்பெயரோன்
பண்மையானபா மொழிமிகுந்த
சண்முகப்பிரபந்த மமதையச்சிட
விரும்பினேன்றருகென வேண்டுகோளின்படி
சரியெனக்கொடுக்கத் தான்வாங்கியதை
தனகனவான்கள் முத்தமிழரிபுலவரும்
மனதொருமைப்பட வாசித்துப்பூசிப்போர்
சரவணபவனருட் டங்கிவாழ்வுருமால்
நிரைவுரஅச்சில் நிருமித்தனனே.

சாத்துக்கவிகள் முற்றிற்று.

இஃது

சென்னை இராயபுரம்

ப்ரத்தியானவாச சங்கத் தக்ராசனாதிபதியும்

ஆயுர்வேத பாஷ்கரருமாகிய

திரிசிரபுரம்

மகாவித்துவான்

ஸ்ரீமத் - வி. கந்தசாமிப் பிள்ளையவர்களின்

மாணாக்கரி லொருவரும்

இரங்கூன் - "பாலபாண்டிய தமிழ் சங்கத் தவரும்

திருநெல்வேலி ஜில்லா சந்தைப் பேட்டை

தர்கர்

தமிழ்த் தலைமைப் புலமையுமாகிய

அருட்கவி

## ம. கா. செய்கப்துல்காதிறு அவர்களால்

இயற்றிய

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.



அலைபரப்பி தண்டலைமா மலரலர்ந்தத் தேன்றுமிக ளாறு பாய
நிலைபெருகித் திலமணிக ளிழைத்திங்கோ புரம்வானை நிமிர்ந்து காட்ட
கலைபழுத்துப் பொழிமேக மன்னகவி வாணர்நிறை கமழ நாளுந்
தலைமையுடை நகராகும் வேப்பங்கு ளம்பதியின் தமனியன் சீர்

புலவரெலாம் புகழ்பேசுஞ் சோணமுத் தம்பலன்றன் புத்ர ரத்நம்
இலகுமுத் தமிழ்கடலை யெஞ்சாது வுண்டோனென திஙப னன்பன்
தலமதிக்குஞ் சண்முகப்ரபந்தமதை கனிந்தன்பாய் தமிழிற் செய்தான்
குலவுமுத் தமிழ்ப்புலவன் முத்தய்யனெனுநாமக் கொண்டன் யாதோ

---

இஃது
மதுரைஜில்லா திருப்புத்தூர்
த. சைய்யதிபுரூஹிராவுத்த ரவர்கள்
குமாரர்

## மஹாஸ்ரீ முதுமுத்துப்பாவாப்புலவரவர்க ளியற்றிய

அருசீரடி விருத்தம்.

உம்பரும் விண்குடி புகுந்தார் சகல கலைக்கியானமுனை
யுரவோ ராய்ந்த
அம்புவி யெலாந் திரிந்தார் தண்டலை வேப்பங்குளத்து
ரணியின் பூருஞ்
செம்பதும மாதுபுயன் சோணை முத்தண்ணறன்
சேயா முத்தய்யா
நம்புமவர்க் கருள்புரியுஞ் சண்முகப் பிரபந்தநூல்
நயந்து சேட்டே.

---

இஃது
ஷை மாணாக்கரிலொருவராகிய
மதுரை ஜில்லா தெம்மாவை நகரம்

## மு. முத்துவயிருக் கவிஞ ரவர்களா லியற்றிய

விருத்தம்.



அனமெனுமின்வாணி நடமாடவேத னவையுணர்ந்துயிதயமு
மானந்த மேறத்
திணமலிந்த தமிழ்முகியுஞ் சேடனொடு சித்திரகவியரிந்துவறை
குளிக்குளுற
கனமுள மாநகர் வேப்பங்குளத்தின்மேவுங் கருணையுளான் சோணை
முத்துக்கருதவந்த
தனதனெனுமுத்தய்யா குமரன்மீது சண்முகப்பிரபந்தமதைச்
சாற்றினனே. (1)

இறைவனுளங்குளிர ப்ரமானந்தங் கொண்டிப்புதுமைமுனமரியோ
மென்று நின்ற
மறையவனைநோக்கி லவனெழுந்துபோற்றிமாதேவா யெமதுமனை
யைத்தன்னி
நறைமலர்சூழ்நகர் வேப்பங்குளத்தின்மேவும் நன்மணிமுத்தய்யாவி
னுவற்றோங்கி
வறைமகளின்சுதன் வடிவேலேந்திமீது வண்மைசண்முகப் பிரபந்தம்
வழுத்துமன்றே. (2)





## விநாயகர்துதி.

பேரோங்கு குன்றைமலைப் பேரின்பசாகரன்மேற்
சீரோங்கு பிரபந்தம் செப்பவே காரோங்கு
மஞ்சுகரத் தெந்தையவனஞ்ச லென்போருக்கருளுங்
கஞ்சமலர்ச் சேவடியே காப்பு.

## அவையடக்கம்.

### விருத்தம்.

அருள்வாக்கை யுடையதொரு ஔவையல்ல
அந்தரஸ்த்திரீ வசித்திருக்கும் கம்பரல்ல
திருவாக்குக் கடாட்சமுள்ள மேகமல்ல
சிரந்தபேர் பெற்ற புகழேந்தியல்ல
குருவாக்குப் பெற்றதொரு சீடனல்ல
குழந்தை முருகேசரருள்கொண்டு யானுஞ்
சிருவாக்கா லுரைத்திட்ட புன்சொல்லெல்லாம்
செகத்திலுள்ள பெரியோர்கள் பொருத்திடுரே.

### வெண்பா.

புக்தியுண்டு வித்தையுண்டு புத்திரசம்பத்துமுண்டு
சித்தியுண்டு முத்தியுண்டு செல்வமுண்டு சத்தியுண்டு
அத்தமயில்கொண்டமரும் அண்ணலவன் றண்பதத்தில்
பத்திசெய்து சோதினையைப் பார்
பாவின்சுவையதனைப் பாவலர்கள் தானறிவார்
நாவாற்சுவையதனை நாமறிவோம் — பூவின்
மணத்தைநுகர்ந்தார் மரப்பரோ மற்றக்
குணத்தாருக்கே தக்குறி.





உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.



# ஸ்ரீ மயூரகிரி
# ஷண்முகப்பிரபந்தம்.



## ஆசிரியவிருத்தம்.

திருவிலவு மருமமுள கரிவரத னடிபரவு சிவனரிய வருமையுடனே
திருவுளமதுதனி லறுமுகமுடைய நிலைமையுறு தினமதனி லறுபொறியென
வருபொழுது கனலினிட முதவுநிலை குலையமரு வளியதனை யரிபரவியே
வறுமையது தவிரவரு பொருளிதனை யுனதுகர மதனிலெடு வெனவுதவவே
பெருகிவரு நதியதனி லரிவிடவு மதுதனது பெரியகரமது தழுவியே
பெருமையுள சரவணம தனிலிடவு முலகமது பெருகவரு முருக குகனே
குருகுகொடி யுடையரத மதனினித மனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (1)

நிலமதனி லுனதுபுக ழதனையனு தினமுமுறை நெறியிலுர வருமையுடனே
நிகழ்வுறை தருவலவ ரணிதொடையை மனமகிழ நினதிருதய மதினழகோ
டுலவவரு ளுதவியவ ருடையமிடி தவிரநல வுறைகளறி நிதமலரிணை
துயருமுன தடிநிழலை யவரடைய வரமருளி யுமைமகிழ வமருபவனே
நலமுடைய புலவனொருதினமுனது சனிதிவரநவிலுனது வறுமையெனவே
நயனமிலை யளியெனவ னுரைகழற மனமிழகி நயனமதை யுதவுதுறையே
குலவுகொடி யுடையரத மதனினித மனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (2)

சயனசுக மதனைநல மெனமனது தனிலுணரு தகமையுள கரிவரதனே
தரகனென வருமசுர னொடுபொருதி யவனுடைய சரமதுர நிலைகுலையவே
பயமதொடு திகிரிதனை விடவதனை யசுரவிறை பலமதுறு களமணியவே
பலபடையை விடவுமது பழுதுபடு பொழுதினிது பகரநல தெனவசுரனே
அயலிலுற மனமுருகி வருகினரி முனிபகர வரியுனது பதமதனிலே
யபயமென முறையிடவு மதனையிறு செவிபருகி யருளுதவு சரவணபவா
குயவுமிசை யழகினொடு கொடியுயர வனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (3)

மதிமலிவையுடையகுருமுனிவனொரு பொழுதுனதுமலரடியையெனிபரவியே
மலையினிற சிகரமதை யெனதுமலை யதனிலுற வரமுதவு கருணையெனவே
பதியுமையுமெனமனது தனிலருமை யொடுநினைவுபடரவது கொடுவெருகவே
பலமுடைய சிகரமது புவியிலுற வெதிரிலொரு படருபுய வசுரனுறவே
செதிசுழறி வசுரவிரு சிகரமதை யுதவுகென செருவமொரு புகவவணமே
செருடனென வருமசுர னுனதுவலி யரியசிவ கிரியுதவு கெனவருளியே
குதிரைகொடி யுடையரத தமனினித மனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (4)

சுரரசுர ரிருபுரமு மரவினடி முடிகொடினி தயருகிரி யதனிலுரவே
துடருகய ரெனவுவரி யதனிலொரு பொழுதுததி தயரதற வுணவிரைவிலே
சுரசரென வலியினொடு கடையவிட மதுசிதர சருவசிவ னதனையுணவே
சகலசுர ரொடுமசுர ரமுதுகொள வரவமது தனதுசட மிகமெலியவே
அரகரர குமரவென தவதிதவி ரெனவுனது வடிமலரி லபயமிடவே
யதுதநியி னுனதுசுர மதுதடவி யவதியினி யகலுமென வரமருளியே
குரவமொடு மணிரதம ததனினித மனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (5)

முதுமறையரிருடிமுனி புலவரொரு பொழுததிக முதிருகலைவலவரெவரோ
முனமரிய வெளிலைதனை யுதவவவை யதனையரி முகமதனி லுதவுகெனவே
இதுவெனது தரமதைது குருமுனியி னிடமுதவு கெனவமுனி சாசுவதியே
இணையளெனவவடமுறுபவரையறி கலைமகளு மிதெனவுறையெனவவருமே
மதுநனைய மலரிலுறு மயிலுனது கலையதிக மதிகமென வெளிலையுதவ
வருவதென வதுபுவன பரையினிட முதவுகென வரவவளு மிதுவையெனது
குதுகலம தடையகுகனிடமுதவு கெனவெளிலைகொளுமுருக வனைமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (6)

அவைநடுவி லொருபொழுது சகலசுர ரொடுபிரம னரியருகி லுறமகரயா
முதனைவெருபரிவினொடுகொழுமுனிவ னினியவிசையமைகவெகுதரமொழிய
சிவையணையுமரசமுக மதனிலுறு விதியுதவு திகழுகனி யதனைமுனியே[வே
திருவடியி லிடவதனை யிருமதலை யுதவுகென சிவனவனி வலமுறுவரே
சுவையுடையகனிபெருக வெனவருள மயிலிலுரசுமுகனர னவனியெனவே
தொழுதுகனிபெரவுமன்ர ரொடியிலுர வரனுமுமைதுதிசெயவுமமருபவனே
குவையினொடு மணிரதம ததனினித மனைகளிரு குயமருவி மனமகிழவே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (7)

உலகதனை வலமதுறு முனமுமது கனியதனை யுதவிடுத லதுதருமமோ
உமதருகி லுறுசுமுக னெவணமுல கதனைவல முறுவனது நலமதெனவே
சலனமொடு கரமதனி லுயருதடி கொடுவெருவி சடுதியொடு படிமருவியே
சகலவள முடையசிவ கிரியதனி லருமையொடு தனியமர வுருபரிதியோ

டிலகுதிரு கபிலையது கெதியதுர வரமருளி யினிமையதொ டமருபொழுதே
இறைவியொடுபரமனுரவடிபணியசகலபொருளவையுமெனநலமொழியவே
குலவுகொடி யுடையர தமதனி னிதமனைக ளிருகுயமருவி மனமகிழ்வே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (8)

அரியுதவு கபிலமுனி தபசபுரி பொழுததனி லவனுயிரு கவரமனுஞ் [லவா
னவனுடையசனதுகொரிவருபவரை யினிமையதொடமைவிதெனுமொழிபுக
னெரியுதவுகுருவென துபதிலுதவ வருமுகனை நினைவிறெனுதொழுகைபுரிவே
னிமிடமதுதனிலவட முறுவனென வவருமிறை நியமமிது வெனமறையவே
எரியைக்கருடையவழிநமனுடைய பிரதிநிதி இதெனமுறையெனமுனிவனே
இறைவவென்ன வரியமொழி யதனையத்து ததியுதவி இலகுகுரு மணியிழவலே
குரிகுருகு கொடியிரத மதனினித மனைகளிரு குயமருவி மனமகிழ்வே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (9)

அகழதது மெலிவதுற வருபிணிக ளொடுகணிகை யரிவைவிழிவலையதனிலே
அனுதினமு முழலுகிற மிடியனெனை நெரிவழியி னதனிலுர மனமிழகியே
மிகமனது செழுமையுர வருமையொடு வுனதுபத மிசையதனி லனவரதமே
வெகுகவிக ளொடுமதுர வுறைகழற வரமுதவி விமரிசையிலுர வருளவே
தகதகென வொளிருமயி லதனிலிரு மயிலமர சலசலென பரிபுரவொலி
சருவிவர விதுசமய மருணகிரி பரவுதிரு சகளகள நிமலவடிவே
குகவுனது வயிரரத மதனினித மனைகளிரு குயமருவி மனமகிழ்வே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (10)

பரமசிவ நமசிவய பலசமய நமசிவய பகரரிய நமசிவயவே
பதியுதவு நமசிவய கெதியுதவு நமசிவய பலனுதவு நமசிவயவே
வரமுதவு நமசிவய நலமுதவு நமசிவய வனமமரு நமசிவயவே
மதியுதவு நமசிவய சதிவெருவு நமசிவய மருமவொழி நமசிவயவே
சரமணியு நமசிவய பிரமனரி நமசிவய சகலமெனு நமசிவயவே
ததியெதிரு நமசிவய கிருபைதரு நமசிவய சரணமது நமசிவயவே
குரவனென வயிரரத மதனினித மனைகளிரு குயமருவி மனமகிழ்வே
குளிருமதி குலவுபொழி லுளமயுர கிரியமரு குமரகுருபர கடவுளே. (11)

முற்றிற்று.







சிவமயம்.

# ஸ்ரீ மயூரகிரி
# திருவிளையாடல் பதிகம்.

பூமேவுபுத்தே ளருந்தவஞ் செய்தனது
　　பொன்னடியில் வாழ்வதற்குப்
புலம்பித் தவித்தனுதினந் திகைத்தேநின்று
　　போற்றிசெய போற்றியென்னத்
தேமேவுபாலாழி மீதரவின் மேல்வளரு
　　திருமார்பன்வந் தடிதனிற்
றேவனேநின் கருணைபெற்றிடத் திருவருள்
　　செய்குவா யெனவணங்கப்
பாமேவுமயிரா வதத்தலைவன் வந்தனது
　　பாதமதிலே யிறைஞ்சிப்
பன்னிருபுயாசலா யான்கொண்ட துயர்தனைப்
　　பனியாய்ப் பரக்கடித்தெக்
கீமேலரும்பதவி யென்றவன் வணங்கவே
　　கேட்டுவர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர்
　　கிரிமேவு குமரேசனே. (1)

அருமறைக ளனுதினமு முறைசெயுறு நீதியால்
　　அவனிபல வளமேரவே
அவனுற்ற வுனதடியர் வறுமைநோ யதுதனை
　　யகற்றியே வாழ்வுபெற்று
ஒருமையுட னுனதுதிரு நாமமதை மாரா
　　துரைத்தவர்கள் விடுவேண்டி
உத்தமர்கள்பலகூடி மெத்தவுல்லாசமாய்
　　ஓம்குமர முருகவிங்கு
வருகமயின் மிசையேறி வள்ளிதெய் வானையொடு
　　வடிவேல் கரங்கொண்டுநீ
மனமுவந் தெங்களைக் காத்திரட் சிக்கவென
　　வந்தடிபணிந்து நிற்சக்

கிருபைசெய் திரங்கியே யுன்றனிரு செவிதனிற்
　　கேட்டுவர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழ திருமயுர
　　கிரிமேவு குமரேசனே. (2)

பூங்கமுகி னற்பாளை யொக்கலர்ந் ததின்மேவு
　　பூந்தேனிழிந்து பாயும்
புனலோடி நற்பழன மீதேரி யெங்கணும்
　　பொலிவான செஞ்சாலிகள்
பாங்காக வோங்கிப் பரிந்துகதிர் முத்தியே
　　பைங்கரும் பினைமறைக்கப்
பரிதியொழி தோன்றாம ளிழலாடு வைந்தரு
　　படர்ந்துவிண் ணதனைமுட்டத்
தேங்காயினைக் கவிகள் தாவிப் பிடுங்கியே
　　தின்பதற் கெத்தனிக்கச்
சிருவர்க ளதைப்பற்றி யேகக் குரங்கினஞ்
　　சென்றுமலை யேரியவரைக்
கீங்கிங் கெனக்கரங் கொட்டிச் சிரிப்பதைக்
　　கேட்டுள மகிழ்ந்துநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழ திருமயுர
　　கிரிமேவு குமரேசனே: (3)

நெடியமால் வரையினிலு மேலான மலையதனை
　　நேசமாய் நடுவிருத்தி
நேரான தென்றிசை வடதிசை கீட்டிசை
　　நெரியான மேற்றிசையிலும்
படியமைத் திட்டமது ராபுரி வையாபுரி
　　பரவுஞ்சுனைச் சரவணம்
பலமா யமைத்துமே தேரோடி வந்திடப்
　　பகரரிய மேன்மையோடு
வடிவுமிகு நால்வீதி மண்டலா காரமாய்
　　மறைநாலு மெனவமைத்து
வர்ணிக்க வாயிரஞ் சிரமுள்ள சேடனவன்
　　மதியது மயங்கிநிற்கக்
கெடிபெற்ற முடிசூடி ரம்பையர்கள் செய்கின்ற
　　கேளிக்கை பார்த்துநித்தங்

கிளிகாடை குயில்மருவு பொழில்சூழ திருமயூர
கிரிமேவு குமரேசனே. (4)

மணிவாயில் கொண்டகோ புரமேவு கோவிலில்
மயில்வாகனந் தன்னிலே
வனமாது தெய்வானை யிருபுரந் தன்னிலூர
மனமகிழ்ந்தே யிருந்துன்
பணியாள ரர்கின்ற பாவாணர் சூடுமோர்
பாமாலை தன்னையன்பாய்ப்
பாரமார் பதிலணிந் திரவியிரா ரெனப்
பகர்கின்ற கரமசைத்துப்
பிணியாவு மாழவே திருவருள் புரிந்தவா
பேதையா னுன்னை யன்றிப்
பேசிலேன் வேறுமொழி யேழையேற் கருள்செயப்
பேர்பெற்ற வடியினிற்கிண்
கிணியது வொலிக்கவே பரிவுடன் வந்துயான்
கேட்கும்வர மீவைநித்தந்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழ திருமயூர
கிரிமேவு குமரேசனே. (5)

சித்திரச் சிகைநாக சிகரகோ புரமதிற்
செங்காவி வஸ்திரத்தாற்
செப்பரிய வன்னதானஞ் செய்குவே னெனத்
தெரிதரக் கொடிகட்டியே
சித்திரைத் திங்களிலு மகரமுடன் மீனமாந்
திருவிழாக் காலமதனில்
சிந்துதரு நிததிலக் குவியலென வன்னமது
சேரக்குவித் தறுசுவைத்
தித்திப்பெனப்பகரு மற்றசிற்றுண்டியுஞ்
சேர்த்தடியருக் களிக்குந்
திரமுடைய வனுமாகி யவ்வுண்டி தன்னைநீ
தின்பவனுமா யடியருக்
கெத்திரமு மன்புட னழிதலுமே லங்கவர்கள்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மவு பொழில்சூழ திருமயூர
கிரிமேவு குமரேசனே. (6)

பாரவா ரிதிசூழு முலகின்மிசை யுன்றனருள்
பற்றிடும் புனிதமாக்கள்
டச்சையி லிஞ்ஞேகை பண்ணுங் கமைத்துநற்
பல்லக்கெனப் பகரமாய்
ஆரமொடு குஞ்சமணி யங்கங்க ணிந்ததினில்
ஆலைவாய்ச் சர்க்கரையதை
அழகான பொன்கலந் தனிலடைத்தே கட்டி
ஐயவுன் முத்திரைதனைத்
தீரமுடனே யமைத் தரகரவென்ச் சங்கு
ஜெயகண்டி யோசையுடனே
செப்பமொடு காவடி யெடுத்தவர்க ளுன்றனடி
சேர்த்திடவு மலையதனிலங்
கேசியபி டேகமது செய்தவர்க ளன்புடன்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழ திருமயுர
கிரிமேவு குமரேசனே. (7)

அன்பினு ஆன்றனடி மரவாது நீதியாய்
அனுதினமு முறைசெய்குவோர்
ஆயிரத் தெட்டிலக் கத்தெட்டி னெண்ணுன
அலகுதனை மெய்யிலூன்றி
என்புருக மனமுருக யெதிருறுவர் தானுருக
இருகணு னர்தவாரி
ஏகப்பிர வாகமா யோடவே நாவினை
இழுத்து வேலாற்குத்தியே
நின்புகழை நெஞ்சினி னினைத்தவர்கள் பலர்களும்
நெருங்கியரகர வென்றுமே
நேயமா யுன்சன்னி தானமது சேர்ந்தினிது
நின்னடி பணிந்தவர்களுக்
கின்பமா யருள்சுரந் தேயவர்க ளுன்றனைக்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருபயுர
கிரிமேவு குயரேசனே. (8)

வாயான் மனத்தாலுன் மலரடியை மரவாது
வாழ்த்திப்பணிந் துளோர்கள்

வல்வினைக ளணுகாது பேரின்ப வீடதனில்
வாழ்வதற்குன் னருள்பெறத்
தூயமன தோடுபரி சுத்தமாயாவிற்
சுரந்தபால் தன்னையன்பாய்ச்
சொர்னக் கலந்தனிற் சேர்த்துமுத் திரையுடன்
சூடதீபா ராதனை
நேயமாய்ச் செய்துபாற் காவடி யெடுத்தவர்க
ணீரதனிலே யிரங்கி
நின்றுவிளை யாடியவர் மெய்யதனி லொருதீங்கு
நேராது முத்தியையெமக்
கியவே வேணுமென வந்தடி பணிந்தவர்கள்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயுர
கிரிமேவு குமரேசனே. (9)

சமதனில் வாழுவோர் மெய்த்தெய்வ மெனவுனைச்
சாற்றிடக் கிருபைகொண்டு
சலதிதனில் வாழரவு மச்சத்துடன் கூவு
சாவலைக் கரிசமைத்தே
யகமகிழ வேகொண்டு வாவெனக் கனவுதனி
லருள்செயப் பெற்றபேர்கள்
அருமையாய் அவ்வா றெடுத்துனது சரவணம
தனில்வந் திரக்கிநீரிற்
புகவிட வுயிர்த்தவைகள் நீரிற் புரத்தினிற்
போய்நின்று கொக்கரிக்கப்
புவியுளோர் கண்டுனது மகிமைதனை மெச்சிப்
புகழ்ந்தடி பணிந்தெளியருக்
கிகபர மளித்துதவு நாதனே யென்றவர்கள்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயுர
கிரிமேவு குமரேசனே. (10)

பரிவார தேவதைக ளிருமருங்கினும்பினும்
பற்றித் தொடர்ந்துவரவும்
பாரமத யானையிரு பாலில்வெண் சாமரம்
டட்சயாய் வீசிவரவும்

அரியயனு மிருபுறந் தனில்நின்று சரவணத்
        தறுமுக பராக்கென்னவும்
அடியவர்கள் கோட்டி யரகரவென் றுரைக்குமொலி
        ஆழியி னிரைச்சலெனவும்
விரிவான பீடத்தி லிருமயிலு முரமயிலில்
        வீற்றிருந் திரவியொழிபோல்
வெள்ளிரத மதிலேறி வீதிவலம்வந்தடியர்
        வேண்ட வெண்ணீறெடுத்துக்
கிரியாதி சூழாம லன்புட னளித்தவர்கள்
        கேட்கும்வர மீவைகித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
        கிரிமேவு குமரேசனே. (11)

மீனத்தி னிற்பூர மகரமது தன்னிலே
        மேவுபுனர் பூசந்தனில்
வெற்றிடால் கொடிமுரசு காளமெக் காளமொடு
        மிகுபேரி தான்முழங்க
வானத்தை முட்டிடுஞ் சிகரமது வைத்த
        வயிரத்தேரின் மிசையூஞ்சலில்
வள்ளிதெய் வானையொடு வங்கமயின் மீதினில்
        மனமகிழ்ந் தாரோகணித்
தோனமருகா குமர குருபரா வென்றதே
        ருயர்வடங் கைப்பற்றியே
யுத்தமர்கள் கூடியே சுத்திரால் வீதிவந்
        தன்பதிவிடுக் கவர்களுக்
கீனமில் லாவாழ் வளித்தவர்க ளின்புறக்
        கேட்கும்வர மீவைகித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
        கிரிமேவு குமரேசனே. (12)

பொன்வயிர முத்துமர கதநீல ரத்தினம்
        புட்பராகந் துவரினைப்
பொங்கமொடு வைத்திழைத் தப்பானு மங்கவொழி
        பொலிவுறுஞ் சப்பரத்தில்
நன்னயத் துடனெழுந் தருளியிமை யவர்குழாம்
        நாற்புறஞ் சுற்றிவரவே

நானிலத் தோர்சென்ம மீடேறிடக் கிருபை
நாடியே தீர்த்தமாடி
வன்னமிகு தெர்ப்பமிசை யூர்ந்தடியர் பகிழவுன்
மாட்சிமிகு காட்சிதந்து
வளமிகுந் திடுபழனி யாயிபூ ரணிதன்னில்
மாகனக மண்டபத்தில்
கின்னரர்கள் புடைசூழ வீற்றிருந்தே யுலகர்
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (13)

பருவமங்கையர் தெருவி னிளைஞர்கள் வரக்கண்டு
பாரவிழி வலைவீசியே
பணியாடை மேகலைநெகிழ்த்தவர்கள் மீரிப்
பிணைப்பகந் தன்னையன்பாய்த்
தெரிவுரக் காட்டவே சிந்தைதடு மாரியான்
செக்கெரு தெனத்தயங்கித்
தேப்பித் திகைத்திடக் கணிகையர்கள் கண்டுநற்
றேன்மொழியும் வாய்திறந்து
அருமையாய் வாருமுட் காருமென் றன்புட
னழைத்தவர்கள் கைலாகுடன்
அணைமிசை கிடத்தியவர் சிற்றின்ப மென்பதோர்
ஆலம தருந்திமையல்
கிருகிரு வெனச்சிரஞ் சுற்றிடப் பின்சென்று
கெட்டிடா தாள்வைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (14)

காரழக பாரமுகில் நேர்விழிகள் கூரிலயில்
கருமைநுத லிழமதியெனக்
சனநாசி குமிழெழுபிறு தரளமிதழ் பவளமுயர்
கந்தரங்க முகுநெஞ்சிற்
பாரமுறு தனமேரு கிரிஇமைய கிரியகடு
பழுமரத் தளிருந்தியைப்
பகரரிய நீர்ச்சுழியி னேர்மருங் குற்குவளை
பஞ்சினால் கால்கடுத்துச்

சீரரவ படத்துடன் றேர்கதலி மரமெனச்
சீர்பாத மாவிந்தநற்
றிருமுகத்தைச் சந்த்ர னென்றுவமை செப்பியே
செயலழிந் துழலுமேழைக்
கேராள மானமதி தனையளித் தேயுனைக்
கேட்கும்வர மீவைசித்தந்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (15)

தேங்குயரு கழைகதலி மாபலா புன்னையுந்
திகள்கந்தி வெந்நாவலும்
தேக்கத்தி புன்னையொடு பல்விருட் சாதிவளர்
செய்யடவி சூழ்ந்திலங்கும்
பொங்கமிகு குன்றைமா நகர்மேவி வாழ்கின்ற
புரவலா சரவணத்தின்
புத்திரா வறுவர்தன முண்டருமை யாய்வந்த
பூரண யேழைமெத்தச்
சங்கடத்தா லகமெலிந் தெனது வறுமையைச்
சாற்றவுன் செவியுராமற்
சார்பிலா தவர்போ லிருப்பதுவும் நீதியோ
தர்மமோ வுனதுபாதக்
கிண்கிணி யொலிக்கமயின் மீதுநீ வந்தடிமை
கேட்கும்வர மீவைசித்தந்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (16)

கற்றறி விலாதமுழு மூடனென் றெண்ணியோ
கறையா தவன்மனதினைக்
கைப்பற் றிடுங்கொடிய பாவியென் றெண்ணியோ
காசின்மே லாசைமிஞ்சிச்
சிற்றறிவு குடிகொண்ட தீயனென் றெண்ணியோ
சேவலா வுன்னடிதனைச்
சிந்தைதனி லுன்னுத தேகியென் றெண்ணியோ
தெரிவையர்கள் தன்னையன்பாய்ப்
பற்றியே திரிகின்ற பதிதனென் றெண்ணியோ
பட்சம்வைத் தாளாததெற்

கிற்றதியி லுனையன்றி வேறுகெதி யில்லையடிமை
கேட்கும்வர மீவைநித்தம்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (17)

பூதலத்திற் கொடிய பொய்மொழி புகன்றனோ
பூசுரரை யேசினேனோ
புலையதனை யஞ்சா திணங்கிப் புசித்தனோ
பொறுமையது தவரினேனோ
ஆதர விலாதவர் தவர்களை யடித்தனோ
அனியாய மதுசெய்தனோ
ஐயமென வந்தவர்க் களியா திருந்தனோ
ஆம்பலை யருந்தினேனோ
பாதகத் தொழிலான கொலையது புரிந்தனோ
பத்தினியை நத்தினேனோ
பட்சமா னவருக் கிரண்டகஞ் செய்தனோ
பகருதற் கரியேனெனக்
கேதம தகற்றியே நல்வாழ் வளித்தடிமை
கேட்கும்வர மீவைநித்தம்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (18)

அரியயன னம்பன்றி யாயடியு முடிதேடி
யரியாத பதியில்முன்னம்
அரிவையர்கண் மயல்மூழ்கி யவசமது நீங்கியே
யருணகிரி நாதனென்போன்
பரிவாக வநதுபர கதியளித்தே கிருபை
பாலித்தனுக் கிரகியெனப்
பட்சமாய்த் திருவருள் புரிந்துபர கதிதந்து
பகரரிய மேன்மைபெற்ற
நெரியான குருமுனிக் கருளது சுரந்துலகில்
நிகரிலா நற்கீரன்முன்
னேர்வந்து வினைதவிர்த் துயிர்தனைக் காத்தவா
நீயெனைக் காப்பதெளிதோ
கிரியாறு குடிகொண்ட செவுரியருள் சுதவடிமை
கேட்கும்வர மீவைநித்தம்

கிளிகாடை குயின்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (19)

முருகோடு குழையாட முத்துவட மணியாட
முடிகளோ ராறுமாட
முன்கையி னிற்கடக கங்கணங் களுமாட
மோதிரந் தானுமாட
இருபுரமு மீராறு கரமாட வயிலாட
இருமயிலு மயிலுமாட
ஏர்கொண்ட நூபுரம் பாதகிண் கிணியாட
எழிலவீர கண்டையாட
ஒருமையொடு வந்தடி பணிந்தமுனி வருமாட
வுன்னடியர் கூட்டமாட
உயரவிண் தாவிவரு குக்குடக் கொடியாட
வோங்குபா மாலையாடக்
கிருபையொடு வந்தெனது வல்வினை தவிர்த்தடிமை
கேட்கும்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (20)

எத்தகைய கொடிதான பாதகஞ் செயினுமதை
என்றுமே நீபொருத்து
ஏழையென் மீதுனது கிருபைவைத் தடியனுக்
கின்பமது தருவதான
பத்தியென் கின்றதேன் பாகினைப் பருகியே
பக்குவமதனை யடைந்து
பவமான மலபாத மதுகளை விலக்கியே
பகரரிய மேன்மையான
வித்தையொடு முத்திதந் துன்னருளை மரவாது
வேண்டித் துதிக்கமதியை
வேலவா தந்துலக விவகார மதுதனை
விலக்கிடக் கருணைசெய்தெதற்க்
கெத்திறமு மன்பா யளித்தடிமை கெதிபெறக்
கேட்குப்வர மீவைநித்தங்
கிளிகாடை குயில்மருவு பொழில்சூழு திருமயூர
கிரிமேவு குமரேசனே. (21)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

# பால்ய திருவிளையாடல்.

இந்துநதி யரவருகு கொன்றைமா லிகைவெள்
ளெருக்குமலர் தும்பைசூடி
இமையவரை யரையன்மரு மகனென விளங்குசெக்
கீசபர மேசுரன்கண்
வந்துபர வியகுமர குருபரா காங்கெயா
வடிவேல் தரித்தகரனே
வானவ ரிடுக்கம தழித்தசுர னைக்கொன்று
மயில்சேவ லாக்கியாளுங்
கந்தனே, கருணைகரா வெனது கர்த்தனே
கவலையது மிகவடைந்தேன்
கன்னிவளி தெய்வானை கணவனே குருமுனிக்
கன்பனே கவிமொழியினால்
வந்தனைகள் செய்துனது நாமமதை வாழ்த்தினேன்
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (1)

பிரமனைச் சிறைதனி லடைத்தவன் செய்கையைப்
பேதமில் லாதபடியே
பிரபஞ்ச மதனையுண் டாக்கவே யுலகுளோர்
பேதித்து நின்றுவாடிப்
பிரமனைப் பிள்ளைகள் தன்பிள்ளை யென்னவே
பேசியே கூச்சலிடவும்
பிரணவப் பொருளினைத் தெரிவியென் றுனைமருவு
பிஞ்ஞகன் வேண்டலாலே
பிரமனைத் திருவுளமி ரங்கியே சிட்டியைப்
பேணிநீ புரிவாயெனப்
பிரமன்வந் தடிதனை வணங்கவே யருள்செயும்
பேர்பெற்ற வடிவேலவா.

வரமதைத் தந்தடிமை மனமதும கிழ்ந்திடவென்
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (2)

சுரபூபதிக் கினிய மனைவிமகன் மற்றுளோர்
சுகவாழ்வு தனையிழந்து
துன்பத்தி லாழ்ந்துமே யனவரத முன்றனைத்
தொழுதடி யிறைஞ்சியேங்கச்
சூரர்பகைஞ ராகின்ற சூரபத் மாதியைச்
சூழ்ந்துநவ வீரருடனே
சொல்லரிய சத்திவேல் தன்னையே யேந்தித்
துளைத்தசுர ரைச்செயித்துச்
சுரராஜ புத்ரன் சயந்தனைத் தளைதனைத்
துண்டித்து வரவிழைத்துச்
சுகமாக வென்னாளு மேதந்தை யன்னையுந்
துணைவியொடு வாழ்ந்திடென்ன
வரமே யளித்துதவு குமரா விரங்கியென்
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (3)

தேவேந்தி ரன்றன் னகத்தினிய மனைவியைத்
தேவரீ தந்தாயெனச்
சிந்தையது பூரித்து வந்துதன் புதல்வியைத்
தேவியா யாட்கொளென்னத்
தேவேந்தி ரன்றபசி இருடிமுனி வோருடன்
றேகபர வசமாகியே
தென்பரங் குன்றினில் வந்தடி வணங்கவே
சித்தம திரங்கியருளித்
தேவேந் திரன்செய் தவத்தா ...நித்ததோர்
செல்வியாந் திருவமைந்த
தெய்வானை தன்னையே தென்பரங் குன்றினிற்
றிருமணந் தான்புனைந்து
வாவென் றணைத்துனது வாமத்த ணைத்தவா
வறுமையது தீர்த்தாளுவாய்

மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (4)

மானின்ற வள்ளியைக் கானகத்தே கண்டு,
மகரயாழ் வல்லமுனிவன்
வந்துனது செவிதனக் கின்பமா யோதியே
வாவென்றழைக்க விரைவில்
மானீன்ற வள்ளியைத் தேடியே யடவியினில்
வந்தவ ளிருப்பறிந்து
மறுவேட மாகியே பலவித்வு பாயத்தில்
மருளாத தன்மைகண்டு
மானீன்ற வள்ளியைத் தன்வசம தாக்கவே
வாரணனை வருகவென்ன
வந்தடவி தனிலானை வள்ளியை வருத்தவுன்
மலரடியி லவள்வணங்க
மானினை மணந்துனது வலமதனில் வைத்தவா
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (5)

கானகத் துறுவாவி தனில்வந்து வேதியர்கள்
கர்மவிதி தவராவணங்
கருதிப் பரத்தையரி கவனத்தை யுடையராய்க்
கார்த்திருக்கின்ற போழ்தில்
கானகத் தோரவுண னலம்பழுப்பினைக்
கரைபாதி நீர்பாதியாய்க்
காட்டியே மாயையாற் பரவைமீ னுக்கிடக்
கண்டதவர் நிலையிழிந்து
கானகத் தவுணன்வச மாகியே குகையிற்
கலங்கியே நைந்திருக்கக்
கண்டுநற் கீரனைச் சீரிக் கடுத்தவர்கள்
காலனுய் வந்தாயென
வானமக் கெதிரிலெனை வந்துயி ரளித்தவா
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (6)

குறுமுனி தனக்கான பொதிகையது செல்லவே
கொற்றமுடனே குறும்வழியில்
கொண்டாட்டமாகவிளை யாடியே கூவிக்
குழந்தையெனவேயிருந்து
குறுமுனி தன்னக்கூவி வாவென் றழைத்தூற்
குளிகையுண்டோ வளியெனக்
குளிகைதர வுட்கொண்டு குணமில்லை யென்றுபழி
கூறியேயுன் குளிகையைக்
குறுமுனிக் கன்பாய்க் கொடுக்கவு மருந்தவே
குண்டுவிசை யென்னவிண்ணிற்
கொண்டுசெல வரன்வந்து ஆறெழுத் தந்தாதி
கூறெனக் கூறியுன்பால்
வீறுமிருடி தனையஞ்ச லென்றருள் புரிந்தவா
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (7)

மாங்கனி கரங்கொண்டு மனமகிழ்ந்தர னுமையும்
மக்களிரு வரையழைத்து
வாரணு பன்னிரு கரங்கொண்டு யாமீன்ற
வடிவேலெடுத்த மதலாய்
மாங்கனி தனைப்பெற விரும்புவோர் பூமிதனை
வலமாக விறைவின்முந்தி
வந்திடும் பேருக் களிப்பமென யானையரன்
மலரடியை வலம்வந்துமே
மாங்கனி தனைப்பெறச் சிகியதனி லூர்ந்துநீ
மகிதலந் தன்னைவலமாய்
வந்தெனக் களியெனத் தேவிசிவன் வாரணன்
வந்துமுன் பெற்றுனென
மாங்கனியி லாவி னன்குடி யிருந்தவா
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (8)

சம்பந்த னென்று பிரமாபுரந் தனில்வந்து
சங்கரித னமுதமுண்டு

சகலகலை வல்லனு யாவரும் போற்றிடச்
சைவகுருவாய ஞானச்
சம்பந்த நீக்கியே பாவலர் சுமந்திடுந்
தண்டியலி லேரியகிலந்
தனைவலம தாகவே வருநாளி லாலவாய்ச்
சமணர்களை வெல்லவிங்கு
சம்பந்த வாவெனத் திருமுக மனுப்பியே
தவமங்கை யுன்னைவேண்டச்
சற்சனர்க ளோடுசென் றயனுறை கொடுசுரந்
தன்னைப் பரக்கடித்து
வம்பராஞ் சமணரைக் கழுவேற்று நாதவென்
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (9)

கடலாடை கொண்டிலகு படிமீது சிவரைக்
காத்திடக் கிருபைகொண்டு
கனமான செந்திலே ரகமயிலை மயூரகிரி
கைலைநிக ரருணைபழனி
இடமான சோலைமலை தோகைமலை விராலிமலை
எட்டுகுடி சிக்கல்வேளூர்
ஈழநாட்டுக் கதிரை போரூர் பரங்கிரி
இயலான குமரகோட்டம்
தடயேவு கொடுமுளூர் சென்னிமலை மேருகிரி
தகையாந் திருத்தணியொடு
தாணுவின் கைலைமலை மேலவயல் சோணு
சலங்குருக்குத் துறையுமேல்.
வடவேங்கடந் தனில் வாழ்கின்ற நாதவென்
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (10)

ஓங்கார ரூபமா யோரெழுத் தெட்டெழுத்
துண்மையா மூன்றெழுத்தாய்
உனதுதிரு நாமமா மாரெழுத்தாய் முன்
னுதித்ததோ ரைந்தெழுத்தாய்

பாங்கான ஐம்பத்தி யோரெழுத் தாய்மூவர்
பகரரிய மறையெழுத்தாய்
பட்சமா யரிபிரமர் பார்த்துக் களிக்கின்ற
பாவான சிரெழுத்தாய்
தூங்காத நித்தியா னந்தமதில் வாழ்கின்ற
தூயர்புகழ் நான்கெழுத்தாய்ச்
சொல்லரிய நெட்டெழுத் தாகியே யகிலமிசை
தோன்றிவளர் குமரேசனே
வாங்கா ணெனக்கெதிரில் மயிலேரி வந்தெனது
வறுமையது தீர்த்தாளுவாய்
மகனே யுமைக்கினிய குகனே தவத்தர்தொழு
மயில்வாகனக் கடவுளே. (11)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

## [illegible]ராக்ரமப் பதிகம்.

சீருற்றகயிலைபரன் வலவருகவென்றிடச்
சிகையேரி வரவும்வல்லீர்
சிவனரியவொருபிரணவந தன்னையருளெனச்
செவியதனி லோதவல்லீர்
மேருகிரிபோலொற்ற கிரவுஞ்சகிரியதனை
வேலாற் றுளைக்கவல்லீர்
விரிகிரணமீராறு மிராறுகரமதனில்
மேவிற் றரிக்கவல்லீர்
காருற்றகுழல்வள்ளி தன்னையேகானகங்
கண்டுமே மணரவல்லீர்
கதியுனதுபதமென்று திரிகாலமும்நினைவர்
கவலையதை நீக்கவல்லீர்

ஆருற்றவுமைநேச னருமையுருசேயனே
அடிமைவினை தீர்ப்பதெளிதோ
அரியதவர்பரிவுபுரி அகிலமகிதலகெவுரி
அறுமாமுகக் கடவுளே. (1)

அண்டங்களத்தனையு மரைநொடியிலாகவும்
அன்பாயளிக்க வல்லீர்
அசுரசுரபேதமெனு மத்தனையுமடிவயறில்
அடைவாயிருத்த வல்லீர்
கண்டர்களெனுந்துஷ்ட சூராதிசூரரை
கருதியே கொல்லவல்லீர்
காரணப்பொருளான மெய்த்தெய்வமேயெனைக்
காத்திரட்சிக்க வல்லீர்
எண்டிசையுமண்டலமு மெப்பொழுதுமாறு
திருந்துவிளையாட வல்லீர்
இகபரத்தோர்க ளனுதினமேசிரந்துபணி
இயல்வது கொள்ளவல்லீர்
தொண்டனுமடியனுறு தொந்திரவுதீர்த்திடச்
சுந்தரா மிக்கவெளிதோ
சுகராஜவரராஜ சிவராஜயோகனே
சுப்பிரமண்யக் கடவுளே (2)

கானகத்தடருமொரு கரிவேங்கையாளியுங்
காணுதடக்க வல்லீர்
கார்முகிலெனக்கருணை பாவலர்கள்பெற்றிடக்
கனமாரி பெய்யவல்லீர்
வானவரிடுக்கமது திரணமெனவெண்ணுது
வாள்வைக் கொடுக்கவல்லீர்
வையமிசைசூழாழி தன்னையேமேடாக
மண்மாரி பெய்யவல்லீர்
மோனமுதடங்காத விமயமலையிருடிக்கு
முத்திநெறி யோதவல்லீர்
மோட்சசாம்பிராச்சியமெனு நால்வீடுவேண்டுவோர்
முன்னே நடக்கவல்லீர்
வேனமதெனுந்தோழி கட்டளகிபங்கனே
வீணன்வினை தீர்ப்பதெளிதோ

வேதாபரத்திலகு நாதாமயூரமலே
வேலாயுதக் கடவுளே. (3)

காமக்கருங்கடலில் மூள்குவோர்தன்னையே
கறையேற்றி விடவும்வல்லீர்
கருணைநிதிபாதமணைந்த நாடாதகாமுகர்
கருத்தைத் திருப்பவல்லீர்
தேமச்செருக்களகி தெய்வானையம்மையைத்
தேடியே கொள்ளவல்லீர்
சிவசிவாகுருபரா வெனவோதுமடியவர்க
டுவினையை நீக்கவல்லீர்
யேமக்கடுங்கால ரென்னெதிரில்வாராது
யெதிர்வந்து நிற்கவல்லீர்
எப்போதமுன்னடியை மரவாதவேழைக்கி
இருநிதி யளிக்கவல்லீர்
வாமத்திலங்குதிரு மாயூரனேயடிமை
வாய்வுவலி தீர்ப்பதெளிதோ
வருகவெதிர்வருகவெதிர் தருகவுன்சேவடியை
வையாபுரிக் கடவுளே. (4)

நீயேதனிப்பரம மென்றுருகுமாதவர்கள்
நேர்வந்து நிற்கவல்லீர்
நிலையாதபொய்வாள் வெறுங்கருவிதன்னையே
நீறுய்த் தகிக்கவல்லீர்
தாயேயென்னைப்பெற்ற தந்தையேயென்பவர்கள்
தன்வினை யழிக்கவல்லீர்
சம்சாரசாகரம் வேண்டாமெனப்புகத்
தனிவீ டளிக்கவல்லீர்
பேயேபிடித்தென்னை யாட்டாதமந்திரம்
பேதியா தோதவல்லீர்
பிரியமாய்வேண்டுமொரு பொருளினைமறுக்காது
பிள்ளைக் களிக்கவல்லீர்
காயேகனிந்தநற் கனியேதயங்குமொரு
கசடன்வினை தீர்ப்பதெளிதோ
கயிலாசவாசநட ராசகுருராசனே
கந்தசாமிக் கடவுளே, (5)

தேவாதிதேவர்கள் தயங்கவேசூரனைத்
தேகவது மாற்றவல்லீர்
செந்தூரில்வந்திருந் தேவீரவாகுவைத்
தீவுக்கனுப்ப வல்லீர்
மூவாதிமூவரொடு முனிவர்கள் துதிக்கவே
முன்னே யிருக்கவல்லீர்
முச்சுடரினொளியா யிலங்கியேமேலான
மோட்சம தளிக்கவல்லீர்
பாவாதிபாவாணர் களிகூர்ந்துரைக்கின்ற
பாமாலை யேற்கவல்லீர்
பகரரியநான்மறைகள் தேடரியதானபத
பரமா யிருக்கவல்லீர்
மேவாதுவாதனைகள் நோவாதுயென்னகம்
வீற்றிருந்தாள்வதெளிதோ
வித்தகர்கள்நித்தமு மகத்தினிலேவைக்கின்ற
வேலாயுதக் கடவுளே. (6)

அண்டவெளியெங்குமா யணுவுக்குளணுவுமாய்
அரசா யிருக்கவல்லீர்
ஆருமரியாதபடி நீர்நிலையுமெங்குமாய்
அசையா திருக்கவல்லீர்
தொண்டகளுறுங்கவலை தன்னையேகாற்றாய்த்
துறத்தியே யோட்டவல்லீர்
சூழ்புவியில்யெழுவகைத் தோற்றங்களெங்கணுஞ்
சூழ்ந்தே யிருக்கவல்லீர்
தண்டகாரண்யர்தவர் யோகர்முனிவோர்களுந்
தானே துதிக்கவல்லீர்
சகலகாரணகர்த்த ருகவேயெங்கணுந்
தானே விளங்கவல்லீர்
விண்டுவுறுநாதனே வேதர்துதிபாதனே
வினைதீர்ப்பதென்னவெளிதோ
விகசிதகலாபமயில் மீதில்வருருசனே
வேலாயுதக் கடவுளே. (7

சுத்தசுகவாரியே தொல்புவிகணெங்கணுந்
தோற்றமாய் நிற்கவல்லீர்

சுருதிமறைதனையோது மரியமறைவேதியர்
துதித்துப் பணிக்கவல்லீர்
கத்தவ்யலங்கார முகவதனதேஜசாய்
காட்சிய தளிக்கவல்லீர்
கருணுகரப்பழம் பொருளேஅநாதியே
காற்றுய்த் தரிக்கவல்லீர்
யெத்திசையுமெத்தலமு மெப்புவியுமேகமாய்
இறையா யிருக்கவல்லீர்
யெவ்விதியுமெவ்வழியு மெவ்வுருவுமாகவே
இணையா யிருக்கவல்லீர்
மத்தகஜனுக்கிளைய வள்ளிமணவாளனே
வாதையது தீர்ப்பதெளிதோ
மகுடீசசுகராச கிரிராஜராஜனே
மயில்வாகனக் கடவுளே. (8)

திங்களணிவேணியன் சேயாய்ப்பிரந்தமே
தேரோடி வரவும்வல்லீர்
திக்குத்திகந்தமும் முக்கணனுமென்னச்
சிரித்துவிளை யாடவல்லீர்
மங்களமதாகவே மயூரகிரியதனிலே
மாப்பிள்ளை யாகவல்லீர்
மகராஜனென்றுமே ஒருகுறைவுமில்லாத
மாட்சிமை பொருந்தவல்லீர்
அங்காளியபிராமி சிவகாமிகாமாட்சி
அரியசுத னுகவல்லீர்
அனவரதமுனதடியை நினைவதனில்வைக்கின்ற
அடியன்வினை தீர்க்கவல்லீர்
கொங்கைகளடர்ந்திலகு குயில்மருவுமார்பனே
குறைதீர்ப்ப தென்னவெளிதோ
குகனேபரப்பிர்ம சுகனேமகத்தரும்
குருவே யகத்திறைவனே. (9)

உன்னருளையன்றியான் னின்னபொருபொருளினை
யுறுதியாய்க் கொண்டதுண்டோ
உறுதியதிலாதவோர் பொய்த்தெய்வமதுதனை
யுள்ளதே துதித்ததுண்டோ

நின்னடிதனக்கான வாளடிமையென்றவோர்
நெறியதனை விட்டதுண்டோ
நித்தியமுமுனது திரு பாதாரவிந்தமது
நினையாதிருந்த துண்டோ
மன்னுதிருமூலனே வள்ளிமணவாளா
மறந்தே யிருந்ததுண்டோ
வஞ்சகப்புலநெஞ்ச னஞ்சலெனவாடுறேன்
வாதையது தீர்த்தாளுவாய்
கன்னல்மொழியுமையம்மை தன்னகமிருப்பவா
கதிர்வேல் தரித்தகரனே
கங்கைமகிளங்கையா தங்கமொளிசெங்கையா
கருணாகரக் கடவுளே. (10)

பேருலகில் அறிவற்ற பேதைநான்பாதகம்
பேணிப் புரிந்தபாவி
பிறர்பொருளை நம்மதெனநத்தியேபொய்யான
பேராசை கொண்டபாவி
காருற்றகுழல்வதன மாதர்மயல்தன்னிலே
கட்டுண் டுழன்றபாவி
காசாசைகொண்டுமே நாய்போலெனேரமுங்
காற்றாய் திரிந்தபாவி
சீருற்றமயூரமலை யிலகுமொருதெய்வமது
தேடா தலைந்தபாவி
சிவசிவாவென்கின்ற மாதவர்கள்கோஷ்டியைச்
சீறிக் கடுத்தபாவி
யேருற்றவெள்ளிமயில் வாகனுயேழைபிழை
யெல்லாம் பொறுத்தாளுவாய்
எள்ளுக்குளெண்ணெயென வெங்குநிறைசோதியே
யெழில்மாமயிற் கடவுளே. (11)

முற்றிற்று.





உ

வேலுமயிலுந்துணை.

# ஆண்டருளென வேண்டுதல்.



உய்யும்வழி யெனக்குரைப்பாய் ஓங்காரப்பிரணவமே உன்னை யல்லாற், செய்யும்வகைநானறியேன் சிதம்பரத்தின் தனிப்பொருளின் சேயெழுத்தர், மெய்யணியுந்திருநீற்றி லனிலக்கானவித்தக னெனவே தாயிரார், கையுடையமெய்ப்பொருளே கருத்தினை நீ விரித்துரைப் பாய் கருணைப்பேரே. (1)

கருணைவாரிதியான கற்பகமே கற்பகத்தி னிழலேகங்குல், அருணையாமதையொழிக்க அழலுருவாய் அன்றமர்ந்த அரனார் மைந்தா, தருணமிதுநான்மெலிந்தேன் தளராதேயென்றணைத்துத் தனித் துக்கூட்டி, அருணகிரி தனக்களித்த அருள்வாக்கை யெனக்களிப் பா யமரர்வேந்தே. (2)

வேந்தனே மேலான விண்ணவர்கள் நாடுகின்ற வித்தஞான, சாந்தனேநெறியுண்டய சர்ச்சனர்களிருதயத்திற் றனித்துவாழும், பாந் தனே பக்குவத்தி லெனையழைத்துப் பான்மைநெறி பகரவேண்டித், தாந்தனே தமியனிடர் தீர்த்துனது தாழடியைத் தருகுவாயே. (3)

மெய்யெலாம் பச்சைமாற்றுள்ள திருமேனியாய் விளங்கு முந்தன், கையெலாம் ஒளிதிகளும் ரெத்தினமா மேழையென்மேல்க் கருணையானல்ச், செய்யலாம் ஒருதவி செய்ததினால்க் குறையுண்டோ செந்தில்வாள்வில், உய்பலாம் யெனநினைத்தேன் உன்கருத்தைப் பே தையெனக் குரைத்திடாயே. (4)

அந்தரமாம் புவிமுதலாய் அறுமுகத்தோன் ஒருவனென வடி யார்போற்றும், மந்திரமாம் பிரணவத்தின் வடிவான மணிமன்றில் மவுனயோக, சுந்தரமாம்சுயரூபா சுத்தநிலையெனக்குரைத்துத் துயர் கள்தீரத், தந்திரமாய் ஒருமாற்கம் சாற்றுவாய் சண்முகனே தயங்கி னேனே. (5)

பட்டதெலாம் போதுமினிப் பாருலகின்மாயமெனைப் பற்றிடாமல், நட்டதெலாம் வேரறுத்து நாதாந்தப் பேரொளியே நவின்ற ஞானந், தொட்டதெலாந் துலங்கவொரு சூட்சுமத்தை யெனக்குரைத்துத்துன்பந்தீராய், சுட்டதெலாங்கோத்தணியுஞ்சுடரொளியினிமை நடுவிற் றோற்றும்வேலா, (6)

துட்டநெடுமாமாயைசூழ்ந்துமே வலித்திழுத்துச்சுற்றிக்கட்டிப், பெட்டகத்தி லெனையடைத்துப் பேசிடாதிருத்திவிடிற் பேதையந்தக், கட்டதனைத்தரிப்பதற்குக்கருணைநிதி யுன்னையல்லால்கதியைக்காணேன், இட்டமுடனெனையழைத்து இருக்கிவைத்த கட்டதனை யிளக்குவாயே. (7)

உள்ளமதுநைந்துருகி யுனையடைந்தே உள்ளபடி உறுதிசொன்னேன், கள்ளமதுயென்கருத்தில்க் கனவிலுமில்லையய்யா கந்தவேளே, தெள்ளமுத மெனக்களித்துத் திருநீற்றின் மகிமைதனை தெரியக்காட்டி, வள்ளலுந்தன் திருவடியை மனதினிலே பூணுதற்கு வலிமைதானும். (8)

தாராயோஉன்கிருபை தனித்திருந்தோ ரிடத்தேநான் தயங்கிடாமல்க், காராயோநெரியழிக்குங் கைவல்யப்பாலூட்டி கசடனென்பால், வாராயோவேலெடுத்து வஞ்சனையென் நெஞ்சகத்தே மடிந்துமாளப், பாராயோயேழைமுகம் பன்னிருகண்ணொளியாலே பழநிவேலா. (9)

யேத்தனைநான் கொடியவினைசெய்தாலும் யென்பேரில் யெதிர்த்திடாமல், பத்தனெனவாக்களித்துப் பரஞ்சோதிசுயரூபம் பரப்பிக்காட்டி, அத்துவிதவழியிதென அருகிருத்திஅரியாமை அரியும்வண்ணம், சித்தமதுவைத்தென்மேல்ச் சிவரூபா திருவாக்கால்த் தெரிவிப்பாயே (10)

---

இதுவுமது,

வானவற்கரசே மறைமுதற்கடவுள் வழிபடுங்கருணை வாரிதியே
மோனவர்க்குரிய முத்திசாதனத்தின் முதல்வனே மூதரிவழிந்த
தானவற்கரசே சமர்தனிற்ஜெயித்த சண்முகா தருமலர்கமழுங்
கானகக்குயிலைக்சடிமணம்புணர்ந்த கர்த்தனேயாண்டருளெனையே.(1)

மாசிலாமணியே மரகதச்சுடரே வளர்மதிக்கிரணமா முகத்துத்
தேசிகாவுனது திருவடியதனைத் தினமுமென் னகத்தினிற்பதித்துப்
பூசியேயுனது தூயவெண்ணீறைப் புல்லரிவதனை யான்றுடைத்து
வாசியால்மூலவழி தனிற்செலவே வரமளித்தாண் டருளெனையே. (2)

களித்தமுக்கனியைக் கரும்பினைத்தேனைக் கபிலையின்பால்தனைக் கலந்தே, இனித்தசற்கரையைக் கற்கண்டின்பொடியை இளம்பருப்பதனையும் சேர்த்தே, தனித்தநெய்யுடனே தெங்கின்பால்சேர்த்து தனிச்சுவையதனினு மினிக்கும், நனிப்பெரும்பழமே நாயகாமயிலை நடத்திவந்தாண்டருளெனையே. (3)

பொன்னகர்க்கிறைவன் புண்ணியாவெனது புதல்வியைத் திருமணம்புனைந்தே, யென்னகத்தரிய மருகனுக்கென வியம்பியேயடிதனிலிறைஞ்ச, தன்னகத்தினிய மனையளாயவளைத் தமதிடப்புரந்தனிலிருத்தும், பன்னகாபரணன் பரவியகுகனே பட்சம்வைத்தாண்டருளெனையே. (4)

கொம்பினிற்பரவுங் குயிற்குழாங்காற்றால் கொம்பொடிந் தலருமாபோல, வெம்பியேயடியேன் மெலிந்துழன்றுழன்று வேறொராதரமிலாதனையே, நம்பியேயுனது நன்மலர்ப்பதத்தி னுதனை முறையமிட்டேன், அம்பிகாபதியின் றவப்பெருங்கனியே ஆதரித்தாண்டருளெனையே. (5)

ஆதியாய் நடுவாயந்தமாயெங்கு மருவமாய் முருவமாயிலகுஞ், சோதியாய்வெளியாய்த் தூயமாமணியாய்த் துப்புரச்சிவந்தபேரொளியாய், வீதியாய்ஞான விளக்குமாய்ாவுமா மேவியேவாழ்கின்ற குகனே, பேதியாதுனையே சந்ததந்தொழுவே பெற்றிதந்தாண்டருளெனையே. (6)

சிட்டனேபறையின் செல்வனேயடியர் தீமைதீர் சிறுவனேகொடிய, துட்டருகியசூரேந்ரந்தனைத்துடைத்த தூயனேயடியனைச் சூழ்ந்த, கட்டமியாவையுமே காற்றினிற்பரத்தி கருணைமாமழைதனைப் பொழிந்து, இட்டமாயிந்தநாளிலேசித்தம் இரங்கிவந்தாண்டருளெனையே. (7)

கற்றையஞ்சடையன் கண்ணினிற்செனித்த கடவுளேகடையினேன்மருண்டு, இற்றைநாள்வரையி லரிவிலாதழிந்து யேங்கியே கெ

தியிலாதுனையே, பற்றினேன்கொடிய பாவியானெந்தன் பவமருத் தருள்தனைத்தேக்கி, முற்றுமேயடியேன் பரகெதிபெரவே முத்திதந் தாண்டருளெனையே. (8)

முத்தனேமுதல்வா மும்மையாயடியர் முன்வருங்குருபராமுதிர்ந்த, சித்தனேதேவர் தேவனேயோக தீனனேதெரிவைமார்மருவும், நித்தனேலோக நீதனேஞான னெரியனேநெறியிலேனுனையே, யத்தனேயடியே னஞ்சலென்றுரைத்தே னுதரித்தாண்டருளெனையே. (9)

பூவினுற்றொடையல் தொடுத்துனக்கணியில் பூவதுவாடிடு மெனவே, பாவினுல்மாலே பாடியேயணிந்து பணிந்துனைப்போற்றினேன் பரனே, தேவிமாரிருவர் சூழவேமயிலில்த் திருவடிபூன்றியே யேறித், தாவியேசதங்கையார்க்குமுன்பதத்தைத் தந்துநீயாண்டருளெனையே.



இதுவுமது

கூற்றுவன்பாசமெதிர்வரக்கண்டு குலையதுதுடி துடித்திடுநாள், மாற்றுவருளரோ மருந்துனையல்லால் மரகதமணிவிளக் கொளியே, நோற்றலைத்தவிர்த்த கொடியனேன்றனக்கு நும்பதிஅளித்தருள்சுரந்து, ஆற்றலைத்தவிர்த்தாட் கொண்டிடவருவாய் அறுமுகமான தேசிகனே. (1)

பிரர்பொருள்பரித்துவைத்திடு மிருப்புப்பெட்டியை நிலையெனமதித்துச், சரமெனுமனங்கன் கணையினுல்மெலிந்து தையலர்சதமெனவிழைந்து, துரவினிற் றணிய வழிதனையறியாத் துர்க்குணமதுதனைத்தவிர்த்து, அரவணிசுதவாட் கொண்டிடவருவா யறுமுகமான தேசிகனே. (2)

நீரினிற்குமிழி மின்னெனவழிந்து நிலையிலாதெங்கணும்பரவிச், சேரிடமிதுவென் றறிந்திடாதலைந்து தீயரைச் சேர்க்கின்ற பொருளைக், கோரியே யடியன் கொடுமைகள்புரிந்து குருடனுயிதுவரை யுழன்றேன், ஆரிலார்க்குகவாட் கொண்டிடவருவாய் அறுமுகமான தேசிகனே. (3)

மின்னினைப்பழிக்கு மேனியுய்வானின் மேகத்தைப்பழிசெயுங் கூந்தல், பொன்னினைப்பழிக்குங் காந்தியோராய பூவைமார்மயல்த

னில்ப்படிந்து, நன்னினைவனைத்தும் நாடிடாதகன்று காதனேமனமிக மெலிந்தேன், அன்னினைப்புருத்தாட் கொண்டிடவருவா யறுமுக மான தேசிகனே. (4)

இன்னிலத்தினை யாண்டவ ரெவர்களு மீசனேகைக்கொளா திர ந்தா, ரென்னினைப்பினிற் சதமெனநினைந்தே யேங்கியான்மனமிகமெ லிந்தேன், நன்னினைப்பதைப் பரிவுடனிரங்கி நாதனேஎனக்கருள்புரி ந்தி, அன்னையப்பவாட்கொண்டிடவருவாய் அறுமுகமானதேசிகனே,

பொய்யினைச்சுமந்த புலையனேனெனது புந்தியிலறிவிலா தழிந்து
மெய்யினைப்பகரப் பலரெனையடுத்து வேண்டினுமபகரிலேன்றனது
கையினைவலியக் குட்டையில்நுழைத்த காளையரெனமிகக் கலங்கும்
அய்யனேயெனையாட்கொண்டிடவருவா யறுமுகமானதேசிகனே. (6)

கோல்லுவே னுயிரைக் கொன்றுமே நிணத்தைக் கொணர்ந்து மென் மனமதுகளிக்கப், புல்லுவேன்மதுவைப் பொருந்துவேனருந்த பொதுவுளாரதை மருத்திடிலோ, சொல்லுவேனிதை மனமிகக் கடுத்துத் தூருவேன் துதிசெயேனெனையவ், வல்லலையருத்தாட்கொண் டிடவருவா யறுமுகமான தேசிகனே. (7)

தேடிடாதுனையே தீயனேன்கெருவித் திரமிலாமனமதுதனிலே
நாடிடாதழன்று நாயெனத்திரிந்து நானெனுமகந்தையானிதமும்
பாடிடாதுனது புகழ்தனைமறந்து பற்றினேனித்ததிமயிலில்
ஆடியேயெனையாட் கொண்டிடவருவா யறுமுகமானதேசிகனே. (8)

தேனுலாவியமலர்க்கடம்பணிந்த சேவகாவசுரரைச்சயித்து
மீனுலாவியகண்ணினளாய மெல்லியாள்தனை மணம்புரிந்து
கானுலாவியகுரத்தியைக்கருதியே யணைந்தவாயெனை நீ
ஆனுலாவியாட்கொண்டிடவருவா யறுமுகமானதேசிகனே. (9)

சரவணத்தமருங்காங்கேயாவருவர் தனமதையருந்தியேவளர்ந்து
பரவசத்தனுய்ப்பாலனுயுலகிற் பற்றியேகோயில்கொண்டருளுங்
குரவர்சுற்றனேகுமரனேமுருக குருபராவறுமுகாகுகனே
அரகராவெனையாட்கொண்டிடவருவா யறுமுகமானதேசிகனே. (10)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

# மாதப்பதிகம்.

சித்தியைப்பெற்றுச் சிவானந்தமென்னுந் திரமரிந்து
பத்தியும்பெற்றுப் பதமேவிமுத்திப் பலனடைந்து
நித்தியந்தன்னில் நிரைந்திடுஞ்சோதி நெரியிலுர
சித்திரைமாதம்வருவாய் சிகிமலைச் சேவகனே. (1)

மைகாரெனச்செரிகூந்தலிற் புட்பமதைமுடித்துக்
கைகாலையாட்டிக் கடைக்கண்ணைவீசிக் கனதனத்தில்
வைகாசெனச்சொலும் மங்கையர்காதல் மறுப்பதற்கு
வைகாசிமாதம்வருவாய் சிகிமலைமாணிக்கமே. (2)

வானிலையாதிப்புனல்வாரி யோடுமதியிரவி
மேனிலையாவுநினைத்துப் புரந்திடுவேலவநின்
பானிலையானமதிதனை நெஞ்சினிற்பற்றுதற்கு
ஆனிநன்மாதம்வருவாய் சிகிமலையாண்டவனே. (3)

வாடிப்பதந்தருமார்க்க முறுதுமதிமயங்கித்
தேடிப்பலதிசைசென்றுசென்றே யெங்குந்திரிந்தலைந்தேன்
நாடித்திரிந்திடுஞானத்தை நேரில்நவில்வதற்கு
ஆடிக்கெழுந்துவருவாய் சிகிமலையாண்டவனே. (4)

பூவணியானதைச்சாற்றிடில் வாடும்புதுமையுள்ள
பாவணியென்பதைச்சூடியுன்றேளிலப் பதம்பணிந்தேன்
மாவணிதோணமயிலேரி நல்லவரமளிக்க
ஆவணிமாதம்வருவாய் சிகிமலையாண்டவனே. (5)

துரட்டானபந்தத்தினில் மூழ்கியானிருந்தொல்லுலகிற்
றிரட்டானபாவச்சுமைதனைத் தூக்கித்திரிந்தலைந்தேன்
மிரட்டாதுகாலன் வெருண்டோடச்செய்ய விறைவிலிங்கு
புரட்டாசிமாதம்வருவாய் சிகிமலைப்புண்ணியனே. (6)

பற்பலவாகியசெய்கையை நாடிப்பலதினமும்
கற்பனையான துற்கர்மங்கள் செய்துகருத்தொழிந்தேன்
சிற்பரவுன்றனைச்சேவித்து நானுஞ்செழிப்பதற்கு
அற்பிசிமாதம்வருவாய் சிகிமலையாண்டவனே. (7)

ஆர்த்திடுஞ்சூரைஅயிலைவிட்டேவி அரைட்சணத்தில்
யீர்த்ததைப்பாதிமயிலாக வேரிப்பின்னெஞ்சியதை
தேர்க்கொடியாக்கித் தினம்பணிகொண்டிடுஞ்சேவகனே
கார்த்திகைமாதம்வருவாய் சிகிமலைக்கந்தப்பனே. (8)

ஆர்கலிவாரணத்தான்றந்த யானையைஅன்றுமணந்
தீர்முனியானவன்சொல்லிய தேவியைச்சிந்தையுன்னி
நேர்சென்றுசூட்சியினாற்கொண்ட நின்மலனேயிரங்கி
மார்கழிமாதம்வருவாய் சிகிமலைமாணிக்கமே. (9)

பையரவாறுமதிசூடுமீசன் பரிந்தளித்த
ஐயெனக்காருமுறவில்லை யென்பதறிந்திருப்பாய்
மையென்பயாவையுநீக்கி நன்னிதியில்வைப்பதற்கு
தையென்னும்மாதம்வருவாய் சிகிமலைச்சண்முகனே. (10)

ஊசியிலேரிச்செயுந்தவந் தன்னிலுறுதியுண்டோ
நாசியின்வாயுவைக்கண் டுணர்ந்தாதிநடுவிரிந்து
வாசியைப்பற்றியமுதூறலுண்டு மகிழ்வதற்கு
மாசிநன்மாதம்வருவாய் சிகிமலைமாணிக்கமே. (11)

எங்குநிற்பாயெனவென்னாளு மேங்கியிளைத்துவிட்டேன்
செங்கையில்வேலைப்பிடித் தன்னைமாரொடுசெந்திலனே
இங்குன்னைக்காணமயின்மீதிலேரி யெழுந்தருளி
பங்குனிமாதம்வருவாய் மயூரப்பரம்பரனே. (12)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

# வாரப்பதிகம்.

வாதிக்குமைங்கணைவல்லபமாற்றி யம்மன்மதனை
நீதிக்குடன்படப்பாசப் பிணிப்பைநெகிழ்த்துவிடச்
சோதிக்கொருருவாய்வந்த கந்தநின்றோகையின்மேல்
ஆதித்தவாரம்வருவாய் சிகிமலையாண்டவனே. (1)

பங்கப்படுந்துய பஞ்சினையொத்துப்பரதவித்துச்
சிங்கத்திறைமையிற்சிக்கிடு மாவெனச்சீர்நிறைந்த
மங்கைப்படுவலையுற் றுழலாதுமதிதரவே
திங்கட்கிழமைவருவாய் சிகிமலைச்சேவகனே. (2)

ஔவைக்கெதிரில்வெந்நாவலில நின்றவறுமுகநின்
கவ்வைத்தினந்தொருங்கண்டு சுகானந்தக்காட்சியுறு
முவ்வைப்பெறும்படிநீ யுன்னிமஞ்ஞைதனிலுவந்து
செவ்வாய்க்கிழமைவருவாய் சிகியலைச்சேவகனே. (3)

மதனைப்பழிக்கின்றரூபமுங் கையில்மணியயிலும்
சுதனுக்களிக்குந்திருநீறுங் கொண்டுதொழுதிடுமென்
விதனத்தைமாற்றித் திருவடிதன்னைவிரைந்தளிக்க
புதனுக்கெழுந்துவருவாய் சிகிமலைப்புண்ணியனே. (4)

தயாளக்குணத்தையணியா யணிந்திடுஞ்சண்முகநின்
செயாளுக்கருங்கனியாகிய தேவிதெய்வானையெனுந்
தயாளைத்தடம்புயஞ்சேர்த்து நற்றோகைசுமக்கவிங்கு
வியாழக்கிழமைவருவாய் சிகிமலைவேலவனே. (5)

சுள்ளித்தருவெனநின்றிடுஞ் சூரைத்துளைக்கமைந்த
புள்ளிக்கலபமிசையேறி யென்னிற்புகுந்தவினை
துள்ளித்துலைந்திடநல் வரமீய்ந்துசுகப்படுத்த
வெள்ளிக்கிழமைவருவாய் சிகிமலைவேலவனே. (6)

இனிக்கின்றபுத்தமுதா னதையுண்டங்கிடைநடுவிற்
றொனிக்கின்றதோற்றத்தைக் கேட்டின்பமுற்றுச்சுகமதனி
லினிக்கொள்ளுந்தன்மையுதவி யுன்பாதமுவந்தளிக்கச்
சனிக்கொருபோதுவருவாய் சிகிமலைச்சண்முகனே. (7)



உ

வேலுமயிலுந்துணை.

# போற்றிமடக்குப்பதிகம்.

வருவானைநிதியினைக்கவருவானை யகிலமெலாம்வணங்கியேத்தப்
பெருவானைக்கதிர்மதியார்பெருவானைக்கனிவினொடுபேணிக்காத்துத்
திரிவானைமலைகடொறுந் திரிவானைப்பரவிடுநல்சிலர்க்கின்பந்
தருவானைவனவேங்கைத் தருவானை அனுதினமுஞ்சார்ந்துவாழ்வாம்.

புரத்தானையெரித்தசடைப் புரத்தானையருகிருத்திப் பொருளைச் சொன்ன, வரத்தானை வள்ளிசுயம்வரத்தானைக் கஞ்சமலர்தன்னில் வாழ்நாற், சிரத்தானைச் சாடுமறுசிரத்தானைச் சீரலைவாய்ச் செந்தின் மேவு, பரத்தானை வெருவெளியம்பரத்தானை யனுதினமும் பணிந்து வாழ்வாம். (2)

கனத்தானைச்சிகண்டியின்வாகனத்தானை மாராமற்கவனிப்போர்கள்
மனத்தானையருள்புரியுமனத்தானை யாசிப்போர்வழங்கவீயுந்
தனத்தானைமோட்சசாதனத்தானைப் புலவோர்கடழுவத்தக்க
வனத்தானையுயர்வேதவனத்தானை யனுதினமும்வணங்கிவாழ்வாம், (3)

தலையானைமுடிதிகழுந்தலையானைத் தேனூறுதழுவுங்குன்றை
மலையானையசுரருக்குமலையானை முப்பாழுங்கடந்தமன்று
ணிலையானைக்கொடியரகம்நிலையானைப் பூரணமாய்நிறைந்தயிரார்
கலையானையோதரியகலையானை யனுதினமுங்கருதிவாழ்வாம். (4)

படையானைக்கதிர்முனைவேற் படையானையடியவர்கள்பணிந்துசூழு
மிடையானையொருபோதுமிடையானை விரிபுவனமிதனைக்கார்க்கச்
சடையானைநதியணியுஞ்சடையானைத் தொழுமுனிவனுடுமுள்ளன்
புடையானைமயிலிருவர்புடையானை யனுதினமும்புகழ்ந்து வாழ்வாம்,

மயத்தானைப்பரசைவசமயத்தானைத் திரண்டபெருமலைபோல்வீறும்
புயத்தானைப்பொலிமுகமம்புயத்தானைத் தனையறிந்தபுனிதமாக்கள்
வயத்தானைச்சரிந்தபெருவயத்தானை யடவிதனில்வரவேநாடி
தயத்தானையறுவிழியுதயத்தானை யனுதினமுஞ்சார்ந்துவாழ்வாம். (6)

வாரானைமிடியரெதிர்வாரானைத் தனைவணங்குமனிதர்குன்றப்
பாரானைப்புலையர்முகம்பாரானைப் பத்தியுடன்பரவார்க்கின்பந்

தாரானைக்கமழுமலர்த்தாரானை யுறுதிசெயுந்தகையோர்நெஞ்சம்
பேரானைப்புகலவொணுப் பேரானையனுதினமும்பேணிவாழ்வாம்.(7)

நகத்தானைக்குறுமுனிதனகத்தானைப் பலவளமும்நீடும்பேரே
ரகத்தானைத்துதிசெய்வாரகத்தானை யெண்டிசையோர்நாடுந்தஞ்ச
முகத்தானையிளங்கதிர்போன்முகத்தானை மூவுலகில்முதிர்ந்தசீவர்
மகத்தானையைந்தொழில்நேமகத்தானையநுதினமும்வழுத்திவாழ்வாம்

முடியானைமணிபதித்தமுடியானைக் கருமைநிறமுகிலார்குன்றக்
குடியானையடியர்மனக்குடியானை மாராதுகொடுக்குமன்னக் [சம்
கொடியானைப்பொருசேவற்கொடியானைக் குகனென்றேகுவியாரநெஞ்
படியானையேழேழுபடியானை யனுதினமும்பரவிவாழ்வாம். (9)

மாயானையொருபொழுதுமாயானை யடவிதனில்வருகென்றேதும்
வாயானையமுதமிழிவாயானை யருமறைகள்வணங்கப்பெற்ற [ன்
தூயானையெனக்கினியதூயானைத்தொழுதிறைஞ்சித்துதியாதார்க்கொ
றீயானைவிழியில்வருந்தீயானை யனுதினமுஞ்சேர்ந்துவாழ்வாம். (10)

மயிலானைத்தழுவுதிருமயிலானை யவனியதைவலமாய்வந்த [ஞ்சிற்
வொயிலானைமதிக்கவொணு வொயிலானையொருவனென வுதியார்நெ
பயிலானைமறையின்னம்பயிலானைக் கவிராசர்பாடிப்போற்றும்
அயிலானைச்சூர்கடிந்தவயிலானை யனுதினமும் அடைந்துவாழ்வாம். ()

முற்றிற்று.





உ

வேலுமயிலுந்துணை.

# சரணப் பத்து.



கந்தன்சரணங் கனிவாய்ச்சொலவே
எந்தன்சிரமீ திருவாகளிரே.

கந்தாசரணங் கருணைகரியின்
மைந்தாசரணம் வனநாயகிதன்
சொந்தாசரணஞ் சுருதிச்சுடரின்
வந்தாய்சரணம் வடிவேல்சரணம். (1)

வேலாசரணம் வேணிப்பரமன்
பாலாசரணம் பதமேயருளுஞ்
சீலாசரணஞ் செந்திற்றிகழும்
வாலாசரணம் வடிவேல்சரணம். (2)

அய்யாசரணம் அடியர்க்கருளும்
மெய்யாசரணம் விரியும்பனிறு
கையாசரணம் கடலாடைதிகழ்
வையாசரணம் வடிவேல்சரணம். (3)

குன்றாய்சரணம் குரவர்குடிசிற்
சென்றாய்சரணம் தெரிவைக்கெதிரே
நின்றாய்சரணம் நெரியேபரவும்
மன்றாய்சரணம் வடிவேல்சரணம். (4)

அயிலாய்சரணம் அவனிக்குளுயர்
ஓயிலாய்சரணம் உயரப்பரவும்
ஒயிலாய்சரணம் இருவற்குரிய
மயிலாய்சரணம் வடிவேல்சரணம் (5)

கோவேசரணம் குருமாமுனிதன்
றேவேசரணம் தினமுங்கமழும்
பூவேசரணம் புனிதாமயிலில்
வாவேசரணம் வடிவேல்சரணம். (6)

துறையேசரணம் சூரைத்தடிசெய்
யிறையேசரணம் இமயர்க்கருள்செய்
நிறையேசரணம் நின்னன்பர்புகழ்
மறையேசரணம் வடிவேல்சரணம். (7)

நிலையேசரணம் நிதமேவிவளர்
கலையேசரணம் கடல்சூழுலகின்
றலையேசரணம் சதுர்மாமறைநேர்
மலையேசரணம் வடிவேல்சரணம். (8)

நீராய்சரணம் நினைமுன்னுதவும்
பேராய்சரணம் பெரியோரணியும்
தாராய்சரணம் தையல்மாருடனே
வாராய்சரணம் வடிவேல்சரணம். (9)

நாதாசரணம் நலியும்பிரமன்
வேதாசரணம் விரதர்க்கருளும்
போதாசரணம் புகவென்னகமே
வாதாசரணம் வடிவேல்சரணம். (10)

துங்காசரணம் துடியாமிடையார்,
பங்காசரணம் பழநிக்கிரிவாழ்
பொங்காசரணம் புலவர்க்கணியசம்
வங்காசரணம் வடிவேல்சரணம். (11)

முற்றிற்று.





உ

வேலுமயிலுந்துணை.

# சந்தவருகைப்பதிகம்.



திருமருவிடுமரிமருகாவருகச் சிவகுருபரனெனுமுருகாவருகத்
தினகரனொளியெனுமுகனேவருகத் திரிபுரையருளியமகனேவருக
மருமலர்தனையணிபுயனேவருக வளமிகுசிவகிரியயனேவருக
மணியொளிதிகழ்வுறுமுடியாய்வருகமலைகளிலமர்வுறுகுடியாய்வருகக்
குருமுனிபரவிடுகுகனேவருகக் குணமுடையடியவரகனேவருகக்
குரமகள்மருவிடுகணவாவருகக்குயின்மொழியனையவள்துணைவாவருக
கருணையையுதவிடவிரைவாய்வருகக் கருமுகில்படிசிகிமலையாய்வருக
கணமுடனொளிரிடுகதிர்வேலுடனே கந்தாவருகக்கதியதுதரவே. (1)

ஒருமுதலெனுமொருபொருளேவருக வுலகினையருளியவருளேவருக
உவரியில்வருமொருமணியேவருக வுரகர்கள்முடிபுனையணியேவருக
அருவெனுமுருவெனுமமலாவருக அடியவர்பரவிடுவிமலாவருக
அரிபதியுதவியகுமராவருக அசுரரைவெரிவியசமராவருக
பெருகிடுமதுநதியுடையாய்வருக பெருமதகளிறெனுநடையாய்வருக
பிரணவவொளிவருவடிவேவருக பிரபலமுளமறைமுடிவேவருக
கருணையையுதவிடவிரைவாய்வருகக் கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கந்தாவருகக்கதியதுதரவே. (2)

கவுஞ்சியர்குலம்வருசுதனேவருகக் கடவுளர்பரவிடுபதனேவருக
கஜமுககணபதியிளையாய்வருகக் கனர்கள்பரிவுறுபளையாய்வருக
பவவினையதுபொடிபடவேவருக படிவலம்வருமயிலுடனேவருக
பரிவுடனுனதருள்தரவேவருகப் பதியினையினிவொடுபெரவேவருக
தவமதுபுரிபவர்தனமேவருகத் தரணியிலுயர்வுறுகனமேவருக
தனமெனும்தமதுசெலவேவருகத் தலையினிலொளிரிடுசிலவேவருக
கலரவமுரவிதுதநிரீவருகக் கருமுகில்படிசிகிமலையாய்வருகக்
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கநதாவருகக்கதியதுதரவே. (3)

மடலுறுமதுவிழிமலரேவருக மலரினிலமைவுறுமணமேவருக
மணமதிலுறுமுயர்சுகமேவருக வளமிகுநிழல்தருதருவேவருக
படர்கிளைதருவுறுபழமேவருகப் பழமதிலுறுமினிசுவையேவருக
பலமதுவிழிதருதுடரேவருகப் பனிகளைவழிவருமமுதேவருகத்
திடமிகுமசுரர்களெமனேவருக சிரகிரியிலகுமலமனேவருக
தினமுனதிருவள்தரவேவருகத் திசைபுகழுனதடியுரவேவருக
கடனினிலுலவிடுகலமேவருக கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கநதாவருகக்கதியதுதரவே. (4)

சரவணமதில்வருகுகனேவருகச் சமணரையழிபரைமகனேவருக
சவுனகர்பரவிடுதனியேவருகத் தகரினிலமர்வுறுகனியேவருக
குரவனைவெருவிக்குணமேவருகக் குமரபுரியிலுறுமணமேவருக
குதுகலமுடனெனதெதிரேவருக குவலயமுலவிடுகதிரேவருக
பரவெளியெனுமொருதுரியாவருகப் பஜனையிலினிவுறுபிரியாவருக
பழனியிலமைவுறுதுறையேவருகப் பலமலையதிலுறுமிறையேவருக
கரமிசைவெணிறுடுவிரைவாய்வருகக்கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கநதாவருகக்கதியதுதரவே. (5)

புகையிலாழிவுறுகனலொளியேவருகபொதுவினினடமிடுவனியேவருக
புலமிசைசெலுமொருமுனியேவருகப்புனைவலைவிலைசெயுகனியேவருக
நகைமுகமொருமொழிபுகல்வாய்வருக நதியுதவிடுசிறுமதலாய்வருக
நமன்வருவழியடைபடவேவருக நலமுயர்கதியதுதரவேவருக
பகைவரைவெருவிடுபவனேவருகப் பரகிரியமர்வுறுதவனேவருக
பலதுயரதுபொடிபடவேவருக பரவெளிதனிலெனைவிடவேவருக
ககனமதனினிரைநிலையேவருகக் கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கநதாவருகக்கதியதுதரவே. (6)

சங்கொலிமிகுசலதிதியாய்வருகச் சஞ்சலமதுதவிர்மதியாய்வருக
தண்பரவிடுமரிமலையாய்வருகச் சநததமெனதெதிர்நிலையாய்வருக
புங்கவரடிதொழவிரைவாய்வருகப் புந்தியிலுனதருள்நிரைவாய்வருக
புன்னெறிமலெனவிடவெதிரேவருக பொன்கலனதிலுறுகதிரேவருக
மங்கலமுரசொடுமயின்மேல்வருக வஞ்சியரழகொடுமிருபால்வருக
வந்திடுமடியவருடனேவருக வஞ்சனையறநடமுடனேவருக
கங்குலைவிலகிடுகலையாய்வருகக் கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிர்டுகதிர்வேலுடனே கநதாவருகக்கதியதுதரவே. (7)

பரிபுரமதினொலியெழவேவருக பனிருகரமதொடுதொழவேவருக
பலசமயமதனிலுருவேவருகப் பகரருமறைபுகளருவேவருக
திரிபுரமெரிசிவனருளேவருகச் செகமதையுதவிடுபொருளேவருக
தினமெனதெதிரழகுடனேவருகச் சிரமதினடமிடுனடனேவருகக்
குரியிதுவெனவழிசொலவேவருகக் கொடுமனமதுநிலைபடவேவருக
கொலுவினிலமர்வுரநலமேவருகக் குயிலியையமணமதுதரவேவருக
கரிபரிநிரைவுருபதியாய்வருக கருமுகில்படிசிகிமலையாய்வருக
கனமுடனொளிரிடுகதிர்வேலுடனே கந்தாவருகக்கதியதுதரவே. (8)

வளமுடனறுபடிவளர்வோய்வருக மதிரவியெனுமிருகலையாய்வருக
வளியதுதரிபடுமனையேவருக மனையினிலிலகியவனையேவருக
புளகிதமெழவிதுததியேவருகப் பொதுவினிநடமிடுநிதியேவருக
புகலருமொருமுனைநிலையேவருகப் புகுமொருசுழிமுனைகலையேவருக
அளவிடமிகவரிதுரியாவருக வறுமரைபடுமொடுபெரியாய்வருக
அவனுருமரகதவடிவேவருக வதுலுருமதுநிரைகுடமேவருக
களவமதிலகிடவிரைவாய்வருக கருமுகில்படிசிகிமலையாய்வருக
கணமுடனொளிரிடுகதிர்வேலுடனே கந்தாவருகக்கதியதுதரவே. (9)

கோடுவிடமதைநிகரிடுமொழிமடவார் குலவிடவவரினதரமதுபருகி
குவிதனமதுகரமதுகொடுநெருடி குயிலெனமயிலெனவவரடிவருடி
படுவரவதைநிகரிடுபகமதுவே பதமெனவனுதினமதுகெதிமெனவே
படுவலையுருகலைநிகரெனவடியேன் படுகுழியதுதனின்முழுகிடாதருளி
திடமுளவழியிதுவெனவரமுதவிச் சிரகிரிதனிலுருகுடிலையில்மருவிச்
சிருமயிலெனுமொருமனைவியினதரத் தினிலுறுமமுதினையினிவொடு
கடமதுநிலைபெரவருளதுபுரியகருமுகில்படிசிகிமலையாய்வருக[பருகிக்
கனமுடனொளிகிடுகதிர்வேலுடனே கந்தாவருகக்கதியதுதரவே. (10)

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

# மயூரகிரி

# முருகரனுபூதி.

## காப்பு வேண்பா.

சேந்தூர்வளர்குமரன் சீரதனுபூதியதாய்ச்
சந்தமுரவேயடியன் சாற்றவே-தந்திமுகச்
சிற்பரமாய்வல்வினையின் றீதகற்றியாண்டருளுங்
கற்பகவிநாயகனே காப்பு.

திருவேயருவே செருவேயுருவே
மருவேமலரே மணமேமதுவே
தருவேநிழலே தனமேகனமே
குருவேகுணமே குமராசலனே. (1)

மதியேரவியே மயிலேயயிலே
பதியேபுவியே பணியேயணியே
நிதியேபொருளே நிறைவேயுறவே
விதியேசெயலே விமலாபரனே. (2)

மறையேதனியே வறையேதிறையே
இறையேகனியே இனமேமனமே
பொறையேபுகழே புனையேநினையே
துறையேயுனையே தொழுதேனருளே. (3)

மண்ணேமரமே வளருங்கிளையே
விண்ணேபுனலே வெளியேயொழியே
பெண்ணேயலியே பிரவாணுருவே
கண்ணேஎனையாள் கருணாகரனே. (4)

சிந்தாகுலமானவை தீர்த்திடவே
வந்தாள்முருகா வடிவேலொடுநீ
எந்தாய்மறை தேடுமிளங்கனியே
கந்தாகுமரா கதிர்வேலவனே. (5)

பிரமன்றனைமெய்ப் பொருளோதுகெனத்
தரமன்றெனவே தளைசெய்தவனே
அரமன்றிதுவென் றரனும்புகலச்
சிரமின்றெடெனச் செயும்வேலவனே. (6)

அய்ந்தாறுடனென் றறுமாமுகனே
மைந்தாவுமையாள் மகிழுந்தவமே
பைந்தாரணியும் பகவன்மருகா
நைந்தாகுலமா கிலனாயகனே. (7)

பட்டேன்வெகுபாடுகள் பட்டுமிகக்
கெட்டேன்வருகேவலம்யாவையுமே
விட்டேனினிவே றிலையென்றுனையே
தொட்டேனெதிர் தோன்றவெழுந்தருளே. (8)

அத்தாபழனிக் கதிபாயெனையாள்
முத்தாபடியின் முனிவின்றவரின்
வித்தாரமதான மெய்வேசமதை
நத்தாதுனைநா னவிலப்பணியே. (9)

கங்காளனருள் கதிர்மாமணியே
மங்காதெனைநீ மகிழ்வித்தருள்வாய்
சிங்காரவலங் க்ருதசேவலனே
நங்காய்வனநாயகி நாயகனே. (10)

தேடும்பொருள் தேவர்கள்மூவர்களும்
நாடும்பொருள் நாவலர்பாவலர்கள்
பாடும்பொருள் பாரினிலெத்திரமும்
கூடும்பொருளாகிய கொற்றவனே. (11)

முன்னேமறையின் முடிவேதிகழும்
பொன்னேமணியே பொதுவாயுலகுக்
கன்னேதனையே யறிவேயுனையா
னென்னேரமுமேற்ற வெழுந்தருளே. (12)

சிங்கத்தமர்பார்வதி தேவியின
தங்கத்துறுமார்வரு பாலமுதம்
பொங்கக்கொளுபுன் னகைவாயுடையாய்
வங்கக்கிரியோன் மகிழுஞ்சுதனே. (13)

கோல்லாவிரதங் கொளவேதினமும்
வல்லாயெழியேன் மனதிற்புகுவாய்
நல்லார்தினம் நாடியநாயகனே
சல்லாபமனோகர ஷண்முகனே. (14)

நாதாதிரையங்கையி னக்கியவன்
போதாமிகு பூசுரர்வந்துதொழும்
பாதாதுயர்நீந்து பரக்கவரந்
தாதாபுவியிற் றனிநாயகனே. (15)

ஆனாயுலகுக் கதிமாபதியாய்
வானாய்நிலனாய் வருமாபுனலாய்
ஊனாயுயிராயுடலா யொளியாய்த்
தானாயிலகுந் தனிநாயகனே. (16)

காடாய்மலையாய்க் கரியாய்ப்பரியாய்
வீடாய்நிலையாய் வெளியா யொளியாய்
நாடாய்நடுவாய் நடுநின்றவராய்
ஏடாய்மறையா யிலகும்பரனே. (17)

மாலாயரனாய் மாலின்சுதனாய்
நூலாய்வுணர்வார் நுவலும்பொருளாய்ப்
பாலாய்நுரையாய்ப் பரவும்பிறையாய்க்
காலாயமருங் கருணாகரனே. (18)

ஒன்றாய்ப்பலவா யுளதாயிலதாய்
நன்றாய்க்கொடிதாய் நவிலப்பலரும்
பொன்றாய்ப்பொருளாய்ப் புகழாய்த்திகழாய்
குன்றாக்குடிவாழ் குமராபரனே. (19)

காராய்க்கருவாய்க் கருவின்றுடரின்
றூராய்ப்படிமேற் சலமாய்ச்சலமூர்
ஆராய்க்கிருமிதாய் அதின்வாழ்வனவாய்ச்
சீராய்ப்பொலியுஞ் செகதீஸ்வரனே. (20)

முத்தாய்மணியாய் முதிரும்பவழக்
கொத்தாய்வயிரக் குழுவின்னொளியாய்
வித்தாய்மரமாய் விரியுங்கொடியாய்
சித்தாயிலகுஞ் சிவஷண்முகனே. (21)

வண்டேனுகரும் மலரின்மதுவே
கண்டேபலவின் கனியேகழையின்
துண்டேகதலிச் சுளையின்சுவையே
பண்டேரிலகும் பழனிக்குருவே. (22)

அஞ்சொன்றுடனா லதுவாயதின்மேல்
அஞ்சொன்றுடனா லதுவாய்மருநால்
அஞ்சொன்றுடனா லதுவாயதின்மேல்
அஞ்சொன்றுடனா யமரும்பரனே. (23)

பஞ்சந்திரிமற் றொருபஞ்சமிரு
பஞ்சஞ்சதுர்பஞ்ச மொர்பஞ்சதிரி
பஞ்சந்துவமாகினை பற்றுசதுர்
பஞ்சம்மெனவென் றபரம்பரனே. (24)

முறைநாலுமதாகி வழிப்படியே
இறையோன்முதலை வருமைந்தொழிலைக்
குறையாதுநடத்திய கொள்கையுமாய்
முறையேபுரியும் முருகாகுகனே. (25)

ஆறாகியசாத் திரமாகியுமற்
றீராறுடனாறு புராணமதாய்
ஏறுகலையெட்டுட னெட்டுபொரு
வாறாயிலகு வடிவேலவனே. (26)

எட்டெட்டுடனென் கிறகோணமதாய்
எட்டென்பனதிக்குக ளெங்கணுமாய்
எட்டென்பனவட் சரமேகமதாய்
எட்டென்கிறவட்சர வேரகனே. (27)

நயநாயகராகிய நாதனுமாய்ப்
பவமேகுறுபான்மை படைத்தவனாய்த்
தவமேவியசற்சனர் தாணுவுமாய்
சிவமேவியசற்குண செந்திலனே. (28)

அண்டத்துறுமந் தரமண்டலமாய்
அண்டர்க்கொருவன் புளநாயகனாய்
அண்டத்தினுமப்புற மப்புரமாய்
அண்டத்துறுமாவியு மானவனே. (29)

பொங்காரரவும் புனலும்பிறையும்
கொங்கார்மலரும் கொன்றைத்தொடையும்
அங்கார்அருகும் அணியும்பறையான்
பங்காரருளும் பழனிக்குமரா. (30)

மரியும்மழுவும் மன்னுந்துடியும்
கரியின்னுரியும் கடுவார்மிடறும்
வரியின்னதழும் வகையாயணியும்
அரியின்பெரியான் அருள்மாமணியே. (31)

கல்லாலடியிற் கனயோகமுறப்
பொல்லாமதவேள் பூவின்கணையைச்
சல்லாபமதாய்ச் சாடப்பொடிசெய்
வில்லாம்விழியோன் வேண்டுங்குருவே. (32)

தில்லைப்பதியிற் றிருமால்பிரமன்
எல்லைப்பொருளே எமையாட்கொளவே
தொல்லைப்பழநோய் தொலையென்றவரின்
சொல்லைப்பருகுந் தூயோன்சுதனே. (33)

ஆங்காரமதா யயனுந்திருவும்
பாங்காயவரின் பலமுந்தெரியப்
பூங்கரலடிபொன் முடிதேடுமெனக்
கோங்காகியவன் குருமாமணியே. (34)

இமையாசலமீ தெழுந்துலகந்
தமையேயருள் தாயவளாகியநல்
லுமையாளுருவா கியவுத்தமனே
கமையேயெனையாள் கதிர்மாமணியே. (35)

கனமாகியகார்த் திகைமாரறுவர்
தனமூரியபால் தனையுண்டுபசும்
புனல்மேல்வளர் புண்ணியவுன்னடியார்
மனமேவியவாழ் மயில்வாகனனே. (36)

நந்தாயுமைநாடியே ஞானமுகந்
தந்தாளவள் சற்குணசீலனேசம்
பந்தாவெகுபண்ணொடு பாமொழியும்
கொந்தார்மலர்சூடிய கொற்றவனே. (37)

மதுரைப்பதிமேவிய மன்னவனின்
சதிரைத்தவிர் சர்க்குணஷண்முகனே
கதிரைப்புடை கர்ப்பகமோங்கிவளர்
கதிரைக்கிரிமேவிய கண்மணியே. (38)

கந்திக்குலையூரியகள் பெருகிச்
சிந்தித்தெருமேவிய செந்துகளைப்
பந்திப்பொடுசென்று படிந்துவருஞ்
செந்திற்பதிமேவிய சேவகனே. (39)

தெங்குக்குலைமீறிய தேன்வழியப்
பங்கப்படுமா பழனந்தனிலேர்
சங்குக்குழுவூரியே சாடிவருந்
துங்கப்பழனித் துறைவேலவனே. (40)

வீசுங்கொடிமல்லிகை மேன்மலரின்
நேசம்பெரவண்டுகள் நின்றுமுனி
கூசும்படியூதிய கோட்டியொரு
தேசும்பெருதென்கிரி வாசகனே. (41)

காலித்திரள்செல்கிற கால்வழியே
யாலித்துடராரெனவே பெருகிச்
சாலிக்கதிர்மேவிய தடியமரும்
பிலிக்கிரிமேவிய பெற்றயனே. (42)

கருமேகமதாகிய கால்வழியின்
வருமாபுனல்யாவையும் வைத்துளதோர்
பெருவாரிதிகிரியே பேரலையோர்
திருமாமதில்சூழ் வுறுசெந்திலனே. (43)

பொன்னுலிலைகா யுதிர்பூவுடனே
மின்னூர்பதிமேவிய மென்றருசூழ்
நன்னேர்பொழில் நாடியமானகர்வாழ்
மன்னேமிகுசீரலை வாழ்பவனே. (44)

சோலைக்கிளியா தியசூழ்பரவைக்
கோலத்தொடுகூவிய கோகிலகற்
காலைப்பொழுதுன்னிரு காததனிற்
சீலத்தொனிதோய்வுறு செந்திலனே. (45)

பாரப்புயல்வந்து படிந்தமரக்
கோரக்குரமாதர்கள் கொண்டதனின்
நீரைப்பிழியென்று நெருங்கியம
பூரக்கிரிமேவிய வுத்தமனே. (46)

பொன்னுடவர்பிள்ளைகள் வந்துபொழில்
தன்னூல்மறை தாபரமீதிலமர்ந்
தென்னுளுமிருந் திசையாடல்புரி
நன்னுகமதேரிய நாயகனே. (47)

வித்தியாதரர்தங்கள் கைவீணையொடு
நித்தியாசுகமாகிய நின்புகழைப்
பத்தியாயவர்பாடி மருங்கடையுஞ்
சித்தியாய்வளர் தென்கிரிவாசகனே. (48)

புவியிற்பலமாயை புகன்றிடுவோர்
செவியிற்படியாது கிளர்ச்சியுறக்
குவியப்பலவாறு குணத்தையிறு
செவியிற்புசவுப்த்திடு சேவகனே. (49)

மின்னுக்கிணையொத்திடு மேனியர்பா
லுன்னிக்கலவிக்கு ளுழன்றுதினம
பன்னிச்செலுபாவனம திடைகதடியேன்
முன்னிற்கவெழூதருள் முதனவனே. (50)

சேலுக்கிணை செப்பிடுகூர்விழியார்
மாலிற்றினமுற்று மயங்கலுறு
வேலைக்கரமத்தி லெடுத்துமயில்
காலைக்கொளவந்தருள் காட்டுவையே. (51)

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

# மயூரகிரியந்தாதி.

காப்பு - வெண்பா.

பேரோங்கு குன்றைமலைப் பேரின்பசாகரன்மேற்
சீரோங்கு மந்தாதி செப்பவே - காரோங்கு
மஞ்சுகரத் தெந்தையவ னஞ்சலென்போருக் கருளுங்
கஞ்சமலர்ச் சேவடியே காப்பு.

## கட்டளைக்கலித்துறை.

ஓங்காரவீட்டினுறுமணியே திகழுன்பதத்திற்
பாங்காகவேழைபரிவோடுரைக்கும் பனுவல்கொண்டு
தாங்காதமையல்தருமாதர் பாசந்தவிர்த்துனையா
னீங்காதிருக்கவரந்தருவா யிதுநிச்சயமே. (1)

நிச்சயமாயுனையன்றி யிங்காரெவர்நேசமுற்றே
னிச்சகவாழ்விலிடையா திதுததியின்பமொடு
துற்சனராமசுராதியைவென்ற நின்றுய்யபதஞ்
செச்சையிலங்கவர்தாள்வாய் சிகிமலைச்சிற்பரனே. (2)

சிற்பரமாகியதேவா திருவருள்செய்துவிட்டாற்
றற்பரமேவியொருநாளுஞ் சாவின்றிசார்ந்தினிய
பொற்பதந்தோய்ந்துபுனலாடி யின்பம்புனைந்துசடங்
கற்பமதாகியிருப்பேன் கருணையைக்காட்டுவையே. (3)

காட்டுவைஞானக்கருவூலங்காணக் கனத்தமையல்
பூட்டுவைமோனம்புகுத்துவையாவும் பொதிந்தவிடம்
நாட்டுவையென்றும்நலியாதிருந்து நலம்பெறனைச்
சூட்டுவைவேதந்துதித்திடுந் தூயதுணைப்பதமே. (4)

துணைப்பதமேவிச்சுரராதியோர்கள் துதித்துமறை
யிணைப்பதமேநிதம்நீதருவா யென்றிறைஞ்சிநிற்க
வணைப்பதுநங்கடனுமென வன்றுனருளளித்து
மணைப்பதமேவவெழுந்தருள் சண்முகமாணிக்கமே. (5)

மாணிக்கமென்றுமதிப்படங்காத வைரமென்றுந்
தோணிக்குன்றுருயர்காளிப்பதிதனிற் றேன்றியம்மை
பேணிக்குன்றமுலையூறலுண்டானென்றும் பேசரிய
வேணிப்பிரானன்றுகொண்டாடின னுனைவேலவனே. (6)

வேலவனேமயின்மீதினிலூர்ந்து விரிஞ்சன்முதல்
மாலவனேதொழவீற்றிருப்பாய் குன்றைமாமலையில்
நூலவனேயெனவுன்னடியார்கள் நுவன்றவிருப்
பாலவராசைப்பரிவுங்கைமேலிற் பலித்திட்டதே. (7)

பலித்திடவேண்டிப்பலகலையாய்ந்து பருவமிதிற்
சலித்திருந்தாலினியென்றடியே னுனைச்சார்ந்திடுநாள்
ஒலித்திடும்வீரகண்டாமணிப் பாதமுவந்தளிக்க
வலித்திடவேயிங்கு தாமதிக்காதினிவந்தருளே. (8)

வந்தருள்வாயெனை மாதவனுக்கி மகிழ்ந்துவரந்
தந்தருள்வாய்சிவசற்குருவே யுன்றனயனியா
முந்தகனேடமராடுதல்நீக்கி யவனைவென்று
சிந்ததம்வாழக்கருணைசெய்வா யிதென்சங்கற்பமே. (9)

சங்கற்பமென்பதனேகமுண்டே கொடுங்கையலர்கள்
கொங்கைக்குன்றனதிற்சாராமலு மவர்கொஞ்சுதலாற்
பங்கப்படாமலுமாயாமயக்கினைப் பற்றறுத்துத்
துங்கத்தவத்தினிற்சேர்ந்திடவே யருள்சுந்தரனே. (10)

சுந்தரமேனிச்செழுஞ்சுடரே சுயஞ்சோதியுறு
மந்திரமேயுனையான்மறவேன் வள்ளிமாமயிலுஞ்
சந்தணிகொங்கைமின்னுற் தெய்வயானைதழுவவிங்கு
வந்திடவேண்டுமயிலேறி யித்ததிமன்னவனே. (11)

மன்னவனேமலைமான்மக னேவிணின்வானவர்க்கு
முன்னவனேமுதலானவனே தந்திமுத்தனுக்குப்
பின்னவனேயயில்பெற்றவனே முன்பிரணவத்தைச்
சொன்னவனேயதின்சூக்குமனே யெதிர்தோற்றுவையே. (12)

தோற்றுவைவாசிதுலக்குவை யாதியிற்றெட்டவினை
மாற்றுவைநீதம்வழுத்துவை யேழைமனக்கவலை
யாற்றுவையாசையடக்குவை யாவுமகன்றபின்பு
தேற்றுவையூறல்தெவிட்டுவை யென்றெனைச்சேவலனே. (13)

சேவலந்தோகைமுகிலாட நீலச்சிகியமர்ந்து
பூவலம்போந்துபழப்பெறவேண்டிப் புரமெரித்த
மாவலன்பாற்செலயானைகொண்டா னெனுமாற்றமதாற்
காவலனாகிசசிவகிரிமேவிய கந்தப்பனே. (14)

கந்தப்பனென்றுங்கதிர்வேற்கரனென்றுங் காதல்கொண்டார்
சொந்தப்பனென்றுந்துரியத்திலாடுஞ் சுடரதனின்
வந்தப்பனென்றுஞ்சரவணமாது மனமகிழ்ந்து
தந்தப்பனென்றுமுனதடியார் நிதஞ்சாற்றுவரே. (15)

சாற்றிடும்பாவணிதிண்புயத்தோடுஞ் சண்டன்கதிர்கள்
தோற்றிடும்பாவணிசண்முகத்தோடுந் துலங்குமணி
யேற்றிடுமார்பொடுங்கண்டவர் தாழவெழுந்தடியன்
போற்றிடநீயும்விரைந்துறவேண்டு நற்புண்ணியனே. (16)

புண்ணியமென்பதியாதொருபோதும். புரிந்தரியேன்
பண்ணியபாவங்களெத்தனையோ கொடும்பான்மையதே
யெண்ணியபோகங்கிடைத்திடவே வந்தினிதருள்வாய்
திண்ணியமானக்ரவுஞ்சனைச் சேதித்தசேதனமே. (17)

சேதனமானதுநீடியதாகித் தெளிந்துமுத்தி
சாதனனாகமனமுவந்தேனந்தத் தன்மைபெற
வாதனையாவுமெரிந்திடநீத்து மனதடங்கப்
போதனைசெய்தெனையாள்வாய் சிகிமலைப்புத்தமுதே. (18)

புத்தமுதூறற்புனலிழிபாதை புகுந்ததனை
நித்தமுண்டிருகாலாறவங்கு நிலைத்திருந்து
சித்தமுவந்துபரானந்தமேவித் திகழொளிவைப்
பத்தியிருந்திடவேண்டுமச்சாதகம் பண்ணுவையே. (19)

பண்ணுவந்தோதிடுங்கின்னரர்மாதர்கள் பந்தியதாய்
நண்ணிடும்பூம்பொழில்சேர்ந்திடுந் தோகைநவிரமதிற்
றண்ணுலவுந்தொடையானதுசாற்றித் தவமுனிவோர்
விண்ணுறவோமக்கனல்வளர்த்தோதி விரும்புவரே. (20)

விரும்புவராசைவிலக்கியுன்பாத வெளியடைந்து
பெரும்புகழ்தேடிப்பிழைத்திடவேயவர் பேதமின்றித்
தரும்பதியின்றதனயனென்றேத்தித் தழுவிடுவார்
அரும்பொருளேயுனருள்விளையாட்டி னதிசயமே. (21)

அதிசயமானகதையொன்றுகே ளிந்தவனிமிசை
சதியதனுலனையோனியின்வாசல் தனிலிழிந்து
மதிதடுமாரிவழிதெரியாது மலேந்திறந்து
கதிகெடுமாந்தர்கதிரோனெனவருங் காரணமே. (22)

காரணமானகதியினைக்காணக் கசடறுத்து
பூரணமேவிப்புகவரியாதவர் புன்மதியால்
ஆரணமோதியதுவிதுவாமென் றசங்கைகொண்டு
ஏரணம்பேசிப்பலனடையாம லிறப்பர்களே. (23)

இறப்பர்களாம்விதிதன்னை வெல்லார்களிதையறிந்தோர்
துறப்பர்களாமிந்தத்தொல்லுலகாசை துறந்துதன்னை
மறப்பர்களாமவர்வாய்திரவாது மவுனமுற்றுச்
சிறப்பர்களாமுயர்நற்றவத்தோர்களின் சீலமிதே. (24)

சீலமென்றேதிற்செருக்குறுமாந்தர் சினந்திடுவார்
காலன்வந்தாலவர்கால்கரம்கட்டிக் கண்ணைவிழித்தே
யோலமிட்டேங்கித்தமர்மனைசூழ வுறங்குதல்போற்
காலமதாகியெரிநரகூடு கலங்குவரே. (25)

கலங்கிடவோவுந்தன்பாதாரவிந்தங் கலந்திருந்து
துலங்கிடவோமனஞ்சுத்தமதாகிச் சுழிமுனையி
லிலங்கிடவோவதையென்னிருகாதி லினிதுரைத்து
சலங்கெடவோர்வழிசாற்றிடுவாய் குன்றைச்சற்குணனே. (26)

சற்குணமென்றபொருள்பெரவேண்டிச் சனகன்முதல்
துற்குணந்தன்னைத்துறந்தோர்கள் யாவருஞ்சூட்சியதால்
நிற்குணமாமுன்னிலையதைக்காண நெடிதிருந்து
பற்பலர்தவம்பண்ணியுன்பாலிற் பரவுவரே. (27)

பரவிடுமேழைக்குதவிடவேண்டும் பலவரங்கள்
கரவடமாதிகொலைகிரிகாமமுங் கள்ளருந்தல்
பரமனைபோகங்கவராடுதல்மற்ற பான்மையெல்லாம்
வெருவிடயானும்விளங்கிடவேண்டுமென் விண்ணப்பமே. (28)

விண்ணப்பமொன்றல்லிரண்டல்லவே யுன்விரைகழலில்
எண்ணிக்கையாகவினிதிரந்தேன் செகதீஸ்வரனே

நண்ணிப்பல்காலமுமுன் பதமேவ நயந்தடிமை
பண்ணிக்கொண்டாலல்லவோவெனக்கே நல்லபாக்கியமே. (29)

பாக்கியத்தால் இந்தமானிடதேகப் பலனடைய
வாக்கிவைப்பாயுன்னையஞ்சலென்றேத்தி யடிதொழுதேன்
தாக்கியச்சூரனை வாகனமாக்கவுந் தாங்கியவன்
தூக்கியவாவந்துகாத்தருள்வாயிந்தத் தொண்டனையே. (30)

முற்றிற்று.





உ

வேலுமயிலுந்துணை.

திருவாலவாய் திருவிளையாடலை முன்னிட்டு

# ஸ்ரீ மயூரகிரி சுப்பிரமண்யர் மீது பாடிய

# வெண்பாமாலை.



மூர்த்திதலந் தீர்த்தமதால் முத்திதரும் மாமதுரைச்
சீர்த்திநகர் வாழ்பரமன் செய்பாடல் போர்த்திவரக்
குன்றநகர் வேலவன்பேற் கூறுவெண்பா பூர்த்தியுரக்
கன்றனை மாமுகனே காப்பு. (1)

வானவர்கோன் சூரை வதைத்த பழியதனைக்
கானமிசை தீர்த்துக் கதியுதவும் மோனபரன்
பெற்றெடுத்த குன்றைப் பெரியவடி வேலவனே
இற்றதியி லுன்றனருளீ. (2)

நாட்டானை தன்னதிலும் நல்லவயி ராவதமுன்
காட்டானை யாயுழன்று கானகத்தில் வாட்டமுரச்
சாபமதைத் தீர்த்தருளுஞ் சங்கரனின் றன்சேயே
தீபமது தோன்றிடவே செய். (3)

காவனத்தில் வாழீசன் காட்சியொடுந் தென்னவனே
மாவனத்தை மாநகராய் வைத்திடெனக் கோவனத்திற்
செய்யுந் திருக்கோயில் சேருஞ் சிவசுதனின்
றுய்யம் பதமிலங்கத் தோன்று. (4)

புத்திரப்பே றில்லாது போற்றுமலை யத்துவசன்
சித்த மதுகளிக்கத் தேவிதன்னைப் புத்திரியாய்த்
தந்த வரன்மகனே சம்சார சாகரத்தின்
பந்தமதை நீக்கியருள் பாலி. (5)

மூன்று தனத்தவளை மூவுலக மும்புகழத்
தோன்றி மணமுடித்த சுந்தரனார் யீன்றருளும்
பாலா பரங்குன்றா பன்னிருகை வேலவெனைச்
சீலாவுன் செய்யபதஞ் சேர். (6)

மாமணத்தி லன்னமுண்ண மன்றுணடம் பார்க்கவென
நேமமுடனேமுனிவர் நின்றிடவே சேம்முர
வெள்ளியம்ப லத்தாடும் வேத னுதவுசுத
பிள்ளையெனைச் சந்ததமும் பேண். (7)

மங்கை யரனிடத்தில் வந்தடிசில் மிஞ்சினதால்
இங்குண்பா ரில்லை யெனவியம்ப பொங்கமுடன்
குண்டோ தரசெலெனக் கூறும் பரமசுத
சண்டனைவெல் மார்க்கமதைச் சாற்று. (8)

இட்டவன்னம் பத்தாம லெங்குங்குண் டோதரன்பாற்
றிட்டமொடன் னக்குழியுஞ் சிலவைகை சுட்டழைத்த
சோமசுந்த ரேசரருள் சுப்ரமண்யா வுன்றனது
சேமமயின் மீதுவந்து சேர். (9)

பொன்மாலை தன்னிடத்தே போந்துமுனி கோதமனும்
முன்னிரில் மூழ்குதலே முத்தியென அன்னவளின்
சிந்தைப்படி கடலைச் சேர வரவழைத்தோன்
மைந்தவெந்தன் வல்வினையை மாற்று. (10)

வந்தசிந்தி னிற்படிய மன்னனிலா தென்செய்வேன்
எந்தையெனப் பொன்மாலை யேங்கிநிற்க அந்தரத்திற்
றென்னவனை வாவென்ற மான் றலைத்துதித்த
முன்னவனை வந்திடுவாய் முன். (11)

ஆண்டகையாய்த் தேவன் அரசாளுங் காலமனை
வேண்டவுனை உக்கிரனாய் மேதினியில் பாண்டிதனை
யாளென்றமைக்க வரசுபுரி சண்முகனே
பாளென்ற மையலறப் பார். (12)

தென்னவனாய் நீயிருக்கச் சேம மணம்புனைந்து
முன்னமுள வன்பகைகள் மூன்றுறைத்து அன்னபரன்
நல்வளைவேல் செண்டுதர நன்றமருங் கந்தவென
தல்லலறுத் தெந்தனைநீ யாள். (13)

தேவேந்தி ரன்கடலைச் சென்றுமது ராபுரியிற்
பூவேந்து குண்டமொடு பொன்றலுற நீர்வேந்தே
செல்லென் றுறைக்கவரி சேரவடி வேறெறிந்த
வல்லவனே காத்தருள வா. (14)

கார்மேகந் தன்னைக் கடுஞ்சிறையி னீவீழ்த்தச்
சீர்மேவு மிந்திரனுஞ் சீரிவரப் பார்மீதில்
வந்தவுடனே வளையை மாட்டி வலியழித்த
செந்திலவுன் சேவடியிற் சேர். (15)

பஞ்சமொரு காற்பரவப் பாரினுறும் மேருவினைத்
துஞ்சலுறச் செண்டதனாற் றேய்க்கவே கெஞ்சியவன்
சேமந் தரவதனைத் தேசஞ் செழிக்கவருள்
மாமகனே வேலவனே வா. (16)

சொல்லரிய வேதச் சுருதி மறையதனைப்
புல்லமதி நீத்திருக்கும் போதருக்கு நல்லுறைசெய்
வேணிப்பரன்பயந்த வித்தகனே யேழை யெதிர்
தோணியுந்தன் நிலையதனைச் சொல். (17)

தென்னவனில் வீரச் செழியன் றவக்குழவி
தன்னைமுடி சூடித் தடவும்போ தன்னவரின்
மோலியில்லா தேங்க முழுமணிவிற் றேன்மகனே
பீலிமிசை வந்தெனைநீ பேண். (18)

நீர்க்கடவுள் விட்டகடல் நீர்சுவரப் பொற்சடையில்
ஆர்க்குமுகில் விட்டருந்தும் அய்யனருள் தார்க்கடம்பா
மோகமதை நீக்கிநல முத்திதனிற் சேர்ந்திடவே
பாகமுற நீகடைக்கண் பார். (19)

வானீர்க் கடவுளவன் மாரிமுகி லேழனுப்ப
நான்மாடக் கூடலென நான்முகிலைத் தானனுப்பிக்
கார்த்தவரன் றந்தகுகா கர்மவினை சூழாது
பார்த்தெனை நீ தியுரப் பண்ணு. (20)

எல்லாமும் வல்லசித்த ரென்றொருநாள் மாமதுரை
அல்லலெலாந் தீர்த்தருளும் அய்யனருள் நல்லகுகா
பூர்ணத்தைக் கண்டடியேன் பொன்றாது வாழ்வதற்குக்
காரணத்தை யென்மனத்தே காட்டு. (21)

கன்னல்தனைக் கற்றேல் கனித்தருந்தச் செய்குவையேல்
முன்னவனீ யாவாய் முதுவலனே யென்னவுடன்
சொற்படியே செய்துந் தொடைகவருந் தேவனருள்
அற்புதனே வந்தெனை நீ யாள். (22)

பொல்லா வமணர் புகவிடுத்த வாரணத்தைக்
கொல்லாயென் றேவழுதி கூறிநிற்கச் சல்லாப
வீரனென வந்தழித்த வேதனருள் சண்முகனே
தீரமுற வென்னகத்தே சேர். (23)

முதியோனா யெவ்வனனாய் முற்றிற் குழவி
மதியோனாய் நின்று மணமகளைக் கெதியதனிற்
சேர்க்குஞ் சிவனளித்த செல்வா வறுமுகனே
காற்கக் கடனுனக்கே காண். (24)

பொன்னிதனில் வாழ்புலவன் புக்கிமது ரைப்பதியின்
மன்னவனீ யாடலுறு வாரெனெனத் தென்னனுக்காய்
கான்மாறி யாடுமரன் கண்ணுதித்த தற்பரனே
வான்மாரி யாமுனருள் வை. (25)

புத்தூரில் வாழ்வேதன் போகும்போ தாலின்கீழ்
பத்தினி செத்தத்தையிறை பார்த்தஞ்ச வத்தினமே
சூட்சியினா லாற்றுமரன் றோற்றமதால் வந்தவனே
காட்சிதனைக் கண்டிடவே காட்டு. (26)

தந்தை தனைத்துணித்துந் தாயைப் புணர்ந்திருந்தும்
வந்தடைந்த பாதகத்தை மாற்றியருள் இந்துமுடி
சூடும் பரமேசன் றோற்றமே யந்தகனைச்
சாடும் படிக்கருளைத் தா. (27)

வாளைப் பயில்குரவன் மங்கைதன்னைக் கைப்பிடித்த
காளையங்கம் வெட்டிக் கழித்தபிரான் றோள்மருவு
தேவியருள் செல்வா சிறுமையது நீக்கியெனைக்
கூவியுன்றன் சேவடியிற் கொள். (28)

வல்லமணர் விட்டரவு வந்துறுத்தத் தென்னவனுங்
கொல்லவுந்தன் வாய்விடத்தைக் கொட்டிடவே அல்லலுற
வந்தமுதந் தந்தருளும் வல்லசிவ னின்குமரா
சந்ததமும் வந்தரிவைச் சாற்று. (29)

பொய்யமணர் ஆவதனைப் போமதுரைக் கோவினீ
னைய்தலுற வென்றவரும் நாடிவிடச் செய்யநந்தி
தன்னைவிட்டு மாய்த்தவரன் றந்தருளுங் கண்மணியெ
உன்னையன்றி வேறெனக் குண்டோ. (30)

சாமந்த னென்பனுக்காய்த் தாரணியி லன்றொருநாள்
சேமந்த ருஞ்சேனைச் சேவகனாய்ப் போமந்த
அய்யனருள் வேலா வமரற் கதிபதியான்
றுய்யவடி பார்க்கவெதிர் தோன்று. (31)

மற்றொருநாட் டென்னவற்காய் வந்துகன விற்றோன்றி
உற்றவுல வாக்கிளியை யுய்த்தருள்வோன் பெற்றசுதா
எத்தனைநாட் டுன்புறுவேன் யின்னந் தயவில்லையா
அத்தவுனக் காளாக்கு வாய். (32)

செட்டியென வேவளையல் சேரத்தோண் மீதிருத்திச்
செட்டியர்வாழ் வீதிவிலே செப்பிகின்ற செட்டியருள்
பாலா குமரேசா பாசத் துடரருக்க
வேலாயு தத்துடனே மேவு. (33)

அன்றியக்க மாதருக்காய் அட்டவசைச் சித்திதனை
நின்றளித்த சங்கரனின் நெற்றிதனில் நன்றுதித்த
கோழிக்கொ டிக்குமரா கோவிந்தன் றன்மருகா
ஏழைக்குன் பொன்னடிதா வே. (34)

கச்சிதனிற் காடுவெட்டக் கார்த்திருந்த சோழனுக்கு
இச்சையுடன் றுட்டிரந்த வெற்றுழகர் வச்சனுந் [illegible]
யீசனருள் [illegible]கடம்பா என்னைகடா மிக்குழைப்பில
வீர்சமுற மாமயிலில் வா. (35)

தம்பியையுஞ் சோழனையுந் தான்பொருதத் தென்னவனும்
அம்புசெறி போர்க்களத்தா யாசமுற பைம்புனல்சீர்
வைத்துதவிக் காத்தவரன் மைந்தா வெனக்கிரங்கிச்
சித்தமதில் வாழவந்து சேர். (36)

பூவணத்தின் மாதுக்காய்ப் போந்திரச வாதமது
ஆவலுடனே யமைத்த வம்பலவன் மாவலுவில்
வந்துதித்த தற்பரனே வள்ளிதனை யேமணருங்
கந்தகுக வெந்தனைநீ கார். (37)

பொன்னியனைக் கன்னி பொருதிப் புரங்கொடுத்து
முன்னிருந்த நன்மடுவில் முங்கிவிழ மன்னிருவர்
தன்னிலுநற் றென்னவனைத் தாங்குமரன் றன்குமரா
உன்னருளை யென்னகத்தே யூட்டு. (38)

தன்னடிய ஞெருழவன் றாழ்ந்திறைஞ்சி யுன்னடியற்
கன்னமிட வேவறுமை யாயதென்று சொன்னவுடன்
நல்லுலவாக் கோட்டைதரும் நாதனருள் வேலவனே
புல்லறிவை மாற்றுமனம் பூந்து. (39)

ஆதரவி லாக்குழவிக் கன்று தமர் வஞ்சமுற
மாதுலனாய் வந்து வழக்குரைத்த நாதனருள்
செந்திலனே நீயிரங்கித் தீமைதனை யேயகற்றி
நந்தலிலா வாழ்வளிக்க நாடு. (40)

வரகுணனுக் கன்றொருநாள் மன்னுசிவ லோகம்
பெரவழைத்துக் காட்டியருள் பிஞ்ஞகனின் வரகுமரா
ஓயாது துங்கவலை யோட்டியருளிய்ந்தெனையே
மாயாத வாழ்வளிக்க வா. (41)

வல்லவிறல் யாழ்ப்பாணன் வந்தவுடன் பாணனுக்காய்
நல்லவிற குத்தலைய னாகிவந்து வல்லிசைபா
டும்பரமன் பெற்றருளு முத்தமனே யேழைதனை
யம்பரமே சேர்ந்திடநீ யாக்கு. (42)

சேரனிடஞ் செல்லத் திருமுகத்தைப் பாணன்பாற்
றீரமுடனே யளித்த தேவனருள் ஆறுமுகா
இத்ததியில் வந்தெனையாள் யென்மிடிமை தீர்ந்துனது
சிற்றடியிற் பத்தியுரச் செய். (43)

யாழ்பாடும் பத்திரனின் நல்லுறுதி காணவெனச்
சூழ்மேகந் தன்னைச் சொரியவே மூழிருளில்
மாராது பாடியிற்க மாபலகை தந்தவரன்
பேர்குமரா யேழையெனைப் பேண். (44)

பத்திரனின் நன்மனைவி பாடவளால் வாதாகிச்
சித்திரஞ்சேர் மண்டபத்திற் சேர்ந்திருக்க வத்தினத்தில்
நாவலவ னுயிருந்து ஞாயம் புரிசிவனால்
மேவுசுத வந்தெனையாள் மின். (45)

பன்றிக்குப் பால்கொடுத்த பண்ணவனின் றன்குமரா
உன்றிக்க லாதெனக்கு ஒன்றுமில்லை என்றைக்கும்
நின்பதத்தை நாடியே நீடூழி வாழ்ந்திருக்கத்
தென்புரத்தான் வாராமற் றீர். (46)

பன்றிகளின் குட்டிகளைப் பாராளும் மன்னனுக்கு
நன்றுதெரி மந்திரியாய் நாட்டிவைத்தும் மன்றிலுறும்
பொற்பதத்தைத் தந்தருளும் பூசுரனின் றன்குமரா
சற்பதத்தைக் காணவருள் சாற்று. (47)

வல்வினையி னற்கயவாய் வந்திருந்த புள்ளதனைத்
தொல்வினையை மாற்றவெதிர் தோன்றிநின்று அல்லலறுத்
தாற்றலுடை நல்வலியா னக்குமரன் றன்சுதனே
தோற்றமதை நாடிடவே சொல். (48)

வேதியரின் வாயுறையால் மெய்யறிவு வந்துதித்த
நீதிபெரு நாரைக்கி நித்தியத்தை ஓதியருள்
செய்துகம லத்தடத்திற் சேர்மீனம் நீக்குமரன்
கய்மணியே யெந்தனை நீ கார். (49)

சேகரனும் பாண்டியற்குச் சீரரவி னற்பதியைப்
பாகமுரக் காட்டப் பணிவணங்கி யேகவின்று
தொட்டால வாயெனவே சொல்லருளென் றேயுதவு
சிட்டனருள் செல்வவெனைச் சேர். (50)

விக்கிரமன் நல்வழுதி மேற்பொருதி யேகொதிக்க
உக்கிரமாய் வேடனென உய்த்தவணிற் சக்கைசெய்து
சுந்தரப்பே ரம்பெய்த சோதியரு ளற்புதனே
முந்தவினை போக்கிடுவாய் முன். (51)

சங்கத்தார்க் குப்பலகை தந்தவரோ டொப்பமரும்
கொங்குத்தார் சூடுசிவன் கொற்றவிழி பொங்கிவந்த
அத்தா பரங்கிரியின் அய்யாவெ னக்கிரங்கி
வத்தாத புத்தமுதை வார. (52)

வேதகுலத் தருமியென்பான் வேண்டியருஞ் செய்யுளினை
நாதனிடம் பொற்கிழிக்காய் நாடிநிற்கவா துசெயுங்
கீரனுக்குக் கண்காட்டிக் கேளாதால் வீழ்த்துமரன்
பாரமகனே யெனைநீ பார். (53)

வாதாடுங் கீரனைமீன் வாழாத்த டந்தனிலே
பாதாள முய்க்கப் படுத்திடவும் மீதமுள
சிற்கழக ருக்காய்த் திரும்ப வளிக்குமரன்
நற்சுதவெப் போதுமெனை நாடு. (54)

வாரியினீர் தன்னையுண்ட மாதவனைத் தானழைத்துக்
கீரனுக்கி லக்கணத்தைக் கேளெனருள் நாரமுடன்
சொல்லிவைத்த நாதனருள் சுப்ரமண்யா வென்றனக்குன்
மெல்லடியைத் தந்தருளு வே. (55)

வாய்பேசா மூங்கையினுல் வல்லசங்கத் தார்கலகம்
ஆய்வுறச்செய் தாண்மைதனை யாற்றுவிக்கும் காய்கணுளான்
வேண்டியருள் வித்தகனே வெற்றிமயில் கொள்பதத்தைப்
பூண்டிடவே யென்மனத்தே பூது. (56)

தூயவிடைக் காடனருள் சொற்கொள்ளாத் தென்னனுக்காய்
மாயமதைச் செய்தவனை வாடவைத்து நேயமுடன்
காட்சிதந்தி டைக்காடன் காரணமுஞ் சொன்னவரன்
மாட்சிமக னேயெழுந்து வா. (57)

சங்கரியை மீன்காரச் சாதிதனி லேபிரப்பித்
தங்கவட்காய் வீசுவலை யாளனெனப் பொங்கமொடு
சென்றுமணஞ் செய்பரபன் செய்தவத்தில் வந்தவனே
இன்றுமயின் மீதினில்வா விங்கு. (58)

நல்வாத வூரருக்கு ஞானநெறி தன்னையன்பாய்ச்
சொல்வேத வாக்கியனுய்த் தோன்றியருள் வல்பரமன்
ஆறுதலை யாகவங்கு ஆறுகணில் வந்துதித்த
ஆறுமுகா வந்தருளையா. (59

மாணிக்க வாசருக்கு மாவளிப்பே னென்றவுறை
பேணிக்க வேநரியைப் போபரியாய்த் தோணிக்கொண்
டத்தலைவ னாகவரு மண்ணலருள் முத்தையனே
உத்தமமார்க் கந்தனையே யூட்டு. (60)

போய்ப்பரியாய் வந்தநரி போதவிழுந் தேயுதயம்
முய்க்கநரி யாகியெங்கு மூளையிட மெய்த்தவனை
வாட்டமனன் வய்கையினீர் வாவென்ற றழைத்தவரன்
வேட்டசுதா வல்வினையை வெல். (61)

வந்திக்காய் மண்சுமந்து வைகைதனை யேயடைக்கச்
சிந்திப்போம் பிட்டதனைச் சேர்த்துண்டு வந்தொருபு
ரந்துயிலத் தென்னவன்பி ரம்பதனி னலடிக்க
அந்தரமார் தேவசுதா வாள். (62)

கூன்பாண்டியன் சுரத்தாற் கூகூவென் றேயலரக்
நோன்பமண ராற்றுது நொந்திருக்கத் தேன்றுளிக்கும்
வாயுடைய சம்பந்த வள்ளல்தனை யேயழைத்துக்
காயறவிர்த் தோன்சுதனே கார். (63)

மங்கைக் கரசியினுல் வந்தசம்பந் தன்வலியால்
அங்கமணர் வேரறுத்தே யார்ந்தசிவன் மங்களமாய்
யின்றகும ராவுனது யின்பரசமாம் பதமீ
தூன்றுமறி வானதையே யூட்டு. (64)

மாதுலனின் மாமகளை வந்தவழியின் மணந்த
போதிருந்த கூபலிங்க பொன்வனியை மாதவளின்
சாட்சிக்காய்க் கூடஹுறத் தானழைத்தோன் றந்தசுதா
மாட்சிமையாய் மாமயிலில் வா. (65)

வாரியினை யுண்டமுனி வாய்மையினு லெம்பெருமான்
பேரிசையைக் கேட்டதவர் பெற்றியொடு நாரியிடம்
பெற்றவர னர்ச்சனையைப் பேணலொடு மாடலது
முற்றுமினி வாமுருகா முன். (66)

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

# அத்துவிதபஞ்சரத்தின வெண்பா.

நாசிக்காய் வாசிக்காய் நாவுக்காய் தூவுக்காய்
ஏசிக்காய் தேசிக்காய் மாவுக்காய் வீசிக்காய்
மண்டைக்காய் வீட்டுக்காய் வைப்புக்காய் ஒப்புக்காய்
அண்டைக்காய் யேவற்காய் ஆக்காய். (1)

வெற்றிக்காய் மாக்காய் வெருவற்காய் வீரைக்காய்
நெற்றிக்காய் பூக்காய் நிலவுக்காய் சொற்றிக்காய்
பூதிக்காய் நீதிக்காய் புத்திக்காய் முத்திக்காய்
வாதிக்காய் சோதிக்காய் வாக்காய். (2)

மாலுக்காய் நூலுக்காய் மண்ணுக்காய் விண்ணுக்காய்
வேலுக்காய் காலுக்காய் மேலுக்காய் சூலுக்காய்
சூருக்காய் நீறுக்காய் தூயற்காய் வாயிற்காய்
காருக்காய் நாருக்காய் காக்காய். (3)

அண்டற்காய் மாற்காய் அரனுக்காய் வேதற்காய்
தொண்டற்காய் பாற்காய் சுருதிக்காய் கண்டற்காய்
மானைக்காய் வள்ளிக்காய் மஞ்ஞைக்காய் கல்லுக்காய்
ஏனைக்காய் வானைக்காய் ஏற்காய். (4)

வாழைக்காய் தேங்காய் வழுதங்காய் மூக்குதிக்காய்
கூழைக்காய் மாங்காய் கொடுநெலிக்காய் பீழைக்காய்
வெண்டிக்காய் நாரங்காய் வேலங்காய் கோவங்காய்
சுண்டிக்காய் தூதுவளங் காய். (5)

முற்றிற்று,

உ

வேலுமயிலுந்துணை.

# யெக்காலக்கண்ணி.

ஆரக்கரப்பொருளை அல்லும்பகலுமாசை
தீரப்பதப்பிடிக்கத் தேருவதுமெக்காலம். 1

கற்பகத்துநீழல் கனிவாய்த்தனித்திருந்து
தற்பரத்தைக்காணத் தவம்புரிவதெக்காலம். 2

மூலவரும்பொருளை மோனச்சுடரொளியை
காலமரிந்துநான் கண்டிடுவதெக்காலம். 3

அகத்தாசைதீர அவுணர்பகைவென்றளித்த
மகத்தானநன்மணியை மார்பணிவதெக்காலம் 4

கட்டிக்கரும்பிரசங்கலந்த நறுந்தேனையுண்ண
சட்டிதனைவைத்தடுப்பில் தணலெரிப்பதெக்காலம். 5

முக்கனியைச்சர்க்கரையை முத்திப்பசும்பாலை
விக்கவுண்டுநானும் வியந்திருப்பதெக்காலம். 6

தானாகித்தானாய்த் தனித்திலங்குமண்டவெளி
தானாகிநிற்பதனைச் சார்ந்திடுவதெக்காலம். 7

எள்ளுக்குளெண்ணெயைப்போ லெங்கும்நிறைபொருளை
உள்ளுக்குளுள்ளே யுணர்ந்திடுவதெக்காலம். 8

தத்துவங்கள்தானாய்ச் சகத்தையுண்டுமாரியுமிழ்
அத்துவிதவித்தகத்தை அரிந்திடுவதெக்காலம். 9

முத்தநவசித்தர்களும் முனிவருங்காணாவடிவை
நித்தமெந்தன்னெஞ்சில் நிறுத்திடுவதெக்காலம். 10

மாலுமலரோனும் வார்கழலைக்காணவெனும்
போலுந்தவம்புரிவார் புரிவதுவுமெக்காலம். 11

ஆதிப்பிரணவத்தை அத்தனருள்கவென
வோதித்தெளித்தானை யுணர்வதுவுமெக்காலம். 12

வேதன்தெரியா விளிக்கவரும்பொருளை
வேதென்றுரைத்தானை யுணர்வதுவுமெக்காலம். 13

சத்திவடிவாய்த் தனித்திலங்குங்கற்பகத்தை
நித்தியமென்னுவால் நிகழ்த்துவதுமெக்காலம். 14

பரிதிபோநற்கரங்கள் பரவியெதிர்தோன்றும்
விரிவதனைக்கண்டு வியப்புறுவதெக்காலம். 15

சேவல்கொடியிலங்கச் சிரந்தமயிலேறியெனைக்
காவல்செயும்பொருளைக் காணுவதுமெக்காலம். 16

தித்திக்குந்தேனைச் செழும்பாகைத்தீங்கரும்பை
புத்திக்குளேயழுந்தப் புணர்வதுமெக்காலம். 17

வெட்டவெளியாய் வெருவெளியாய்மேதினியில்
தட்டப்படாப்பொருளைத் தானறிவதெக்காலம். 18

தன்னையறிந்து சகமதனைநத்தாது
உன்னையறிந்து உவந்திருப்பதெக்காலம். 19

பூஞ்சோலைதன்னில் புகழ்மணிமாமண்டபத்தில்
வாஞ்சாலையாவுனிடம் வருவதுமெக்காலம். 20

அட்டதிசையிலுமுன் னதிசயத்தைக்கண்டுணரும்
சிட்டர்களைக்கண்டு தெரிசிப்பதெக்காலம். 21

உன்னையறிந்து உலகில்சருகாதியுண்ணுந்
தன்னையறிந்தோரைச் சார்ந்திடுவதெக்காலம். 22

வேதப்பொருள்முடிவை விண்ணர்கள்காணுவுருவை
போதப்பணிந்து புகுவதுவுமெக்காலம். 23

சாத்திரங்கள்காணாத் தனிவடிவைக்கண்காண
பாத்திரனாகிப் பணிவதுவுமெக்காலம். 24

மாந்தர்கள்காணாத மவுனமணிப்பொட்டகத்தைச்
சாந்திருந்துவாழச் சரண்புகுவதெக்காலம். 25

கட்டுக்கடங்காத காட்டுமனக்குரங்கை
விட்டுத்தனியேநான் வீற்றிருப்பதெக்காலம், 26

எத்தனைநான்சொல்லி யிளகாமனக்குரங்கை
பித்தனெனத்தள்ளிப் பிரிவதுவுமெக்காலம். 27

ஒன்றாகவாழ்ந்திருந்தும் ஓதுவதைக்கேளாவந்த
மன்றாடிவிட்டு மறைந்திருப்பதெக்காலம். 28

வீட்டில்குடியிருந்து விசுவாசந்தன்னைமனங்
காட்டிவழிவிடுக்கக் காண்பதுவுமெக்காலம். 29

ஒன்றாவிரண்டா வுரைத்ததெல்லாங்கேளாதை
இன்றாகிலும்விடுவதென் றிரப்பதெக்காலம். 30

செய்தநன்றிதானினையாத் தீயமனத்தைவிட்டு
அய்யவினிவுன்னடியை அண்டிடுவதெக்காலம் 31

பொல்லாமனக்குரங்கைப் போபோவெனச்சிரி
நல்லாயுன்பொன்னடியை நாடுவதுமெக்காலம். 32

வேம்பிரசம்போன்ற வீணனகன்மனதை
போம்பதரேயென்று புரப்படுவதெக்காலம். 33

சங்கிலியாலும்பிணித்துத் தானடங்காவன்மனதை
வெங்கிலியைவிட்டு வெளிவருவதெக்காலம். 34

நான்போகும்பாதைதனை நாடாமனதைவிட்டு
தேன்பாகையுண்டு தெவிட்டுவதுமெக்காலம். 35

துஷ்ட்டமனப்பேயைச் சொற்கடங்காக்குக்கல்தனை
கஷ்ட்டமதைவிட்டு கனிந்திருப்பதெக்காலம். 36

தண்ணீக்கிநானிழுக்கத் தாவிக்கரைக்கிழுக்கும்
கண்ணிதனைவிட்டு கடைத்தேர்வதெக்காலம். 37

ஆருமிகழ்ந்தேச அஞ்சாமலேதிரிந்து
சீருங்குரங்கைவிட்டுத் திரப்படுவதெக்காலம். 38

சண்டிமனக்குரங்கைத் தள்ளிவெளியேரி
விண்டிருக்குந்தற்பரத்தை வேண்டுவதுமெக்காலம். 39

நானாய்த்திரிந்தலைந்து நாய்போலுழலாமல்க்
கோணாதற்பரத்தைக் குறிப்பதுவுமெக்காலம். 40

யெப்போதும்பூரணமா யிருப்பமெனவெண்ணுது
முப்போதுமுன்னடியில் முனிவதுமெககாலம். 41

தப்பானவாழ்வை சாசுவதமெண்ணுமல்
அப்பாநானுன்னடியை அண்டுவதுமெக்காலம். 42

கானற்சலம்போலே காணும்புவிவாழ்வை
யேனமக்கென்றெண்ணி இருப்பதுவுமெக்காலம். 43

நீர்மேற்குமிழியைப்போல் நிலையாதபொய்வாழ்வில்
பார்மீதிருக்காமலுனைப் பற்றுவதுமெக்காலம். 44

சந்தையிரைச்சலைப்போல் தானேமறைந்தொளியும்
மிந்தையுருவாழ்வைவிட்டுன் னேர்வருவதெக்காலம். 45

அந்தரமின்னலைப்போல் அழியும்புவிவாழ்வை
விந்தையிதுவென்று வெளிப்படுவதெக்காலம். 46

மாரிபொழிந்துமறைவனபோல் பொய்வாழ்வை
காரியுமிழ்ந்து களித்திடுவதெக்காலம். 47

வானத்துமீன்போல் மறைந்துவிடும்வாழ்விதனை
யேனத்தைநம்பவென்று யெண்ணுவதுமெக்காலம். 48

மங்குலம்போல்தோன்றி மறையும்பொய்வாழ்விதனில்
தங்குவதுமோசமென்று தான்றெரிவதெக்காலம். 49

இன்றிருப்பார்நாளையிலை யென்றுசொலும்வாழ்வைவிட்டு
நின்றிருவடிக்காளாய் சேர்வதுவுமெக்காலம். 50

காலைதனிலிருந்தார் கதியிதெனமாண்டுவிட்டார்
மாலையிலையென்னுமல் வாழ்ந்திருப்பதெக்காலம். 51

நின்றுரிருந்தார் நெடுமூச்சாலேமடிந்தார்
யென்றுசொலக்கேளா திருந்திடுவதெக்காலம். 52

பார்த்தேன்பகலில் படுத்தவுடனேமடிந்தார்
ஆத்தேயிதென்னு தயர்வதுவுமெக்காலம். 53

முன்னுண்டராசர்களும் முடிந்ததறிந்திருந்தும்
என்னுண்டென்றெண்ணுது யேருவதுமெக்காலம். 54

பாராண்டமன்னர் பலரிருந்துமாண்டாரே
சீராயிவ்வாள்விதென்று திரப்படுவதெக்காலம். 55

கண்டகனுப்போலக் காணுப்புவிவாழ்வை
தெண்டனிட்டுத்தள்ளித் திரப்படுவதெக்காலம். 56

கங்குல்விடிவதுபோல் காணும்புவிவாழ்வில்
தங்குவதுகுற்றமென்று தான்றெரிவதெக்காலம் 57

பகலைமறைக்கப் பரவுமிருள்போல்வாழ்வை
அகலவினியுந்தன் அருள்கிடைப்பதெக்காலம். 58

ஆதவன்கண்டபனிபோல் அகலும்புவிவாழ்வைச்
சூதெனவென்றெண்ணிச் சுகப்படுவதெக்காலம் 59

கோடையிடிபோன்ற கொடுந்தகையவாழ்விதனை
சாடையிலேவிட்டுத் தனித்திருப்பதெக்காலம். 60

பச்சைமண்ணாற்பண்ணிவைத்த பாழுங்குடமிதனை
இச்சையன்றிநீங்கி யிருந்திடுவதெக்காலம். 61

காலன்வருமுந்திக் கண்டுநெடுங்குமுடலைச்
சீலமெனவெண்ணாது சேர்ந்திருப்பதெக்காலம், 62

பாசமெனுங்கோடாலி பட்டுவிழுங்கட்டைதனை
வேசமெனவெண்ணி வெருத்திடுவதெக்காலம். 63

காற்றுப்பிரிந்தவுடன் கணந்தரிக்காநாருடலைப்
பாற்றிதனைவிட்டுப் பயன்படுவதெக்காலம், 64

ஒன்பதுவாசலுள்ள ஓட்டைக்குடிசைவிட்டு
நின்பதத்தைநம்பி நெரியடுப்பதெக்காலம். 65

வேடர்குடியிருக்கும் வீட்டைவிட்டுவுன்பாதம்
தேடவழிதெரிந்து திரப்படுவதெக்காலம், 66

சீழுந்தசை[illegible]ந்து சிந்துகிரகும்பிவிட்டு
வாழும்படிக்கி வழிதெரிவதெக்காலம். 67

நாறுமலமூத்திரமும் நாள்தோறுமேஇழியுஞ்
சேறுதனைவிட்டுத் தெளிவுறுவதெக்காலம். 68

காற்றடைத்தகூட்டைக் கனலெரியும்பத்தலிதை
யேற்றதெனநம்பா தெழுந்திருப்பதெக்காலம். 69

பம்பரம்போலாடிப் பவுசடங்கும்பத்தலிதை
தெம்பிதெனவெண்ணுது தேருவதுமெக்காலம். 70

ஆசைக்கயிறதனில் ஆடிவரும்பம்பரத்தை
மோசமெனவிட்டு முழித்திடுவதெக்காலம். 71

சூத்திரத்திலாடுகின்ற தோல்கருவிதன்னைநம்பி
பாத்திரனுய்ப்பற்ருமல் பதியடுப்பதெக்காலம். 72

மாருதம்போல்காலன் மடக்கிவிடுகட்டதனை
நாருதெனவிட்டு நலிவுறுவதெக்காலம். 73

தும்பிக்கிரையிலையேல் கூகூவெனவலரும்
வம்பிதனைவிட்டு வரம்பெருவதெக்காலம். 74

வாங்குகின்றமூச்சுவழி மாரினலழியும்
பாங்கிணத்தைவிட்டேரி பதம்பிடிப்பதெக்காலம். 75

நாயும்நரியுங்கழுகும் நமக்கெனவேகார்த்திருக்கும்
பேய்ச்சுரையைநம்பாது பிரப்படுவதெக்காலம், 76

காக்கைகருங்குருவி கானினுறுபட்சியெல்லாம்
நாக்குருசியெனுமுடலை நான்கழிப்பதெக்காலம். 77

பஞ்சவேடர்தனக்குப் பதுங்கிப்பதுங்கித்துஞ்சி
அஞ்சாதுவுன்னடியை அண்டுவதுமெக்காலம். 78

களவுக்கருத்ததனைக் காட்டிமறைந்திருக்கும்
உளவுதனைத்தெரிந்து ஓடுவதுமெக்காலம். 79

அடிசில்சுவரதனை அவிநிறைந்துபத்தலிதை
சடிதியினில்விட்டுத் தனித்திருப்பதெக்காலம். 80

ஊணிறைந்தகூட்டை உண்டிச்சுவாதனை
வீண்சுமையென்றெண்ணி வெருத்திடுவதெக்காலம் 81

தோரியுந்துப்பும்நிறைந்த சுரைப்பத்தல்தன்னைவிட்டு
வாரிக்கருணைதனில் வாழ்ந்திருப்பதெக்காலம். 82

பசிபாளிதம்நிறைந்தப் பாண்டக்கருவிதனை
கிலிபிடிக்கவிட்டுக் கிளம்புவதுமெக்காலம். 83

புகர்வுபுழுக்கல்புளகம்நிறை பெட்டிதனை
தகர்தனை நான்விட்டுத் தனிப்படுவதெக்காலம். 84

பேறுற்றிடிகரையை பேய்வாழுங்கானகத்தை
பாறுமலேதிரும்பிப் பதிவதுவுமெக்காலம். 85

கூரிட்டவேல்விழியார் கொடுவலையிற்சிக்காமல்
யேரிட்டெனைப்பார்த் திழுத்திடுவதெக்காலம். 86

புன்னகையாமன்னெருப்பில் போய்விழுந்துவேகாமல்
உன்னகையாலென்னை ஒதுக்குவதுமெக்காலம் 87

ஊறலெனும்விடத்தை உட்கொண்டுமாளாமல்
வாறவழியிதெனவந் தெதிர்ப்பதெக்காலம். 88

எட்டிப்பிடித்திழுக்கும் இறையதனிற்சிக்காமல்
பட்டியிளங்கன்றினைப்போல் பாய்ந்திடுவதெக்காலம். 89

குத்துகுயந்தைத்துருவிக் கூகூவென்றேயாது
கத்தாமனுன்னடியைக் கண்டிடுவதெக்காலம். 90

பட்டவுடனெஞ்சதனில் பட்டுருவுஞ்சூல்முனையால்
பட்டுளன்றுமாளாது பார்த்திடுவதெக்காலம் 91

ஆழப்படுகுழியில் அண்டாதகேணிதனில்
வீழத்தவறுமல் விலகுவதுமெக்காலம். 92

யேழாங்கெவிபதனில் இன்பமிலாப்பாழ்கிணரில்
வீழாமலென்னை விலக்குவதுமெக்காலம். 93

காமாந்தகாரக்கருங்கடலில் வீழ்ந்துழன்று
யேமாந்துபோகா தெனைக்காப்பதெக்காலம். 94

குருதிப்படுங்கிணற்றில் கொண்டுபோய்த்தள்ளாமல்
உருதிப்படுத்தி ஒதுக்கிடுவதெக்காலம். 95

எமவாதையான இடுக்குவழிசெல்லாது
சமையாயென்னையழைத்துக் காத்திடுவதெக்காலம். 96

திருமணையிற்சிக்கிச் சிதைந் துநைந்துபோகாமல்
பெருமணையைக்காட்டிப் பிழைத்திடென்பதெக்காலம். 97

பஞ்சுவெட்டுங்கோலால் பரதவித்துமாளாமல்
நஞ்சுதனைவிட்டடிக்கி நான்வருவதெக்காலம். 98

அடர்ந்தநெரிஞ்சிமுள்ளி லகப்பட்டுவீழாமல்
கடந்துவரவழியைக் காட்டுவதுமெக்காலம். 99

கற்றுழைநற்சொணையால் காயப்படாதவண்ணம்
கற்றுவேநல்வழியைக் காட்டுவதுமெக்காலம். 100

சூரைப்பெருங்காட்டில் சூழ்ந்துநுழையாதபடி
பேரைச்சொலியழைத்துப் பேணுவதுமெக்காலம். 101

துஷ்டஜெந்துவாழ்ந்து சூழகிலில்யானிரங்கி
கஷ்டப்படாதபடி கையணைப்பதெக்காலம். 102

பல்லில்விஷமிருக்கும் பாரரவுக்கஞ்சிநைந்து
அல்லிலழுந்தாமல் ஆழ்ந்திருப்பதெக்காலம். 103

பொல்லாதசர்ப்பம் புகுந்தால்கடித்துவிடும்
நில்லாதேயென்றுவந்து நீயழைப்பதெக்காலம். 104

பார்த்தையாவிக்கெவியைப் பாதாளந்தோற்றுவிடும்
ஆர்த்தையாவென்று அழைத்திடுவதெக்காலம். 105

ஆசையெனுமதுவை யருந்தித்தலைசுழற்றி
வேசைமணைசெல்லாது வெருத்திடுவதெக்காலம். 106

மைப்படியுங்கண்ணார் மயலுழன்றுமாளாமல்
கைப்பிடியாகப்பிடித்துக் கையணைப்பதெக்காலம். 107

ஆலமெனவரிந்து அஞ்சாதுநான்புசித்து
ஓலமிட்டுமாளா தொதுக்கிடுவதெக்காலம். 108

சிரகொடிந்துகாற்றால் திகழ்ந்துழலும்பட்சியைப்போல்
சிரகொடிந்துமாளாமற் சேர்த்திடுவதெக்காலம். 103

வல்லையாயினமதி யுடையநாயேயென்
றெல்லைதனைக்காட்டி யிருந்திடுவதெக்காலம். 110

கந்தாகுமரு கடம்பாகதிர்வேலா
மைந்தாவாவென்று மகிழ்ந்தணைவதெக்காலம். 111

குன்றைமலைவாழ்குருவே யெனையழைத்துன்
அண்டையிலேவைத்து அணைத்திடுவதெக்காலம். 112

வேலுமயில்வாழி வீரதண்டைக்கால்வாழி
சீலமுருசேவடியுஞ் சேவற்கொடிவாழி 113

குன்றைமலைவாழி குன்றுறுமேவாழி
யென்றைக்கும்உன்பதத்தி லிருப்பவர்கள்தான்வாழி 114

ஏதுமறியாவினனின்பாய்ச் சொலுந்தமிழும்
ஓதுபவர்கேட்போ ருகந்தோர்களும்வாழி. 115

முற்றிற்று.







உ

வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீ மயூரகிரி
# திருப்புகழ்.

தனனதனதான தந்ததனன தனதானதந்த
தனனதனதான தந்த—தனதான

படியதனிலே பிறந்து குழவியெனவே தவழ்ந்து
பணிபலவுமே யணிந்து விளையாடி
புலவுறைகளே பயின்று மதனனெனவே வளர்ந்து
பருவமிகவே திரண்டு இளைஞோனாய்
வடிவுமிகு மாதரின்ப வலையதனில் மூழ்குமென்ப
வமதுதுகளாக நின்ப தமதான்
மலரடியின்மீதி லென்றன் மனதுபுகவே செயுன்றன்
மயிலின்மிசை யேறிநன்றென் றருள்வாயே
முடியதனிலாறு நம்பை யறுகுமதி யோடுவெம்பை
முதிரரவு சூடுநம்ப னருள்பாலா
முகில்நிரமதோடுசிந்து தனில்அருமை யாய்வளர்ந்து
முனிவன்வடி வாகிவந்து கடல்சூழும்
நெடியவனி யாவையுந்த னடியதனி லளந்த
நிமலர்திரு மால்மகிழ்ந்த மருகோனே
நிலவுதவழ் காவடர்ந்து மலர்களதின் மேலுதிர்ந்து
நிரைமயுர மேவிநின்ற பெருமாளே. (1)

---

முத்தாரமோடுமணி மேகலைகள்மார்பிலுர
வித்தாரமானதுயில் வீசியிடைசோர்வையுர
மொகானவாரிசப யோதரயதேதிமிர மயில்போல
முத்தாடல்செப்பவர்கள் மாகசிலைபோலநுதல்
மைக்காடுபோலளக மீதிலளிபூசலிட
மொய்ப்பானபாகுகனி போலுமொழிபேசிவிழி வலைவீசி
நத்தாதுபோலவெதிர் சாயலுரவேமனது
பித்தாகியேமயலில் மூழ்கியடியேனவரின்
நற்பாதமேகெதியலா துளதுவேறிலையென் றுறவாகி

நச்சாகியேமிகவும் வேதனையுறுதவணம்
உற்சாகமாகவள்ளி மாதுதெய்வயானையவள்
கட்போடுகூடமயில் மீதுவடிவேலொடுவந் தருள்வாயே
வத்தாதவாரிதியின் மீதரவின்மேலமளி
புக்கானநேமிதிரு மார்பனருள்நான்முகனை
வத்தானவோருறைசெ யாயெனவேசாடுமரி மருகோனே
மைக்காலன்மீரியரு ளார்விரதன்மீதுவெரு
விக்கோபமாகவொரு பாசமதைவீசவவன்
மட்டோடுபாதலமதேயுரவேதாவுசிவன் அருள்சேயே
சித்தாதிதேவர்முனி வோர்கள்பலரேதினமும்
அத்தாகுமாரகுகனே யறுமுகாவெனவே
தெற்கானகோபுரநல் வாயில்தனிலேயுனது பதமேவ
திட்டானமேருகிரி போன்மயுரமாமலையில்
கட்டானமாகனக மாளிகையில்மாமயிலில்
சிட்டாதியோர்பரவ வாழ்சரவணவமரர் பெருமாளே. (2)

---

நாதவடிவாகியுரு வாகியரிவாகிவளர்
நாளுமுடிவாகி வெழியாகிமகவாகியனை
நாடுபவளாகியரு ளாகிவயதாகிவளர் மதியாகி
நாமமதுவாகியணி யாகிமதனாகிவிலை
நாரியரைநாடிவிளையாடி யருகோடிமதி
நாடிடவுமாகிநினைவாகி மயலாகியவர் வலைமூழ்கி
காதலொடுமோகமது மீறியவர்பானிதமும்
சீலமுறவேவிழைவு மீரியளியாமெனவே
காமனவனுகமம தானவிளையாடலது மிகவாக
காமியிவனுமெனவே யாவர்களுமேபகர
பூமிசையிலேகொடிய வேல்விழியரானகுழல்
காரிருளைமேவுமட மாதர்பிணியாலடியே னுழல்வேனோ
பூதகியையாவலொடு மேவிமடிமீதினிலே
தாவிதனமீயெனவ ளாவிதனையேபருகி
பூமிசையில்வீழவவள் மார்பின்மிசையேதவழ விளையாடு
போதில்வருசோதையரி யாதபடியாயர்மனை
தோருமுரிமீதுதயி ரோடுநவநீதமது
போதுமெனவேநினைவு ராமனுணுமாயனரி மருகோனே

சீதளமதானமதி யோடருகுதாவுபுனல்
ஆரரவுதாமமொடு பீலியதுசூடுசிவ
சேயெனவேயாறுமுக மோடுபுவிமேவிவளர் முருகோனே

சேவல்பெடையோடுதின மேவிவளர்காமருவு
சோலைசெரிவாவியது நால்புரமுமேவவதி
தேசுதிகன்மாமயுர மீதுமயிலேரிவளர் பெருமாளே. (3)



அலர்புனைகொண்டைச் சொருக்கிலேயவள்
பகருரையன்புத் தருக்கிலேவரு
மழுதெனுமுந்திப் பெருக்கிலேகொடு விழியாலே

அகடுறுநெஞ்சத் தடத்திலேவரு
நகிலமெனும்பொற் குயத்திலேயரை
யதனினிதம்பத் தடத்திலேதுடி யிடையாலே

பலமதியங்கப் பிலுக்கிலேபிடி
நடையெனுமுன்கைக் குலுக்கிலேநல
பணியையணிந்தச் சிலுக்கிலேமுக மதியாலே

பகலொழிமங்கச் சிரிப்பிலேவரு
பவருமிணங்கக் குரிப்பிலேயுள
பலவிதமாந்தித் திரிப்பிலேதிர முளமானேர்

சலவியெனுந்தூர்க் குணத்திலேயவர்
கபடுறுநெஞ்சப் பிணக்கிலேமதி
கனிவுறவந்தக் கணத்திலேநினை வதுமாரி

கசடுறுசெந்துக் கிணற்றிலேகறை
தசையொடுமென்புன் னிணத்திலேபர
கதியதுமங்கக் கணத்திலேயிவ னுழல்வேனே

சிலைகொடுவஞ்சச் சமர்த்திராவணன்
முடியதுசிந்தச் சினத்திஞேர்கணை
திடிலெனவுந்தித் தொடுத்தராகவன் மருகோனே

திருமகள்சொந்தக் குணத்தனுகிய
குரமகளன்புற் றணைத்துமேவிய
திகள்வுறுகுன்றைத் தலத்திலேரிய பெருமாளே. (4)

வட்டப்பிறை யொத்துப்பொலிவத
னத்திற்பல முத்துத்திரளினை
வைத்திட்டதெனப் பற்பலவித வுறையாடி

மைக்கட்கிணை வைத்துக்கயலளி
புக்குக்குழ லொக்கச்சலதர
மைக்கொத்துறு பச்சைச்சைவல மெனவேதான்

எட்டிக்கனி யொத்தத்துவரிதழ்
கட்டிக்கழை மட்டுப்பலவென
விட்டப்படி நத்தித்தினமிக மயல்மீறி

இச்சித்திரு கச்சுக்கனியது
வெற்புக்கிணை நச்சுப்படமது
வெற்குக்கெதி யுற்றத்திவணென வுழல்வேனோ

எட்டுத்திசை கொற்றத்தொடுகொடி
கட்டிப்பல துட்டத்தொழிலெனு
மிக்கட்டுமிகுத்துச் சினமிகவரு சூரை

எற்றிப்பல சுற்றத்தொடுமுடி
தத்திப்புவி பற்றத்தனதயில்
இச்சித்துவிடுத்துப் பொருதிய முருகோனே

பிட்டுக்கொள வொத்துத்திருவணை
இட்டுத்தா வுற்றுத்துயிலுறு
பித்தர்க்கொரு வத்தைப்பரவிய குருநாதா

பெட்டைக்குயி லுற்றுச்செவலதி
னட்புக்கொரு மித்துக்குலவிய
பெற்றிக்கிரி யுற்றுத்திகழ்வுறு பெருமாளே. (5)

—oo:o:oo—

அந்திப்பொழுதுவரவே தெருவின்மிசை
சிந்துத்தரளமெனவே யுதிரநகை
அன்புற்றவர்புரியவே கணிகையர்கள் விளையாடி

அங்கைத்தளிரசையவே விலையுயறு
கொங்கைக்குடமலையவே யிடைதுவழ
அன்றில்பெடைகளெனவே நடைபயிலு மடமாதர்

கொந்துக்குழலசையவே குயமருவு
கந்தப்பொடிகமழவே விழிகளிறு
குஞ்சிக்கயல்சுழலவே எனதருகி — லுறையாடி

கொஞ்சிச்சுரதமிகவே புரியவவர்
கஞ்சக்கழல்வருடியே விரகவெரி
கொண்டுத்தினமதனிலே நிலைதவறி — யுழல்வேனோ

உந்திக்கமலமதிலே வருபிரமன்
வந்தித்தடிபணியவே பதியருளி
உன்கைத்தொழிலதனையே புரிவையென — வருள்வோனே

ஒண்டைக்கரிபரிகளே யதிகமுற
சண்டைத்தொழி லதனிலேவலியுடைய
உம்பற்கெதிரியெனவே திரியுமதி — யிலியான

விந்தைச்சிரமுடைய தோரசுரன்முடி
சிந்தச்சரமதனையே முடுகிவிடு
விண்டிற்குரியமருகா குரவனிதை — மணவாளா

விஞ்சைக்குயர்குரவனே யடியவர்கள்
துன்பைத்தவிர்பரமனே மயூரமெனும்
வென்றிக்கிரியதனிலே மருவிவளர் — பெருமாளே. (6)

---

கூரம்பனல்வேல்விழியார்பண ளுரும்பலசேரணிவார்கதிர்
கூசும்பலுபே ரொளிவீசிய — மடமானூர்

கோலம்பலவாகியவார்குழ லாலம்புனை தாரணிவார்கல
கோலம்பல போவெனவேதிக — ளிதமோடு

கீரங்குயில்போல்மொழியாரமு தூருப்பெருவாயுடையாருயர்
கேள்மிஞ்சிய பர்வனையானவர் — தனைநாடிக்

கேதம்பலசூழ்வனவாகிய காமன்றொழில்மூழ்குறயான்மிகு
சேடென்பது தானரியாவண — முழல்வேனோ

ஆரம்புனலோடருகார்மதி சீரும்பணிமான்மழுவோடினி
தாருஞ்சுரர் நாடிடவாடிய — பரமேசன்

ஆகந்தனில்வாழ்சிவைநாரணி சாமுண்டிசடாதரிபார்வதி
ஆரந்திகள் மாதரியாமழை — யருள்பாலா

V.S.K. Balakrishnan



தீரம்பலமீரியவாலியை யோரப்பிணையேவியெவானுயிர்
சேரும்படிசாடிய ராகவன் மருகோனே
தேசம்பலநாடுவதாயதே னுறும்புடைசூழுசிகாவள
தேசின்றிகழ்மாமலைமேவிய பெருமாளே, (7)



திகழ்மதிமுத்துக் கொக்கநகைத்துப்
பளபளெனப்பொற் பொட்டதையிட்டுத்
தினகரன்வெட்கித் துக்கமிருக்கத் தகையான
செடிமிகுமைக்கட் சிக்கறுகொத்துக்
குழலதுநத்தத் தத்திணையொத்துச்
சிருமயில்வெட்கிப் புக்கநடித்துச் செயல்மீறி
பகலில்மயக்கச் சித்துகள்கற்றுப்
பரிவுடனுற்றுப் பற்றியிணைத்துப்
பவுருசமுத்திப் புத்திகெடுத்துக் கொடிதான
படுகுழியுற்றுச் சொக்கிவிழித்துக்
கடனுறுசெத்தைக் கொத்திணையொத்துப்
பரனடிநத்திப் பெற்றிடாதிச்சித் துழல்வேனோ
சகடமதைப்பொற் சிற்றடிபட்டுத்
திடிலெனவுற்றுப் புக்கவுதைத்துத்
தரைமிசையிட்டுத் தத்திமிதித்துச் சிறுபோது
தவழவெயர்த்துப் பெற்றவளூற்றுச்
சலனமிகுத்துக் கைத்தலமொய்த்துத்
தழுவியெடுத்துச் சித்தமிகுத்துக் கனிவாக
அகமகிழப்பொற் செப்பிணையொத்தத்
தனமிசையுற்றப் புற்றமுதைப்பற்
றருமையுரப்பற் பற்றவளிக்கக் கொளுமாயன்
அருமருகத்திக் கெட்டிலுமுட்டப்
பகர்நவிரப்பொற் சக்ரமிதித்தத்
தமைவுறவுற்றுப் பற்றியவுக்ரப் பெருமாளே, (8)



திருவைப்பலவைத்த தெனத்திகழ்வுற்
றருமைக்கிளியொத்த மொழிச்சியர்சொற்
றிரமைக்கிறியுற்று மனப்பரிவுற் றவர்பாலிற்

றினமைப்படர்ந்தி யவர்க்கடிமைத்
தொழிலைச்செய வுற்றுமனக்கனிவிற்
றிரியப்புகழற்று வினைக்கருவிக் கிடமாகச்

சருவித்துகிலைக்கரமுற் றவர்பொற்
றுடையிற்றுடையிட்டு மதக்குசிசிற்
றனுவிற்கணையுய்த்து விடக்கடனுக் கிணையான

தடமத்துறுபுட்குல மொத்தரவப்
படமொத்தகனுற்று மதக்கலவிச்
சயனத்தினைனத்தி மயக்கமுறத் திரிவேனோ

செருவிற்றிரமுற் றகவித்திரளுக்
கிறையைத்துயருற்று நிலத்துருளத்
தெரிவிற்கணையிட்டு மடித்தவனுக் கிளையானைத்

திசையைக்கொளவைத் தவனைத்தழுவித்
துணையைக்கொடுமெய்த் திருவைக்கொளநற்
றிரையைக்கரையிட் டவரக்கர்களுக் கிறையோனை

இருபத்தொருபத் தொருநற்கரமச்
சிரமற்றுருளக் கணைதொட்டவனுக்
கினிமைப்பதிநத்தி விடுத்தவரிக்கருள் வோனே

இருள்வெட்குரமுற் றியநற்பொழிலைக்
கொளுபொற்றலையுற் றமயிற்றரணிக்
கிறைதற்பர சிற்பரபரப்ரம பெருமாளே. (9)

---

தேன்றற்சிவிகையில் ரதியொடுவருகும
தன்கைச்சுடுசரமது படவிணில்வரு
திங்கட்கதிரது கொடியனலெனமன மிகவேக

சிந்துப்பெருவொலி குயின்மொழிசெவியுர
நொந்துத்துயிலிட மதின்மலர்கருகிட
சிங்கத்திரைபடு குழிவிழுநிலமைப துறுவேனோ

அன்றிற்பெடையென நடையனமெனமிக
விந்தைத்தொழிலொடு வருமடவலர்சுக
மன்புற்றவர்தரவ தரமதனில்வரு மமுதூற

லந்தக்கழைரச மெனநுகர்வுரவுறி
தம்பத்தடமிசை பலவிழைவுகள்மிக
வம்பிற்படுமினி முகமெனவணுதின முழல்வேனோ

முன்றற்பரனிட மதுதனில்வளர்சிவை
சிங்கத்தினில்வரு திரிபுரைப்கவதி
மொய்ம்பிற்செரிமயி டனையொருபொழு தினிலுதைகாலி

முஞ்சித்தவர்வினையது பொடிபடமிக
வந்தித்திடவர னொடுதிருநடமிடு
முன்கைப்பணியர வதுபுனமலைமக ளருள்சேயே

மன்றற்பலதருவடர் திகழ்வுரவுயர்
குன்றக்குடியெனு மலையுரமதுநதி
வந்துற்றிடுநகர் தனில்மருவியசிவ குமரேசா

மங்கைக்கணியெனவுரை யதுபகரிரு
கொம்மைக்கனியுள குரமயிலொடுமரி
வந்தித்துதவிய புதல்வியைமணமருள் பெருமாளே. (10)



சேலாகிக்கனை யாலாலத்தினை
யொத்தவிழிச்சிகள் வார்குயந்தனி
லூலாடப்பல சீரானற்றொடை
யுற்றமணித்திரள் மேவவங்குறு
சேரானற்கடி தாராகித்தில
மத்தொடுதண்பனி நீருடன்பலவுங் கொள்மாதர்

தேசாய்வத்திர மாசானற்குழ
னத்தமதொத் திருகாதுலும்பணி
யாகாசத்தவிர்வாகாநற்கலை
யத்தொடுமித்திரனுமெனுஞ்சுவை
தேன்மாரிக்கடன் மேலேயுற்றமு
திக்கொடுநற்கனியாமெனுந்தகை இன் சொல்லோடு

காலாகிக்கருசூலாகிப்படர்
மைக்கிடைவித்துருநூலெனுந்துடி
தானுமத்தியமானார்வெட்கம
தற்றுநடம்புரிவாரிழம்பிடி
காணுமற்செலநாணுமற்பல
மித்திரமிஞ்சிடவேமுயங்குவர்வஞ்ச மேவி

காயாமற்றின மோயாமற்சுனை
யொத்திடுகேணியிலேமலைந்தனை
பாயோடுற்றவர்வாய்தாவித்துவர்
பற்றதரந்தனைமேவியன்பொடு
காலோடுற்றவர்காலாலெற்றுற
நித்தமுழன்றங்கனேகிடந்துடல் மங்குவேனோ

பாலாழித்துயில்மாலாகக்கொளு
மத்தன்முகுந்தன்முராரிபஞ்சவர்
தூதாகச்செலவாதாடிப்பதி
நத்திவிரைந்தளிநீதுரந்தவர்
பாராளக்கனசீராகப்பொர
வுற்றுமொழிந்தனனாரிந்துகொள் என்றுகூரப்

பாதாளத்தவராதாரத்தொடு
வுற்றுதிரண்டுயர்போர்புரிந்தவர்
தூளாகப்புவிபாழாகப்பெரு
யுத்தமிகுந்தெனைநீரெனும்படி
பார்மீதிற்றலைசார்பாகக்கண
மற்றுவிழும்படிமோதினும்புவி யென்றுமீயேன்

சீலாபுக்குவையேலாதித்தொழி
லெற்றுவெகுண்டவனேசினந்திட
வோகோவப்படிநீகோபித்திடி
னுற்றுவருங்கணைபாரெனும்பெரு
தேரேரிப்பரிநேரேயெக்குறு
சித்ரதனஞ்சயதோழனின்றிரு மருகோனே

தேவாயித்ததிகாவாவற்புத
வத்தையுகந்தருளீசுரன்குரு
நாதாமுத்தமிழ்வேதாநற்கதி

பெற்றிடவந்தருள்தீமைநொந்திட
தேனுருற்றிடுவாளுடொத்துயர்
சக்ரமெனுஞ்சிகிராகம்வந்துறை பெருமாளே. (11)



இலகுமுகமதியனையசலதர மிருளைநிகர்குழல்கருவிளைமுளரி
இத்துப்புக்கடலத்திற்புற்றமு
தத்தைக்கொற்றவர்கட்கத்தைக்கொடு
விடமுமயிலுயிர்கவரவருநம னவனைநிகர்விழிபிறையதெனுநுதல்
மெட்டிட்டுப்பிறைவெட்டிட்டத்தினை
யிட்டிட்டுத்திகள்பொட்டிட்டத்தென
இனையவளமுளபுருவமொடுமது நனையுமுகைதிலமதனின்மலர்குமிழ்
எற்றிபச்சைநிரத்தைப்பெற்றிடு
வொத்திக்கொற்றுயர்முக்குக்கிற்றினை வனமேவு
இருளைநிகர்மயிரதனையரிபடு கருவிஇலைகொடிஇணையெனிருசெவி
இப்பிக்குட்டரளத்தொத்துச்சிகி
பற்றிட்டச்சரணத்திற்கட்டைகள்
தளவமலரெயிறிதழிலவுகவிர் துவரியலிஞெடுகொவைகனிமிடறு
சற்சுத்திக்கமுகொத்துப்பொற்புய
மத்துக்குற்றிணைநெட்டிற்புட்கர
மிதழிஞெடுகமழ்வுறுகுவளைமல ரெனுமுவமைபகர்கரமதனன்முடி
வெற்புப்பொற்குடமொத்திட்டுக்கம
லத்திற்சிற்குமிழ்வட்டுச்செப்பென தனமீது
பலமலர்களணிதொடைதரளமணி பவழவடமொடுகலையதுதிகழ
பச்சைப்பொற்புயலிச்சித்துத்துயி
லுற்றுப்பற்றிவிரித்திட்டுக்கொளு
வடமரமதனிலுறுதளிரிஞெடு உருவமதுதெரிகருவிவயிறினை
வட்டப்பொற்சுழியெட்டிக்கைப்புலி
கட்டிட்டத்துடர்புட்பக்கொத்தது
பரவுமளிவருமுறவிநடையுள துடரிதெனவுலகவர்கள்பரிவுறு
பத்திச்சிற்றுமயிற்பத்திக்கிணை
கொப்புட்குத்திரையப்புக்குட்சுழி யதனோடு
படவரவுகொடிஇலகுமணிமுடி இறைபுயமதணிமலருயகிழது
பற்றப்பொற்கொடியொத்திட்டுக்கக
னத்திற்புக்கிளையத்திற்பற்றுற

வொளிருமினலொடுசலனமுயற்றுடி இழையரவுதருபடருகொடியதை
யொத்தச்சிற்றிடைப்பட்டப்பொற்சுனை
பெற்றிப்பிப்பிலமத்திற்சிற்றனை
பணிபடமுருளை ரதமதனனிதி பிரசமதைநிகரனுகுடிடையிணை
பற்றப்பொற்கவிரொத்துச்சித்துகள்
சற்றுப்புட்குலமத்தைப்பெற்றுயர் மயில்போல

குலவுநடைபெறுதுடையடியினடு மொழிகடகண்ணயடிவரல்மயிலை
குற்றத்தைச்சொலவுற்றுச்சற்றுல
கத்திற்பற்பலர்பற்றித்திக்கெனும்
பரடுவொளிர்டுபணியையிடையிடு கருவிகுதியதுவிளவுகனியெனப்
பத்திப்புத்தகமொத்துச்சிற்றடி
யிட்டுத்தத்திநிலத்திற்புக்குறு
குவடெட்கிகரிடுகமடமெனவுயர் கமலமலரதைநிகருமடியொடு
கொத்துப்புட்பமலைத்துப்பத்மினி
யொத்துச்சித்தசன்வெட்கிப்புக்கிட வருமாதர்

குயில்கிளிமழலைமொழி இடையர்குழல் குரகமொடுவிணைகினரிமொ
கொட்டிட்டுக்கரம் நெட்டிட்டுப்பிடி [ழியொடு
யொத்திட்டுத்துயில் விட்டிட்டுத்தன
மதனையெனதிருகணினுறவுமதி துரிதமொடுதுயிலிடவுமயல்மிக
மத்திற்பட்டிழுதொத்துப்பத்தியை
விட்டுப்புத்திகள் கெட்டுப்பித்துறு
குணமிலெதனமதியலையமனமது குலையவிழிவலையதனினுழவவர்
கொச்சைத்துப்பிதழ்பற்றிச்சித்தரி
கொப்பத்திற்படவுற்றத்திற்றெனை வுழல்வேனோ

நிலவுமதுமலரருகரவுநதி யுலவுகுரலணிசடையரிடமிசை
நித்தச்சிற்சுகமுற்றுத்தற்பர
மொத்துப்பொற்பணிவைத்திட்டுத்திகழ்
வடிவிமரகதசொருபிமதிமுக வழகிதிரிபுரதகனிபரிபுர
மர்தைச்சிற்றடியிட்டுப்பொற்சபை
யுற்றுத்தத்தெனவொத்துக்கொத்திட
நிமலனெதிரரிபிரமரிருடிகள் பரவவொருபொழுதருமையொடுபுகழ்
நிர்த்தத்தைத்தருசத்திப்பொற்றன
மத்திற்புற்றமுதத்தைப்பற்றிய குமரேசா

நிதமுமதுநதிகரைபுரளவர வதனினுறுமலர்மதுவிழியவயல்
நிற்கப்பற்பலநெற்கட்குத்துணை
யுற்றப்பொற்கழை முற்றத்தொட்டிடு

கதிர்கள்பரிதருமயுரநகர்தனி லமைவொடிமையவரரகரெனவுறை
கத்திப்பொற்சரணத்தைப்பெற்றிட
வுற்றுப்பற்பலசிக்கைத்தட்டியே
நினையுமுனமெதிர்மயிலிலழகொடு குரவனிதையரிமகளுமுறவெனை
நிட்டைக்குட்புக விட்டுச்சிற்பத
மத்தைபெற்றிடவுற்றுப்பற்றருள் பெருமாளே. (12)

---

வாடுமாமலர்கொண்டையணிந்திரு
காதிலோலைசிரந்துவிழுங்குர
மாலையோடுகதம்பமெனும்பல வகையான
வாசமேவிய கொம்மைசுமந்திடை
நோகவாசல்நடந்துதடந்தனில்
வாரபேர்களிணங்கிமயங்கமு யங்குவோர்கள்
ஆடுமாமயிலென்பநடம்புரி
பாதமேவுசிலம்பொலிசிந்திட
ஆவியோடுபணங்கவர்சிந்தையர் கொடியோர்கள்
ஆதிநாள்முதலன்புறவுன்றனை
மேவியேநினைந்தாரைவிரும்பிலென்
ஆலசநாயகவென்றுசுணங்குவ ரூரவாமோ
காடுமேவுபுனந்தனிலன்றொரு
மாதுநோகவெழுந்தருளென்கவள்
காணநாகமதென்கவுறைந்தவ னிளையோனே
காவலாழிபுரிந்திடுலங்கையில்
வாழிராவணனன்றுமடிந்திழி
காகமோடுபருந்துணவென்றவன் மருகோனே
மாடுவாகனமென்றுமொழிந்தர
வோடுமாமதிகங்கையணிந்துமை
வாமமேவவமர்ந்திடுசங்கர னருள்பாலா
வானநாடுபுகழ்ந்திடுகின்றதே
னூறுசூழவிழங்கிடுகுன்றையில்
மாலினோடயன்வந்துபணிந்திடு பெருமாளே. (13)

---

அண்டருங்கண்டரிவு சிந்திடும்பைம்பொனணி
அங்கமுஞ் செங்கமல மதிலேறும்
அம்பொலிந்திந்திரையெ னுந்தனம்பொன்கலச
மங்கசன்கண்டுமனமது நாணுஞ்
சண்டனம்புங்கயூழு மென்றுகண்டஞ்சுவிழி
சந்திரன்பிம்பமெனு முகமாதர்
தண்டையுங்கிண்கிணிய ணிந்திடுங்கஞ்சவடி
தஞ்சமென்றுந்தினமு முழல்வேனோ
பண்டுவந்திந்திரனோ வென்றிடுங்கண்டரொடு
பண்புறுஞ்சண்டையது மிகவாடி
பங்தொடுந்தந்தைமக வுந்தளஞ்சிந்தவொரு
பங்குறுங்கொண்டலவன் மருகோனே
வண்டலம்புந்தொடையல் திங்களுங்கங்கையர
வம்புனைந்தெந்தைசிவ னருள்சேயே
மங்குலந்தங்குபொழி லெங்கணுந்தங்குமயில்
மநதரந்தங்குமுயர் பெருமாளே. (14)



காதிலுறுகுழையாட விழியதுகாலனயிலென வெகுமோகக்
காரவனிதயராரமலையது காதலொடுதர யெனைநாடி
பாதிநகில்தனைநேரிலுர வெதிர்பாவையெனநட மொடுமேவி
பாசமதுதருவேசமுறுபவர் பாலிலனுதின முழல்வேனோ
பாதியுடல்சிவை மேவியினிவுறுபாகனெனநட மிடுதேவன்
பாலனெனமறையோதியருளிய பாரகுருபர முருகோனே
பூதிபரவிடுமேனியுடனிரு பூவைதழுவிட வருவாயே
பூமிநெழிகுறலானவடகிரி போலுமயில்மலை பெருமாளே. (15)



அய்ந்தருநிழலுறு மிந்திரனொருபொழு
தன்பொடுதிருவடி தனில்மேவி
அம்பொலிவுறுமென தின்புறுமதலையை
யம்பரமுறுபவர் களிகூர
வந்தினிமணமது கொண்டருளெனவெகு
மங்கலமுரசொடு தவர்சூழ

மந்திரவிதியொடு சுந்தரிதனை மண
மங்குறநிறுவிய குமரேசா
இந்தொடுநறுமலர் கங்கையுமருகர
வின்பொடுபுனைபவ னருள்பாலா
இங்கெனைவெருவிடு துன்பதுவிலகிட
இன்சொலையுதவிட வருவாயே
சந்தனமரமிக வுந்தியசிகிமலை
தங்கியகுருபர வடிவேலா
சந்ததமுனதருள் கொண்டினிதமர்வறு
சங்கையையுதவிடு பெருமாளே. (16)



காரைநிகருமுடி கரேல்கரேலென
பாலைநிகரெயிறு பளீர்பளீரென
காமர்நிரையுமிதழ் சிவேல்சிவேலென கயலோடு
காலனயிலைநிகர் விழீவிழீயென
பாகுகனியைநிகர் மொழீமொழீயென
காதிலிடுகுழைகள் மதீரவீயென வொளிவீச
மேனாநிகருநகில் பளாபளாவென
வாலினிலையகடு தளாதளாவென
யேவுமிடையுமினல் துடீதுடீயென கரம்வீசி
மேனிமுழுதுமொளி பசேல்பசேலென
வாரகணிகையுயர் தராய்தராயென
வேலையனுதினமுமிதேயிதேயென வுழல்வேனோ
சூரனுறவினர்கள் திடீர்திடீலென
ஆவிகுலையவயில்சுரீர்சுரீலென
சோரிவடியவிடு கராகராவன மயில்நேசா
சூதுகொடிதுநலமிலாய்மிலாயென
வோதுதருமவுயர் குணாகுணாவென
தூதுகடுகியிதே வரேன்வரேனென வுறைமாயன்
பாரமருகவெதிர் வராய்வராயென
நாடுபடியன்மிடி பொடிபொடீயென
பாவைமகிழுமொரு குகாகுகாவென தருள்தாராய்

பாரமயுரமலே குடிகுடியென
மேவுகுமரவிது ததீததீயென
பாசமகலவழி சொலாய்சொலாய்குக பெருமாளே. (17)



கருணைக்கடலென வுலகிற்பரவிடு
கதிரிற்பொலிவுறு பிரகாசா
கயவர்க்கெதிரொரு பொழுதிற்பொருதிடு
கனலிற்படிவம துறுவோனே
தருணிக்குரமக டணையச்சிவகிரி
தனிலற்புதமொடு வளர்வோனே
சசிபெற்றிடுசுக மயிலைக்கனியொடு
தழுவிச்சுகமுறும் வடிவேலா
வருணக்கடவுளை விரைவிற்றெரிதர
வடவைக்கணைவிடு ரகுராமன்
மருகப்பலபிணி யதுகட்டுகள்பட
வரவித்தகிசிவ னருள்பாலா
அருணைக்கிரியினு மதிகப்பொலிவுறு
மழகுச்சிகிமலை தனில்மேவி
யமரர்க்குழவடி பரவக்கனமுறு
மயிலைக்கொடுவளர் பெருமாளே. (18)



பூமீதிலேஜெனித்து மாபாதகம்வளுத்து
பூராயமேயுரைத்து வெகுவான
பூணாரமேதரித்து நாணமலேசிரித்து
போகாதியேவிரித்து யிளைஞோர்கள்
தாயிதிலேகருத்து நாடாதுபோலுறுத்து
தானேவரவடுத்து அணைமீது
தாளாமயல்கொடுத்துக் கிரீடாவகைதொடுத்து
தாளாலவரிடுக்க வுழல்வேனே
காமீதிலேபுனத்து மான்மோகமேமிகுத்து
காணமலேமறைத்து அருமாறி

காயாசமேதறித்துவாயாலுறைதொடுத்து
காமியெனையணைத்து மருவாயா

வாமினிநிகர்த்த கோதேயெனவலத்தில்
வாழ்வேயவட்களித்த முருகோனே

வானுடிலுஞ்செழித்த தேனுமலைக்கொழித்த
மாயூரமேயுதித்த பெருமாளே. (19)



மாகத்துறுசல தரமதைநிகர்குழல்
பாகப்படுமதியதைநிகரிடுநுதல்
வானத்துறுதனு விதுவெனவரைபுதல் கயலோடு

வாளுக்கிணையென நினைவுறுகருவிழி
வேளுக்குறையிட மெனவுறைதுவரிதழ்
வாரிக்கிடைவரு தரளமெனவெயிறு வொளிவீச

பாகுக்கிதுநிகரெனவுரைமதுமொழி
தோகைக்குலமென வொயில்மிகுநடையொடு
பாரக்கிரிநிகர் நகிலதுகனமுற விடைதேய

பாசக்கொடியிது வெனவிருகரமது
வீசித்தெருமிசை நடமிடுகணிகையர்
பாதத்தணுதின முறல்வுறுமதியதை யொழியேனே

வேகத்தொடுரதகெஜ துரகமதொடு
கோபப்படவரு மசுரர்கள்தளமது
வீழப்பலகணையதுவிட வவுணர்கள் பொடியாக

மீறிச்சினமொடு மெதிருறுமசுரனை
நேரிற்பொருதென வறுதினமமருற
வேயித்ததியென வயிலதுவிடுசிவ குமரேசா

சோகத்தறுமெனை யிதுதகிகனிவொடு
ஏகத்தலமதிலுறு வழிதிடமுற
சோதிக்குரியவ னெனவொருவரமது தருவாயே

சோலைப்பலதரு வதுதிகழ்சிகிமலை
மேவித்தருகிழ ல்மரிறைமகளொடு
தோகைக்குரமக ளிருவருமருவிய பெருமாளே. (20)

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

# நாமாவளி.

ஆனந்தம் பரமானந்தம்
ஆனந்தம் பரமானந்தம்.

அருமுகநாமமே யானந்தமதை
அரிவார்க்குப் பரமானந்தம். (1)

இளையவனுமமே யானந்தமதை
யெண்ணுபவர்க்குப் பரமானந்தம். (2)

உமைமகனுமமே யானந்தம்-அதி
லமைவோர்க்குப்பர மானந்தம். (3)

கதிர்வேலனுமமே யானந்த-மதைக்
கண்டவர்க்குப்பர மானந்தம். (4)

கந்தனுமமே யானந்த-மதைச்
சிந்தனைசெயிற்பர மானந்தம். (5)

கடம்பனுமமே யானந்தமதி
லுடன்படிலோ பரமானந்தம். (6)

காங்கேயனுமமே யானந்தமதில்
மூங்கிடிலோபர மானந்தம். (7)

குமரநாமமே யானந்தமதைக்
கொண்டார்க்குப் பரமானந்தம். (8)

குருபரனுமமே யானந்தமதைக்
கருதுவோர்க்குப் பரமானந்தம். (9)

சண்முகனுமமே யானந்தமதைச்
சாற்றுவோர்க்குப் பரமானந்தம். (10)

சம்பந்தனுமமே யானந்தமதை
நம்பினவர்க்குப் பரமானந்தம். (11)

கார்த்திகேயனுமமே யானந்தமதைப்
பார்த்திடிலோ பரமாநந்தம். (12)

சரவணனுமமே யானந்தமதிற்
பரவினவர்க்குப் பரமானந்தம். (13)

சயிலவனுமமே யானந்தமதைப்
பயிலுவோர்க்குப் பரமானந்தம். (14)

தண்டபாணியடி யானந்தமதைக்
கொண்டாடில் ப்ரமானந்தம். (15)

தாக்ஷாயணிமக னானந்தமந்தக்
காக்ஷிபெறில் பரமானந்தம். (16)

திருமருமகனடி யானந்தமதை
உருமைகொண்டாற் பரமானந்தம். (17)

சுப்பிரமணியனடி யானந்தமதை
ஒப்பினவர்க்குப் பரமானந்தம். (18)

சேவலனுமமே யானந்தமதில்
ஆவல்கொண்டால் பரமானந்தம். (19)

சேனபதியடி யானந்தமதைத்
தானுமெனிற் பரமானந்தம். (20

பன்னிருபுயனடி யானந்தமதை
உன்னிடிலோ பரமானந்தம். (21)

குகனவனுமமே யானந்தமதை
யகமிடிலோ பரமானந்தம். (22)

காலாயுதனடி யானந்தமதில்
மாலாகிடில்பர மானந்தம். (23)

பரைமகனுமமே யானந்தமதை
உரைசெய்தாற் பரமானந்தம். (24)

குழந்தைவேலனடி யானந்தமதை
யளந்தார்க்குப் பரமானந்தம். (25)

முருகனுமமே யானந்தமதின்
அருகுறவே பரமானந்தம். (26)

முத்தையனுமமே யானந்தமதைப்
பத்திசெய்வோர்க்குப் பரமானந்தம். (27)

மயிலவனுமமே யானந்தங்கரத்
தயிலருளாற் பரமானந்தம். (28)

வடிவேலனுமமே யானந்தமதிற்
குடிகொண்டாற் பரமாநந்தம். (29)

வேலவனுமமே யானந்தமதிற்
சிலமுறப்பர மானந்தம். (30)

அரஹரஅரஹர குருபரனேயெனை
யாண்டருள்வாய் கிருபாகரனே. (31)

சரவணமதில்வளர் சண்முகனேஉயர்
சுரனளிபெண்மயில் தன்னகனே. (32)

இமையர்பரவிடு மரிமருகாமலை
யுமையவளருளிய திருமுருகா. (33)

பிரமனைவெறுவிடு சிறுபாலாநல
வரமதுதரவரும் வடிவேலா, (34)

மலைபொடிபடவிடு மயிலோனேவிண்ணின்
வழிமயின்மிசைசெலு மொயிலோனே. (35)

குருமுடியடிபணி தேசிகனேபடி
குணமுடனுதவிடு பூஜிதனே. (36)

விண்டுக்கருளிய குகநாதாஉனை
யண்டிப்பணிசெய வாநீதா. (37)

தண்டைக்கரமிசை கொண்டவனேவரு
பண்டைப்பழவினை விண்டவனே. (38)

வேங்கைத்தருவென வளர்வோனேவன
மேங்கிச்செலநிலை தளர்வோனே. (39)

செங்கைக்கிடுவலை கொண்டவனேவளி
கொங்கைக்குடமது கண்டவனே. (40)

வாவாவாவா மயின்மிசையேஉன்
மலரடிதந்தருள் கிருபைசெயெ (41)

தாதாதாதா வரமதையோஉயர்
தற்பரமருவிடு கிருபைசெயே (42)

நந்தாவரமது நீதாதாமலைக்
கந்தாவென தெதிருறவாதா (43)

தீபச்சுடரது கண்டிடவேயதைத்
தெரிசித்தகமகிழ் கொண்டிடவே. (44)

பாபத்துடரது நொந்திடவேயுனைப்
பாடப்பரகதி தந்திடவே. (45)

தினமுஞ்சிகிமலை வாழ்பவனேநித
மௌனயங்கமைவொடும் சூழ்பவனே. (46)

சந்ததம்வந்தெதிர் நிற்பாயேசிரு
மைந்தனைநிலைதனில் வைப்பாயே. (47)

முற்றிற்று.





உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீ மயூரகிரி

# ஷண்முகப்பிரபந்தம்.

## கீர்த்தனைகள்.



### விநாயகர் துதி.

இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஓம் ஹர ஹர கணபதிவரதா-உயர்
உத்தமனேயருளித்தநாளேனை (ஓம்)

அநுபல்லவி.

சாம்பவிமனேகரனருள்சுதா சகலவிக்கினம்போக்கிடும்பாதா
மாம்பழம்பொவலம்வரும்போதா
வானவர்தானவர்நீதா மோனமழித்திடும்வேதா (ஓம்)

சரணம்.

அனவரதமுமுனதிருவடி யடியேன்போற்றியேயிருந்தனன்கு
தினகராவெந்தன்வினைதனைமடி
சிற்பர தற்பர வடிவே செகமதிலோர்மறைமுடிவே (ஓம்

மோதகமிடற்றடக்கும்வாயனே முனிபுங்கவர்கள்துதிக்கும்நேயனே
தீதகற்றிடுந்திருவின்சேயனே
திரிபுரசங்காரகனருள் கரிமுகசுமுகா வந்தருள் (ஓம்

ஆகுவாகனத்தமருமெய்ப்பனே அதிதிமொழியைத்தாங்குந்துப்பனே
வாகுவல்லபை மருவுங்கையனே
வக்கிரதுண்டனேவாவா எக்கியகொண்டனேகாவா (ஓம்

மருப்பினொலொருகதைவரைந்தவா மவுனயோகிகள்துதிசிறந்தவா
பொருப்பின்மேலான்வலமிருந்தவா
புனிதாகுணநிதிபிதுகதி கனிகொண்டருள்தருவாய்கெதி (ஓம்

நதிதாக்கரைதனிலமர்ந்துமே நனைந்துவெப்பிலும்பனிசுமந்துமே
கதிபளித்திடுங் கருணைத்திரமே
காவலனேபூவலம்வரு மாவலனேமுதலவனே (ஓம்)

ஆனைமாமுகத்துடனிருப்பவா ஆண்டவன்கவிக்கருள்சுரப்பவா
வானைமண்ணினைவயிற்றடைப்பவா
வந்தருள்வாயிதுதருணம் உந்தனிருதாட்சரணம் (ஓம்

மாமயிலவனே-யென்றவர்ணமெட்டு.

இராகம்-தேசிகம்பிபாக்-சாப்புதாளம்.

பல்லவி.

வாகரிமுகனே வல்லபைபாகனே

அநுபல்லவி.

வாகனமாகிய ஆகுவிலேரியே (வாகரி

சரணம்.

1. கும்பமுனிகையிற் செம்பைக்கவிழ்த்தவா
உம்பர்தொழும்பாதம் நம்பினேனுழலவே (வாகரி

சிந்துரனைக்கொலச் சிந்துரமானவா
தொந்திவயிற்றுட னின்றென்னைபாடிவே (வா கரி)

சக்கரைமுக்கனி தன்னை நுகர்பவா
இக்கணமன்புடன் னென்றன்னையாழவே (வா கரி)

நீண்டகரத்தனே நின்மலாதித்தனே
ஆண்டவன்சொல்கவிக் காதரித்தாடிவே (வா கரி)

வாசுதேவனே யென்றவர்ணமெட்டு.

கண்ணிகள்.

| | | |
|---|---|---|
| 1. | ஆதிமூலனே | அம்பிகைபாலனே |
| | சோதிலோலனே | சுயபிரகாசனே |
| 2. | வக்கிரதுண்டனே | மகாப்ரசண்டனே |
| | எக்கியகொண்டனே | இருளைவிண்டனே |
| 3. | ஆகுவாகனு | அங்குசபாசனு |
| | யேகமோகனு | பெங்கும்மாஹனு |
| 4. | சக்கரையவல் | தனைநுகருதல் |
| | மிக்கவுன்புகழ் | விரும்பினேன்றிகழ் |
| 5. | ஆவலாயுனை | யடைந்தேனெந்தனை |
| | காவலனேயென் | கவிநூலக்குநீ |
| 6. | சூரின்வல்லபம் | துடைத்தகந்தனை |
| | பாரின்மீதுநான் | பணிந்துபாடவே |
| 7. | வாக்கினல்வெழி | வரும்புன்சொல்லெலாம் |
| | நீக்கியின்படமாய் | நிகழ்த்திடச்செய்வாய் |
| 8. | ஆண்டவன்றுதி | யானைமாமுகா |
| | நீண்டகையனே | நின்மலாசுகா |

---



## கலைமகடுதி.

இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

சரஸ்வதித்தாயே சந்ததம்நீயே
தமியேனெனக்குதவு வாயே

அநுபல்லவி.

பாசுகபாலி பகவதி நீலி
பிரமருதூகலி வாலி (சரஸ்)

சரணம்.

1. திரிபுவனரட்சகி தேவப்பிரியபட்சகி
திரிகாலதுதி வத்ஸகி (சரஸ்)

2. வீணாநாதப்பிரியகி வேதன்முகத்திலகி
தாணுவேயேழை ரட்சகி (சரஸ்)

3. திருமகளெந்தாய் திரத்தினில்வென்றாய்
மருமகளாகி நின்றாய் (சரஸ்)

4. பாவலர்போற்றி பணிந்துனையேற்றி
பாடுவாருன்புகழ் தூற்றி (சரஸ்)

5. யேழைநான்சேயே இரங்குவாய்தாயே
ஆள்வையருள்சுரந்து நீயே (சரஸ்)

6. வித்தகமயிலே வேண்டினேன்ஒயிலே
புத்தகமமர் குயிலே (சரஸ்)

7. வாக்கினில்நின்று வருமிடர்வென்று
பாக்கியம்நீயளி யின்று (சரஸ்)

8. ஆண்டவன்பாடும் அருந்தமிழ்க்கிரங்கி
வேண்டும்வரந்தரு குவாய் (சரஸ்)

---



## சிவபிரான்றுதி.

வந்துகாவையனே என்றவர்ணமெட்டு.

இராகம்-அனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

நந்திவாகனனே க்ருபைநீசெய்

அநுபல்லவி.

சிந்துரத்தைவகுந் தகாரண மந்திரத்தில்நிரைந்தபூரண
தந்திமாமுகன்றன்னையீன்றவா தருணமிது (நந்தி)

சரணம்.

1. காலகாலனைவீழ்த்தியபாதா கயிலைநாதா
காணவுன்னிணை யீயவேவாதா
மாலயன்றினந்தேடிவாடியதாலரிந்தவர்பாதம்பாடிய
சீலமாமறைநின்றுகூடியே தினந்தேடிய (நந்தி)

2. தொண்டன்மைந்தனையன்றுநீகொன்றாய் சுவையோடுண்டாய்
தோன்றிடும்படிபந்தாஞ்சென்றாய்
மண்டலம்புகழண்டர்மாதவர்விண்டிடும்படி நின்றுகூவுவர்
பண்டுரூபமொடுண்டெனமகர் பதந்தாளுவர் (நந்தி)

3. காண்டிபற்கெதிர்வேடனாய்வந்தாய் கனிவாயெந்தாய்
கண்டுணர்ந்திடு காட்சிநீதந்தாய்
ஆண்டவன்பணிதில்லைமீதினிற்றாண்டவம்புரிகின்றாய்மேதினி
வேண்டவேவரந்தாளுவைநீ விமலாபிணி (நந்தி)

---



## மீனாம்பிகை துதி.

இராகம்-ஆனந்தபைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

தாயே வந்தென்னைக்காரம்மா மனதிரங்கி
நீயே கடைக்கண்பாரம்மா

அநுபல்லவி.

நாயேன்றுயரைத்தவிர்ப்பாயேசெகம்புகழும்நாரி சோமசுந்தரன்பாரி
யெனப்பகர்மீனாட்சி யருள்பாவுமாட்சி
தாவேயென்னதாட்சிபேச்சி யருள்காமாட்சி (தாயே)

சரணம்.

1. அங்கயற்கண்ணம்மணியே மலையரயன்
அன்பாய்ப்பெற்றகண்மணியே
சங்கம்புகழ்பரமர்பங்கில்வழர்பாச்கிய சாலிதிரிபுவனலோலி
அடியர்க்கனுகூலி அவுணர்குலகாலி
அருமைத்திரிசூலி வாலியருளைப்பாலி (தாயே)

2. கோலவர்னப்பூங்குயிலே மீனக்கொடியோன்
கோரியே பெற்றமயிலே
ஆலந்தனையேயுண்டநீலகண்டன்மருவும் | ஆயிகௌரிமகமாயி
சிவந்ததுவர்வாயி பர்கதிக்குபாயி
தவமுத்தர்கள்நேயி பாயி அருளம்மாயி (தாயே)

3. கல்லுங்சரைந்திழகவே யேழையானுனை
அல்லும்பகலும்பாடவே
பொல்லாவினைபென்னிட்டுமில்லாமலே விரைவிற்போச்கு
வுன்றனடிக்காளாக்கு திருவருளைத்தேக்கு
கனையோச்கைதுக்கு கடைக்கண்ணினால்நோக்கு
மேக்கு தருவை வாக்கு (தாயெ)

4. மாயவன்சகோதரியே கடைத்தேரிட
வந்தெனைநீயாதரியே
காயம்நிலைப்பதற்குபாயம் செய்குவைநீசகாயம்
ஆண்டவன்பொரநேயம் அதுவெனக்காதாயம்
யீயம்மிதுவேதோயம் (தாயே)

இதுவுமது.

இராகம்-சங்காரபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

நீதானு லோக மாதாவென்றுரைப்பவள். (நீ)

அநுபல்லவி.

வாதாடிபபோதுமாறுகால்தூக்கி நின்ற
தாதாவவனைப்புணர் தைபலென்றுரைப்பவள் (நீ)

சாணம்.

1. ஆனைமுகனைப்பெற்றுப் பானைவபிரமைத்து
வானைத்திரட்டிப்பெறுவபிற்றிலிடென்றுரைத்தவள் (நீ)

2. ஆருமங்கைக்க வொரு ஆறுமுகனைப்பெற்று
ஊருக்கூருதிரிய உவந்துமதியுறைத்தவள் (நீ

3. குதிரைக்காரனுக்கானைக்குட்டியைப்பெற்றிருந்தும்
மதுரைப்பதியதனில்மானமில்லாதிருப்பவள் (நீ

4. ஆண்டவன்துதி சொலும் அருந்தமிழுக்கிரங்கி
வேண்டும்வரத்தைத்தரும் வேடிச்சியென்றுரைப்பவள் (நீ

இதுவுமது.

இராகம்-சுருட்டி-ஜம்பைசர்வலகு-தாளம்.

பல்லவி.

கூடல்வாழுங்கயற்கண்ணியே யுன்னைநான்
கொண்டாடவே நமன்கண்டோடவேயம்மா

அநுபல்லவி.

ஏடவிழ்பைந்தாரிலங்கு கொண்டையாளேயீஸ்வரியே
பரமேஸ்வரியே யம்மா (கூட)

சரணம்.

1. பிட்டுவாங்கித்தின்னும் ஒட்டனவன்றன்னை
இட்டமுடன்சேருங்கட்டழகியம்மா
தட்டுவாணியானைக்குட்டியை யீன்றவள்
தானே சிவலோகமானேயுன்னைநானே தாவினேனேமலர்தூவி
னேனே நின்றுகூவினேனே யென்முன்மேவிவாராயம்மா (கூ)

2. மாட்டினிலேறிய தாட்டிகனைமணஞ்
சூட்டியே வாழ்ந்திடுமேட்டிமைக்காரியே
நாட்டியஞ்செய்திடுந்தீட்டிய மைவிழி
நாரணியேபரிபூரணியேயுனைநாடினேனே தினந்
தேடினேனே பதம்பாடினேனே யென்முன்
னோடிவாராயம்மா (கூ)

3. சிங்கந்தனிலேறியெங்குமுலாவிடும்
பங்கமிலாதநற்றங்கமே நீயம்மா
சங்குலெனும்பவம்மங்கவே நீவந்து காத்தருளேதுயர்
தீர்த்தருளேயெந்தன்கண்மணியேதிகழ்விண்மணியே
யுயர்பெண்மணியே யென்முன்நண்ணி வாராயம்மா (கூ)

4. நித்தியமுந்தனைப்பத்திசெயாண்டவன்
நித்தியவாத்தைச்சித்தி செய்வாயம்மா
மத்திநிலிடைச்சி மொத்தவே தாங்கிய
மாயன்சகோதரி வந்தென்னையாதரிவாரணமேதந்த
பூரணமேசிவகாரணமேபுகழ் ஆரணமேயம்மா (கூ)

———



## மஹாவிஷ்ணு துதி.

இராகம்-தோடி-திஸ்ரதாளம்.

பல்லவி.

வருவாய் மாதவனனே யென்முன்வருவாய்மாதவனே

அநுபல்லவி.

வருவாய்மாதவ கெருடனேறியே (வருவாய்)

சரணம்.

1. மாயமாம்பிரபஞ்சத்தில் மயங்கிநான் வாடுறேன்
மாயனே வருவாய் யென்முன்
மாயனே வருவாய்
மாயகோப வாயர் லோலனே (வருவாய்)

2. ஆதிமூலமேயென்று யானையழைத்திடவன்று
அருகில்வந்தவனே தந்தி
யருகில்வந்தவனே
அருகில்வந்தாபிரளித்த நாதனே (வருவாய்

3. பைந்துழவ மார்பனே பக்தரெதிர் நேர்வனே
பரமசற்குணனே உயர்
பரமசற்குணனே
பரம சற்குண வரமளித் தருள் (வருவாய்)

4. ஆயிரம்முடிபுனைந்து அனந்தனமேலே நாயின்றோய்
ஆண்டவனுக்கருள் செய் தேவா
ஆண்டவனுககருள் செய்
ஆணடவனுக்கருள் பாண்டவர் தூதனே (வருவாய்)

துதிகள் முற்றுப்பெற்றது.

உ

வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீ மயூரகிரி

# ஷண்முகப்பிரபந்தம்.

## கீர்த்தனைகள்.

க. இராகம்-தோடி-தாளம்-சாப்பு.

பல்லவி.

வாலசுப்ரமண்யனைமாவாது நாம் நினைத்தால்
வந்தடிமை சொள்ளுவான்

அநுபல்லவி.

ஆலம்புசித்த அரன் அன்றுபதேசங்கேட்க
அருமறை தனை யோதும் அழகனைநாம்பார்க்க
அங்கைகொடுமல ரெங்குப்நிரைவியே
அங்கஜன்விடு கணைஸ்பவிரைவியே
அந்த குருபா சுந்தரதிகச
வுந்த்குணநிரைபந்தனருளுநரை (வால)

சரணம்.

1. ஆணவம்மாயைசன்மம் அகற்றியேபதிசேர்ப்பான்
அந்தகாரவிருளைப்போக்கியேயொழி யார்ப்பான்
பூணமிருதுவான பொன்னடிதனிற்கார்ப்பான்
பொய்புலகவாழ்வினிற் பொன்றாது நீரைவார்ப்பான்
புத்திதனிலொரு நித்திய வாழ்வினை
நத்திமகிழ்பல சித்தி பெருகிட
பூவைமனமகிழ்பாவைதனைநிதந்
தேவைநமதெனமேவு சுரர்பணி (வால)

2. மாதர்மயலமுந்தி வாடாமலே தடுப்பான்
மரு ஜென்மமெடுகாதமருந்தையவன் கொடுப்பான்
வாதகவிகபரமார்க்கமதில் விடுப்பான்
வருமிடர்தனைவெல்லவந்துநமை யடுப்பான்

மங்கையகமகிழங்கை தழுவிய
கொங்கைமருவியே யெங்குமிலகிய
மயிலின்மிசைவெகுஒயிலில்வருமொரு
வயிலில்வேல்விடு அயிலுலாசனே (வால)

3. அங்கம்பழுதுறாது அன்பாய்வரந் தருவான்
ஆரும்யெதிருறாமல் நேரில் அவன் வருவான்
திங்களணிசடையோன்சேயால்பதம்பெறுவான்
தீவினைதனை வெல்ல திக்செல்லர்மேபொருவான்
திண்டரும் பெரு வண்டர் தம்பதி
கொண்டவீரனைமண்டல்துஞ்சுற
தீரவீர வுதாரமாகவே
கோரவேல்விடு ஆரமார்பனே (வால)

4. சூழும்டம்பாசத்தைச் சூழாமலே தடுப்பான்
சுத்தநிர்க்குணமான வீட்டில்நடைவிடுப்பான்
பாழுந்துர்க்குணமானபாசந்தனைக்கெடுப்பான்
பக்தன் ஆண்டவனுக்குப்பாதந்தனைக்கொடுப்பான்
பத்தாகமகிழ் நித்தகுருபர
சுத்தவாதா அத்தனருள்சுத
பாவநாசவிலாசனறுமுரு
கேசனுமொரு யேகாஜனே (வால)

உ. இராகம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

நோட்டு-பல்லவி-கண்ணிகள்.

1. சரவணபவா சதிரொழி தங்குமாமுகா
மரணவேதனை திரணமெனவே வந்தடிகொளுநாதனே
வானே கோனே வருகுவாய் வருகுவாய்
வருகுவாய் நீ திருவருள் தா (சர)

2. கருணைவாரியே தாணியோர் கருதுபாரியே
குருமுனிமனதிருளறவொருகுறிநெறியளி குருபரா
கோவே தேவே கோறினேன் கோறினேன்
கோறினேன்மதிமாறிடாமலே (சர)

3. செந்தில்வாழ்பவா இமபவர்வந்து சூழ்பவா
தந்திமுகனைவந்துதவென தனியே கடமமர்ந்தவா

தாகாயோகா சண்முகா சண்முகா
சண்முகாவிது தி கதியருள் (சர)

4. தணிகைவாசனே அடியவர் தனது நேசனே
பிணிவயர்வுறதகிணிதெளிவுற பெருமையுடனேவருகுவாய்
பேரே காரே பிரியனே பிரியனே
பிரியனேபதிக்குரியனே யருள் (சர)

5. மூலகாரண திருவருள் பொழிவாய் பூரண
காலகாலனை வீழவுதைத்தகண்ணுதற்கருள்குருபரா
கந்தா விந்தா கருதினேன் கருதினேன்
கருதியாண்டவன் உருதி தந் தருள் (சர)

---

ங. இராகம்-தோடி-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

பாவிநானிது தீவிந்தெனையாள் பரனே குருபரனேவானே

அநுபல்லவி.

ஆவியுடல்பொருளனைத்து முன்னுதே அடியேன்
கெதிவேறில்லையிது வரியாயோ யென்றீது (பாவி)

1. மேவியசுரக்கிளை கிளைத்தவா
வேலினாலொருவனா துளைத்தவா
தாவியே குராமாதுக் கிளைத்தவா
தகனப்புரிபவனருள்குரு அகமன்பொடுவந்திருளரு (பாவி)

2. குரவனைச்சிறைதனி லடைத்தவா
கோதிலாக்குன்றைப்பதி யுடைத்தவா
சுராநுருமிடர்தனைத் துடைத்தவா
சுககாரண காிவருகென சொலுநீதனே தாமதமென (பாவி)

3. சமணரைச்கருவருத்த நாதனே
தாசன் ஆண்டவன் துதிக்கும் பாதனே
அமலசோதியாயமர்ந்த நீதனே
அம்பிகையருள் சரவணபவநம்பினேனிது தியுதவுவாய் (பாவி)

---

ச. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

வடிவேலெடுத்து வருவாய் மயிலிலேறி
வடிவேலெடுத்து வருவாய்

அநுபல்லவி.

வடிவே லெடுத்துவந்து அடியன்பவந்துரந்து
குடியேற்றருள்புரிந்து குமரனே நீபரிந்து (வடி.

சரணங்கள்.

1. அடியவர்கோட்டி ஹரஹரஹரவென
அந்தணர்கூட்டம் ஜெயஜெயஜெயவென
தடியர்களாட்டம் தடதடதடவென
தரும்பெரியோர்கள் கிடுகிடுகிடுவென (வடி.

2. நாட்டியமாதர் தரிகிடதசவென
நட்டுவமேழங்கள் கிடுகிடுகிடுவென
பூட்டியசிலங்கை சலகலசலவென
பொன்னடிதொழுவோர் குருபரகுகவென (வடி.

3. அண்டர்கள்முனிவோ ரனுதினமடிதொழ
அரியவர் பெரியவர் அருகிருந்துமகிழ
கண்டவர்கண்கூசக் காட்சியெங்குந்திகழ
கதிர்வேல்தனைக்கண்டெந்தன் கர்மபந்தம்நெகிழ (வடி.

4. தாண்டவமாடிய சங்கரனருள்பால
சாதுஜனர்கள்பணி சண்முகவடிவேலா
ஆண்டவன்போற்றிடும் அறுமுகத்திருலோலா
ஆபத்துவேளையிது அருள்சுரந்தருள்பாலா (வடி.

ரு. இராகம்-சாவேரி-அடதாளம்-சாப்பு.

பல்லவி.

முத்தையனே வேளூர்மேவு.
முத்தையனே

அநுபல்லவி.

முத்தையனேயுலகுளோர்கள் முத்திசேவித்தையனே

சரணம்.

1. பத்தைபனே உன்மதில் பாவி சென்மமீடேறிட (மு)
2. எத்தனைதான்றவர் செய்யினும் ஏழைமீதுகிருபைசெய்வாய் (மு)
3. ஆழுமென்னையருள்சுரந்து பாழும்பாசம்பற்றிடாமல் (மு)
4. போதும்போதும்பெற்றசுகம் வாதுசெய்வது தகாது (மு)
5. பிறவி வேண்டாவழியெனக்கு தெரிவதெப்பவோவரியேன் (மு)
6. கால பாசம்கண்ணுறுமல் பாலன் ஆண்டவனைக்காரும் (மு)

சா. இராகம்-பூபாளம்-தாளம் ஜெம்பை-சர்வலெகு.

பல்லவி.

தாருமெனக்குன்பாதம் மயூரநாதா
தாருமெனக்குன்பாதம்

அநுபல்லவி.

தாருமெனக்குன்பாதம் தந்தாலதுவேபோதம் (தாரு)

சரணம்.

1. வாருமனதிரங்கிக் காரும்யேழையென்றனைப்
பாரும்கடைககண்ணினல் தீருமனக்கவலை (தாரு)
2. சோகமதிகரிக்க மோகமரிக்குதெனை
காகம்நரிநாய்நத்தித் தாகப்படுமுன்னமே (தாரு)
3. நாடிபுலகில்புகழ் தேடிபுன்னையல்லாமல்
வாடியிளைத்துவந்தேன் கூடிச்சுகிப்பதர்க்கு (தாரு)
4. கோதுயேழைமேலுண்டோ தீதுபுரிந்திடினும்
பாதுகார்த்தேயெனக்கு சாதகமாகவேநீ (தாரு)
5. கொண்டேனுனதடியை விண்டேனுலகமயல்
அண்டேனெருவரிடந் தொண்டேசெயும்படிக்கி (தாரு)
6. வந்தவழியரிந்துன் சொந்தப்பதிதெரிந்து
கந்தமலர்ப்பதத்தில் மைந்தன் ஆண்டவன்வாழ (தாரு)

---

எ. இராகம்-தோடி-தாளம்-திஸ்ராஜாதி.

பல்லவி.

முருகா உனைத்தினந்தினந்துதித்தேன் வேன்
முருகா உனைத்தினந்தினந்துதித்தேன்

அநுபல்லவி.

தருகாமலே வருவாய்நேரில்
குருவாயரு வருவாயெங்கும் (முருகா

சரணம்.

1. ஆயிரத்தெட்டண்டம் அடங்கலுங்காத்துநீர்
ஆழுவதோ பெருமை இந்தத்
தூயவனெஞ்சி லிணைபிரியாமற்
றுலங்கிடுவீர் அருமை
நேயமறைகள் புகழ்ந்திடும்நாதனே
நித்தியனேபத்தியனே சத்தியனே சித்தியனே (முரு

2. இந்தப்பிறவி யிழந்துநான்போய்விட்டால்
யெப்பவுனைக்காண்பேன் பாச
பந்தம்வெறுத்துநான் பாடிப்படித்துந்தன்
பாதந்தனைப பூண்பேன்
விந்தையதாய்மயின் மீதிலிருப்போனே
வித்தகனேபுத்தகனே சித்தர்மனப்பத்தகனே (முரு)

3. அண்டர்புகழ்ந்திடுங் குன்றைமலையில்
அமர்ந்துநீ விற்றிருக்க யென்றும்
ஆவலுடனேவந்தாண்டவனுன்றன்
அழகினைப்பார்த்திருக்க
புண்டரீகாட்சன் பாவிப்பணிந்திடு
பூரணனே காரணனே ஆரணனே வாரணனே (முரு)

---

அ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்-சாப்பு.

பல்லவி.

சித்தம்வைத்தெந்தனைக்காப்பாயே யுந்தன்
தெரிசனைதந்து துயர் தீர்ப்பாயே

அநுபல்லவி.

உத்தமகுணசீலா உயர்பரங்கிரிவேலா
பித்தன்மகனேபாலா பிரணவத்தின்மூலா (சித்)

சரணம்.

1. முத்திக்குவித்தெனவே முளைத்தகுருபரனே
மூவர்பதிக்குமேலே மேவுமறுமுகனே

பத்திக்குறுதியான பதியிலிருந்தவனே
பாசமணுகிடாமற் பாருஞ்சரவணனே (சித்)

2. ஆரொ பெவரோவென்று அறியாமல்நானிருந்தேன்
அன்றைக்கிநீவந்த அழகுதனைமறந்தேன்
ஊர்நகள்தோருஞ்சென்று ஓடித்தேடித்திரிந்தேன்
உற்றுப்பார்த்துக்காணுமல் உத்தமனையடைந்தேன் (சித்)

3. காலதாமதஞ்செய்தால் கந்தாபொருக்கமாட்டேன்
கண்டுனைத்தொழுவாமல் கணந்தரித்திடமாட்டேன்
சிலமுடனேயுந்தன் சேவடிதனைக்கேட்டேன்
சிருவன் ஆண்டவனுக்கு தினமுன்னருளையூட்டேன் (சித்)

---

கூ. இராகம்-தோடி- சாப்புதாளம்.

பல்லவி.

இன்னம்வாராமல்நீர் இருப்பதைப்பார்த்தாக்கால்
என்ன மாயமோ அறியேன்

அநுபல்வி.

தென்னஞ்சோலைகள்சூழும் திருக்குன்றக்குடிவாழும்
உன்னதமயிலேறும் உலகநாதனே என்முன் (இ)

சரணம்.

1. பூர்வத்திலேயென்ன பொல்லாங்கு செய்தேனோ
புண்ணியபுருடரை புகழாதுவைதேனோ
பாரினிற்கொடிதான பாதகஞ்செய்தேனோ
பாலகனைரெட்சிக்க பாரமோதூரந்தானோ (இ)

2. நந்தவனம்புகுந்து நல்லமலரெடுத்தேன்
நாடோறுமிழுவாழை நாரினிலேதொடுத்தேன்
சிநதைதனிலுன்னை சேர்க்கநினைவெடுத்தேன்
திருவடிதனிற்சாற்றி திருப்புகழும்படித்தேன். (இ)

3. ஒருஇடத்திலிருந்தால் உன்னைப்பார்க்கவாலாம்
உனச்கிருப்பிடமெல்லா முலகத்தில்மலைகளாம்
பெருவிடந்தனைபுண்டோன் பிள்ளைநீர்தெருவெலாம்
பேசித்தாசிகள் வீடு போவதுவேதொழிலாம் (இ)

4. அருணகிரிநாதனுக் கன்றருள்செய்யும்நாதா
ஆண்டவன்றுதித்திடும் அரவிந்தமலர்ப்பாதா
கருணையென்மேற்புரிந்து கதியழித்திடும்வேதா
காற்கக்கடனுனக்கே கடப்பமலர்விநோதா (இ

---

ம. இராகம்-சுருட்டி-தாளம்-ஜம்பைசர்வலெகு.

பல்லவி.

வையாபுரிவாழு மெய்யாமுருகையா
வருவாய்நீ யெந்தன்முன்னிளைவாய்ப்பன்னிருகையா

அநுபல்லவி.

நையாதவர்நெஞ்சில் உய்யாதவர் நீரே
செய்யாதவுதவியை அய்யனே செய்வீரே

சரணம்.

1. தைபாதசட்டையைச் சதமென்றுநம்பினேன்
தத்துவத்தாலே மதங்கொண்டுவெம்பினேன்
பொய்யானவாழ்விற் புலிபோலே கெம்பினேன்
பொன்னடிதன்னில்நான் உய்யாது சோம்பினேன்
போற்றிலனே மலர் தூற்றிலனே துயர்
ஆற்றிலனே வன்மை மாற்றிலனே அய்யா (வை)

2. ஆசைச்சடல்தன்னில் நேசத்துடன்மூழ்கி
ஆத்மாவைவீண் யிலேத்தேன்கொடுபோகி
பாசப்பிணியைப் பதைப்பாய்வெருவாகி
பற்றறுவிட்டால் வருவேனுனக்காகி நெற்றிப்
பார்வையிலேவந்த வேர்வையிலேதோன்றுஞ்
சூர்வயிலே யென்னைக் கார்மயிலேறிநீ (வை)

3. பொல்லாதமெய்யினைப் பொய்யெனவேதள்ளி
பூதிபணிந்துநான்கூத் தாடிபேதுள்ளி
வல்லபமாம்பலவர்ன நிரப்புள்ளி
மாமயிற்சேவையைப் பார்த்திடவேவள்ளி
மாதவளும்வானின் கோமகளும்பல
பூதவர்களுஞ்சூழ நாதனேவந்தருள் (வை)

---

௪௧. இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

சுப்ரமண்யனேநீவா சிவ சுப்ரமண்யனே நீவா

அநுபல்லவி.

இப்புவிதனிலெங்கும் இருவினைதீர்த்தோங்கும்
மெய்ப்பொருளாக மிந்த மேதினியில்விழங்கும்

சரணம்.

1. தந்தை தாயு மாங்கேன் உனைத்தஞ்சமென்றேயடைந்தேன்
பந்தபாசத்தைமாற்றி பரவசமதுண்டாக்க (சுப்)

2. சத்திதருபுதல்வா உயர் முத்தியருள்முதல்வா
எத்திசையும்போற்றும் எழியருளந்தோற்றும் (சுப்)

3. குன்றுக்குடியிலிருந்தே சிவ் குமாரனே நீசிரந்தே
பொன்றுப்பதவிதனைப் புன்மையேனுக்களிக்க(சுப்)

4. நித்தியதத்துவனே வேலா நின்மலாதித்தவனே
வெற்றிவேற்கரமதில் விழங்கமயில்மீதேறி(சுப்)

5. உற்றபொருளை றியேன்நான் உனைச்சண்டு தோத்தரியேன்
குற்றாலந்தனிலுறை கூத்தன் திருமகனே(சுப்)

6. அய்யாகிருபை தருவாய் மைந்தன் ஆண்டவனுர்ருள்செய்வாய்
ஒய்யாரமாகமுருகையா எனக்கிரங்கி (சுப்)

---

௪௨. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

உன்பாதம்யெனக்களிப்பாய் உனைநம்பினேன்
உன்பாதம்யெனக்களிப்பாய்

அநுபல்லவி.

தென்பொதிகைமலைவாழ் சிவனார்திருமகனே
திருப்பாற்கடல்துயிலும் ஸ்ரீமான்மருமகனே

சரணம்.

1. பாரேரிகழயிந்தப் பாரினில்நான்பிறந்து
பலகொடுவினையான பாவந்தனைச்சுமந்து

நீர்மேற்குமிழியான தேகந்தனையுவந்து
நினையாமலுன்பாதத்தை மிருகம்போலேதிரிந்து
நெஞ்சம்வாடினேன் தஞ்சம்நாடினேன்
கெஞ்சியாடினேன் அஞ்சிப்பாடினேன் (உன்

2. கண்ணாலுனைக்கண்டால் கர்மவினைகள்தீரும்
காசினியெங்குந்தேடி கவலையடைந்தேன்பாரும்
விண்ணோபொன்னுலகமோ வீற்றிருப்பது வாரும்
வேதனையடையாமல் விரும்பிக்கிருபைக்கண்பாரும்
வேதநாதனே நாதபோதனே
போதநீதனே புண்யசாதனே (உன்

3. நாய்நரிக்கிரையான தேகந்தனைவிரும்பி
நான்பட்டுழலுவதை நாதனேநீதிரும்பி
சேய்போலெனைநினைத்து சித்தம்வைத்துவிரும்பி
தேவனேநீகார்ப்பீர் திரணம்நான் சிறுதும்பி
தேசதேசனே தேவர்நேசனே
வாசபோசனே மகிழுலாசனே (உன்)

4. பாழானமாதர்கள் படுவலைதனிற்பட்டு
பக்திவிசுவாசத்தை பற்றறநான்விட்டு
கேளாதொருவர்சொல்லைக் கிருமியால்நான்கெட்டு
கெவுரவத்தாலலைந்தேன் பிரந்தநாளதுதொட்டு
கிரியில்வாசனே அரியினேசனே
விரிவிலாசனே விமலபூசனே (உன்)

5. சாதிசமயமென்று தன்னகத்தாலேநினைந்து
தானேயாணவத்தாற்சம் சாரந்தனில்நனைந்து
ஆதியேயுன்பாதம் அருகுறமற் றிரிந்து
அநாதியாகினேனிப்போ தாள்வாயருள்சுரந்து
ஆதிமூலனே நீதிபாலனே
சோதிலோலனே சுந்தரசீலனே (உன்)

6. பேதையாண்டவன்செய்த பிழைகள்யாவும்பொருத்து
பேரின்பவாழ்வினை யென்னெஞ்சிலே நிருத்து
பாதைதெரியாமலே பட்டுப்பாதவித்து
பாவியுழன்றிடாமல் வருவாய்கிருபைபாலித்து
பாவநாசனே பழனிவாசனே
கூவியாசினேன் கொள்வாய்தாசனே (உன்)

---

இந்துமுகிவானிகியென்றவர்னமெட்டு.

கரு. இராகம்-பியாக்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

தருணமிதுவே தயவுசெய்ய சாமிநீவாராயுந்தன்
தாளிணை தாராய்

அநுபல்லவி.

அருணை கிரியில்வீற்றிருந்து அரசு செய்வோனே
யேழை வஞ்சலென்றுநான் தேடியேவந்தேன்
அருள் [illegible] னே நல்ல நெரியிலுள்ளோனே

சரணம்.

1. திருமதில்தன்னிற்றிசைகடற்றண்ணீர்திரண்டுமே
மோதஅதை அருமையாக வுலகோர்பார்த்து
அசமகிழ்ந்தோ தவனக்கதுவோபிரமாத (தரு)

2. மலைச்குகைதனில்வசித்திருச்கிறீர் மனமகிழ்வாக அந்த
மர்மஞ்சண்டுநான்றேடியேவந்தேன் மனமெலிவாக
அருள்மார்க்கமதாக (தரு)

3. சிந்தைமெலிந்து தேடியான்வந்தேன் தீவினைதீராய்
இந்தஜென்மமினிநான்யெடுத்துழலாபல்தீர்த்தருள்
தாராய் ஒருவார்த்தை நீகூராய் (தரு)

4. அரிந்திருந்தேனைடவதிக்காளாயாக்சல் நீதியோஇந்த
அவனிதனிலுன்மிகவும்யேழை உனச்குவாதியோ
இது அடியேன் கெதியோ (தரு)

5. நீந்தியரியார் ரிரிலமிழ்ந்தும் நெரியினைப்போலநா
நெரியிலாதவுலகவாழ்வினின்றேன் கற்போலே
உன்றன் நீதியிற்பாலே (தரு)

6. இலவுகாத்தகிளிபோலாகி இடைந்து வாடினேன்
உந்தன்இணையடியைப்பெறவே யாண்டவன்
இன்பாப்பாடினேன் இதோ எழுந்து கூடினேன் (தரு).



கச. இராகம்-பியாக்-இதுவுமந்தவர்னவெட்டு- தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னெதிரினில் உன்னடியிணையெப்பநான்காண்பேன்

அநுபல்லவி.

தன்னிகரில்லா பொன்னின்மணியே
சாதுசனர்கள் அணியும்பணியே

சரணம்.

1. முன்னம்நீரொரு முனிவனுக்குமே
மோட்சநெறிதனை மொழிந்திருந்துமே
சின்னவன் யென்னைநீர் ஸ்திரப்படுத்துமே
சேவிக்கவுன்னிறு பாதம்விரித்துமே (என்)

2. தாசிகள்பாதத்தை தஞ்சமெனநம்பி
தன்மதிகெட்டுப்பின் உன்பதத்தைநம்பி
ஆசிபுரிந்த வருணைகிரிக்கிநீர்
அன்றளித்தபதம் அளிக்க விரைவில் (என்)

3. பசுக்கள்மேய்த்திடும் பாலகனைப்போலே
பாதைதனில்நின்ற நாவலதின்மேலே
வசப்படுத்தியே வாணி திருவாக்கால்
வையகந்தன்னில் உயர்ந்ததைக்கேட்டநீர் (என்)

4. கோபித்தெந்தன்பேனீ துறப்படாதே
குழந்தையென்னைக் கைதவாவிடாதே
பாபிக்கி உந்தன் பதிதரவென்வாதே
பாலித்தருளுமை பாலனே யிப்போதே

5. பத்மமொடுருத்திராக்க மணிந்திட
பன்னிறுபுயமும் பூரித்திலங்கிட
இத்தரைமீதினில் பேழைக்கிரங்கிட
ஏகாந்த போகத்தை யானுமடைந்திட (என்)

6. காரணமாகக் கதிர்வேல்பிடித்தவா
கண்டகரைத்துண்ட மாக்கியழித்தவா
வாரணந்தன்னை வனத்திலளித்தவா
வந்திரட்சித்தாண்டவனைத் திருத்தவா (என்)

---

௬௫. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

மயிலேறி வருவாயே வந்தெனக்கு
வரங்களைத்தருவாயே

அநுபல்லவி.

குறிலொடுநீசிரந்து குன்றுக்குடி தூரந்து
வயில்வேல் தனையெரிந்து வருவாய்பவந்துரந்து

சரணம்.

1. அடியவர்க்கெளியோனே அண்டர்கட்சரியோனே
கடிமணச்சிரியோனே கருணைக்கேயுரியோனே (மயி)

2. அன்பர்க்கனுகூலனே ஆதியுமைபாலனே
இன்பந்தரும்வேலனே இருவர்மணக்கோலனே (மயி)

3. ஆறுமுகத்துடனீராறு புயத்துடனே
தாரினசைப்புடனே தையல்வள்ளியுடனே (மயி)

4. ஆண்டவனைரெட்சிக்க வேண்டிமனதிரங்கி
நீண்டமுடியிலங்க நிதமுமெனக்கெதிரே (மயி)

---

௧௬. இராகம்-சாவேரி-தாளம்-மிஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி.

இன்னஞ்சிறுகுழந்தை என்றுமனசிலேநீ
எண்ணி இருக்கின்றாயோ

அநுபல்லவி.

முன்னம்பிரமன்றன்னை முனிந்துசிறையிலிட்ட
அன்னம்பொலியுஞ்செந்து ராறுமுகதேவனே

சரணம்.

1. தந்தைவயசுமுத்தித் தளர்ந்துதிரிகின்றாரே
தமயன்றன்கால்நுடமாய்த் தவழ்ந்தேயிருக்கின்றாரே
இந்தப்பருவம்வந்தும் இன்னம்கவனிக்காது
இருப்பதுனக்கழகோ விறைவனேஎனக்கோது (இன்)

2. செந்தூர்தனிலேவந்து சிறுவர்துணையாய்க்கொண்டு
சென்றுமயேந்திரபுரி சூரனைநீர்வென்று
கந்தமலர்க்குழலாள் சன்னிபானையையன்று
கருதிப்பரங்கிரியில் கடிமணஞ்செய்தாயன்று (இன்)

3. இந்தக்கோலங்கள்செய்ய இளம்பருவமல்லவோ
பேழைபெனாட்சிக்க இன்னமும்நாட்செல்லவோ

அந்தக்கரணத்தினல் அடியேன் றுதிசொல்லவோ
அருளின்பலத்தினலே அப்பம்புலனைவெல்லவோ (இன்)

4. ஞாலந்தனிலாண்டவன் றடிப்பணிந்தேனையா
நாள்தோறும்உன்னழகை பார்க்கநினைந்தேனையா
மாலின்மருகனேநீர் வரவெணுமுருகையா
வந்தென்மனக்குறைபை மாற்றிக்ருபைசெயப்பா (இன்)

---

கஎ. இராகம்-சுத்தசாவேரி - தாளம்-ரூபகம்.

பல்லவி.

சாமி நாதனே யெந்தன் சஞ்சலந்தனைத்தீர்த்து
சர்ச்சனருடன் சேர்ப்பாய்

அநுபல்லவி.

காமியாகியானுன்னை காணவந்தேனே மெய்யா
கருணையெனக்களித்துக் காரும்பன்னிருகையா

சரணம்.

1. உடல்பொருளாவி மூன்றும் உனக்கேநான்றத்தஞ்செய்தேன்
ஓயாத்துயர்ப்பிரவி ஒழிந்திடச்சித்தம்வைத்தேன்
வடகிரிதனில்வாழும் வடிவேலாபுத்தமுதே
வருவாய்க்ருபைசெய்து மயிலேரிநீபிப்போதே(சாமி)

2. சுத்திச்சுத்திநாணின்னம் கருணையிரங்கலையா
கந்தாநீ யேழையிடம் வரவேயெதுதுலையா
சத்திபுமைபளித்த சண்முகனேமலையா
தமியேனுறைபுன்செவி தனில்வந்துகேட்கலையா(சாமி)

3. பேழைபைக்கறைபேற்ற எண்ணமுனக்கிருந்தால்
இருட்டோபேமங்கள்தானே என்னிடம்வரவென்றால்
வாழைமீன்கள்புரளும் வைபாயுரியாவுன்றாள்
வாழ்த்தும்ஆண்டவனுக்கு வரமளித்தாழவென்பால்(சாமி)

---

கஅ. இராகம்-ஆரபு-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வருவாய் மயூரக்கர்த்தனே மனதிரங்கி
வருவாய் மயூரக்கர்த்தனே

அநுபல்லவி.

வருவாய்மனதிரங்கிவள்ளி தெய்வானையோடு
குருவாயிருந்தெனக்குக் குருவுபதேசஞ்செய்ய (வரு)

சரணம்.

1. சாலவித்தைகளான சகத்திற்பொய்வாழ்வைநம்பி
தானெனுமகநதைபாற் றட்டழிந்து ததும்பி
ஓலமிட்டுயானுன்னை யுறுதியாகவே நம்பி
ஓகோவுனைப்பணிந்தேன் உத்தமசீலன் தம்பி (வரு)

2. கண்ணிமை மூடிவிட்டாற் காணமுடியாதையா
காலங்கழிக்குமுந்திக் கருணைபுரிவாய்மெய்யா
எண்ணிபடிஎந்தன் இருவினைவிலக்குந் துய்யா
ஏமாந்திருந்துவிட்டேன் இணையடிதாருமய்யா (வரு)

3. தந்தை தாயுறவெல்லாந் தரையிலிருக்குமட்டே
க்ஷணத்தில்மறைந்துவிடுஞ் சந்தையில்முழக்கொட்டே
கந்தநாதனேயுந்தன் கருணைக்கேயுடன்பட்டேன்
கார்த்திகேயனேயுன்னைக் காணமலையைவிட்டே (வரு)

4. முன்செய்தவக்குறையால் மூடனாகப்பிறந்து
மூலமந்த்ரமதை மொழியாமலேமறந்து
கஞ்சமலர்ப்பதத்தாள் கணவா உனைத்துறந்து
காலஞ்செலாதாண்டவன் கண்ணினெதிர் சிறந்து (வரு)

---

கசு. இராகம்-கவாப்-தாளம்-சாப்பு.

பல்லவி.

கண்ணிகள்.

1. அந்தரங்கமாகவே கந்தாவுன்னைக்காணவே
பெந்தன்வினைமாழவே பின்படிதில் மூழ்கவே (அந்)

2. வந்த வினைகொஞ்சமா வாடினேனுன் தஞ்சமா
இந்தமதிமிஞ்சுமா ஏழைபுலன் கெஞ்சுமா (அந்)

3. சூட்சமதை நாடியே தூயர்தனைக்கூடியே
காட்சிபொருத்தேடியே கந்தாவந்தேனோடியே (அந்)

4. வர்மமென்மேலேனையா வாடியான்வந்தேனையா
தர்மமல்லவே அய்யா தற்காருமெனைமெய்யா (அந்)

5. கோலவள்ளிநேசனே குன்றைமலைவாசனே
பாலசுகபோசனே பன்னிருகைராஜனே (அங்)

6. பத்தன் ஆண்டவன் றினம் பாடியேபணிந்தனம்
அத்தனருள்வந்தனம் ஆதரிப்பாய் தந்தனம் (அங்)

---

உ௯. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி-சாப்பு.

பல்லவி.

பாதுகாருமையா அடியனெனைப்
பாதுகாருமையா

அநுபல்லவி.

கோதில்லாமலெமவாதையிலா தெனை
மேன்தயபதாக வோராதரவு சொல்லி (பாது)

சரணம்.

1. சென்மத்திரைகடக்க வரியேன்நான்
சீறும்புலியின் குண வெறியேன்
கன்மத்துறை மறக்கத் தெரியேன்நான்
காரிருளிற் கொடிய கிரியேன் (பாது)

2. வாசமான வழிநாடேன் கெட்ட
மதியையன் றியொன்றைத் தேடேன்
பாசமன் றிப்பத மூடேன்கொடும்
பாவியுன்னருளைப்பா டேன் (பாது)

3. பாழுந்துர்ச்குணங்கள் கொண்டுவரும்
பாமாதர் முகத்தைக் கண்டு
நாளுஞ்செய்வேனவர் தொண்டுவிட
நல்லவாமழிப்பாய் விண்டு (பாது)

4. மானிலத்தாசையை வெறுத்துதுன்
மார்க்கமதியைக்கரு வருத்து
நானினிப்பதம்பொருத் திருத்துகந்த
நாதனேயுன்னரு ளுருத்து (பாது)

5. ஆணுவமாயையை யகற்றிதாசன்
ஆண்டவன்பதம்பெறப் புகட்டி
தோணும்பலமதிபை விரட்டி உந்தன்
றெண்டுசெய்யும்படிக்கி சிருட்டி (பாது)

---

உக. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

அயர்வுற்றேனே அய்யனே யுந்தன்
ஆறுமுகமும் பொன்னிறையுங்காணாமல்

அநுபல்லவி.

அயர்வுற்றேனே யேழை துயர்பொருக்சாமல்
கயவற்கதிகம் கடைக்கண்ணுற்பாராய் (அய)

சரணம்.

1. அங்குமிங்குந்தானா யமர்ந்தசோதியை
ஆதிமூலமெனவழங்கும் நீதியை
தொங்குங்குழையுடன்றேன்றும் விபூதியை
தூங்கப்பவனியைத்துதிக்கக் காணாமல் (அய)

2. திக்கெங்கும்புகழுந் தீன தயாளனை
தித்திக்கும்பாகுரை தேனாள் மணாளனை
அக்கரவணிந்த அரனார்பாலனை
அண்ணாலேயுன்னிணை சண்ணினிற்காணாமல் (அய)

3. தேவமனோகர தீரப்ரதாபனை
சித்தர்முத்தர்புகழ் செந்தினிற்கூபனை
மூவர்முனிவர்க்கு முன்னின்றவாபனை
முத்தனைச்சித்தனை நித்தனைக்காணாமல் (அய)

4. கோடிசூரியப்ரகாசத்தின் றோற்றனை
கொடியதீவினை கொடுக்குங்கூற்றனை
ஆடிப்பாடித்தினம் ஆண்டவன்போற்றிய
அய்யனை மெய்யனைத் துய்யனைக்காணாமல் (அய)

---

உஉ. இராகம்-கானடா-தாளம்-கெண்டஜாதிதிரிபுடை.

பல்லவி.

எனின்னநந்தாமதம் அருள்புரிய
எனின்னநந்தாமதம்

அநுபல்லவி.

மானின்மானினை மணம்புரிலோலனே (எனி)

சரணம்.

1. கற்பகத்தருநீழல் காணக்கடையேனுக்கு
அற்புதமாகுதே அய்யனேநானென்செய்வேன் (ஏனி

2. காணும்பிரபஞ்சத்தைக் கடக்கவழி தெரிந்து
தோணும்படியெனக்குத் தூயமதியளிக்க (ஏனி

3. பாதகப்பெருஞ்சுமைப் பாரந்தனைபிரக்கி
நாதநிலைபிலெனை நாடிச்சேர்ப்பதர்க்கு (ஏனி

4. வெட்டவெட்டத்தளிரும் வேயின்புதரிலெனை
இட்டமில்லாதகற்றி இணையடிசேர்த்திட (ஏனி

5. அஞ்சுங்கொலைத்தொழிலை அருத்திடும்படிசெய்து
பஞ்சுபோற்பரத்திடே பாதத்திற் சேர்த்திட (ஏனி

6. காமக்குரோதமெனும் கருவிகள்தனைவென்று
நாமமில்லாதகற்றி நலிவைத்தணிப்பதற்கு (ஏனி

7. அரும்பொருள்தனைநாட வைம்புலனையொடுக்கி
விரும்பிநடப்பதர்க்கு விமலனேவழிவிட (ஏனி

8. கொண்டசெருவமதைக் குலவேறவேகொய்து
சண்டன்வதையிலாது தடுத்தெனையாள்வதற்கு (ஏனி

9. கோதையர்மயலினைக் குலதெய்வமெனநம்பும்
வாதைதனையொழித்து வந்தேயடிமைகொள (ஏனி

10. ஆண்டவன்தினந்துதி யருந்தமிழுக்கிரங்கி
வேண்டும்வரமதனை விமலனேயளித்திட (ஏனி

---

உரு. இராகம்-தேசிகதோடி-தாளம்-சாப்பு.

திபதை-கண்ணிகள்.

1. ஏழைமீதிலென்னவர்மம் இத்தனைகோபம் எனை
யாழடிமைகொள்வதற்கு அஞ்சுதோபாபம் (ஏழை)

2. வாழுமாந்தர்தனக்கிடர்வன்மை செய்தேனோ யெந்த
நாளுமுந்தன்பாதந்தன்னை நாடாதுய்த்தேனோ (ஏழை)

3. சேர்ந்துவாழுஞ் சொந்தக்களை சிதாடித்தேனோ கொடுந்
தீவினைக்கேஇருப்பிடமாய்த் திரமெடுத்தேனோ (ஏழை)

4. பத்திசெய்வோர்தனைபிகழ்ந்துபாபஞ்செய்தேனோ இந்தப்
பாரின்மீதுகொடியனென்று பேரெடுத்தேனோ (ஏழை)

5. பசித்திருப்போர்முகம்பார்த்து பாவியுண்டேனே நல்ல
பட்சமுள்ளஉறவினரைப் பரகசடித்தேனே (ஏழை)

6. தஞ்சமென் றுவந்தபேரைத் தவரவிட்டேனே உயர்
தாசபூதர் தன்னையேசித் தவர்செய்திட்டேனே (ஏழை)

7. இரந்திடுவோர்க்கீயும்போதீயாதே யென்றேனே வேரே
இப்புவியில்கொடுந்தன்மை யேதுசெய்தேனே (ஏழை)

8. வாய்விடாதசெந்துக்களை வதைகள்செய்தேனையாரும்
வைத்திருக்கும் பயிருகளை மரைவிற்கொப்தேனே (ஏழை)

9. பிரர்பொருளுக்காசைகொண்டு பேதஞ்செய்தேனேஎனைப்
பெற்றெடுத்ததந்தை தாயைப் பிதற்றிவைதேனே (ஏழை)

10. விலகிடாதநேசர்களை விலகச்செய்தேனே பொல்லா
வீணருடன்சேர்ந்துநானும் வியர்த்தனானேனே (ஏழை)

11. யென்னதவர்செய்த போதும் இறுதிநீயன்றிநா
னெய்துதற்குவழியைக்காணே னிதுவே செட்நன்றி (ஏழை)

12. அன்னவூர்திதனையடக்கும் ஆறுமுகதேவா தாசன்
ஆண்டவனேத்தும்சமன்றி அருள்செய்துகாவா (ஏழை)

---

உச. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

தெரிசனைதருவாயே யேழைநான்
தெரிசிக்கவருவாயே

அநுபல்லவி.

பரிசனஞ்சூழவன்பர் பாடித்துதிக்கும்வேலா
பரிதபித்தேனேழை பாரும்பாம சிலா (தெரி)

சரணம்.

1. திரிபுவனரட்சகா சித்தர்மனப்பட்சகா
கரியுரித்தோன்வத்ஸகா கருணைபுரிரட்சகா (தெரி)

2. அசுரர்கள் குலகாலா அருளெனக்களிவேலா
அசாம்புகழுஞ்சீலா ஆதிமத்யாந்த லோலா (தெரி)

3. தீரசூரசங்காரா தேவர்பணிசிங்காரா
கோரகுண கெம்பீரா குருமுனிக்குபசாரா (தெரி)

4. மலைமேலிலங்குநீதா வள்ளிநாயகிநாதா
கலைபோல்முகவினோதா கருணையெனக்குத்தாதா (தெரி

5. ஆறக்காவினோதா அருணகிரிதன்போதா
ஈரம்புனையும் நீதா யேழைக்கிரங்கவாதா (தெரி

6. அரனார்மகிழும்பாலா ஆண்டவன்பணிசீலா
குராமாதணையும் லீலா குமாரகுழந்தை வேலா (தெரி

---

உரு. இராகம்-மோகனம்-தாளம்-மிஸ்ரம்.

பல்லவி.

வேலாயுதமிருக்குது நமைரட்சிக்க வேலாயுதமிருக்குது

அநுபல்லவி.

பாலகனுகயிந்தப் பாரின்மீது பிரந்து
கோலாகலங்கள்செய்யும் குமாரவேள்தன்சொந்த (வே

சரணம்.

1. விஞ்சைத்தொழில்மரைய மேவிக்கிரவுஞ்சத்தில்
அஞ்சியோடியொழித்த அவுணன்பகையைவென்ற (வே

2. சூரர்தேவரைவெல்ல சுந்தரர்பாற்செல்ல
கோரமாகச்சத்தி குழந்தைகையிலளித்த (வே

3. செந்தூர்தனிலிரங்கி சிறுவருடனேதங்கி
விந்தைநகரதனை வெந்துநீரர்கவிட்ட (வே

4. ஒருவருக்குமஞ்சாதே யோங்கியிருந்தசூரன்
கருவமதைத்தொலைத்து காலின்கீழடக்கிய (வே

5. குன்றைக்குடிமலையில் குராமாதகமகிழ
நின்றுதிகமொழியாய் நிரைந்துவிழங்குகின்ற (வே

6. அஞ்சலென்றுபணியும் அடியர்பவவிருளை
பஞ்சுபோற்பரத்திடும் பார்வதிசுதன்கையில் (வே

7. பூர்வவினையினாலே புவியிற்பிரந்துழலும்
பேர்கள்பவப்பிணியைப் பிழந்துவிலக்குகின்ற (வே

8. ஏகப்பிரமமதாய் இருந்தெனைத்தன்னடிச்சே
யாகக்கிருபைசெய்து ஆண்டவனைரெட்சிக்க (வே

௨௬. இராகம்-உசேனி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கண்டாற்போதுமே கந்தன்
காட்சித்திருவடி மாட்சிமையாகவே (கண்)

அநுபல்லவி.

தண்டகாரண்யரும் நவயோகிமுனிவரும்
தெண்டனிட்டேதினந் தெரிசிக்கும்பாதத்தை (கண்)

சரணம்.

முத்திக்கிவித்தான முருகன்றிருவடியை
தித்திக்கும்பாகைப்போற் றெவிட்டவேநாமுண்டு (க)

எத்திசைதனையும்வென்று யேரிமலைமேல்நின்று
பத்தியதிருவடிகண்டு பாடிப்பாடிக்கொண்டு (க)

பார்வதிமனமகிழ்மைந்த பாமபதிதன்சொந்த
பார்புகழ்வேலனந்தப் பாதந்தனையழுந்த (க)

அற்புதமிகு தமிழ்சொரியும் ஆண்டவனுக்கருள்புரியும்
தற்பானவனுலகரியும் சதுர்மறைநாடித்திரியும் (க)

௨௭. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-கெண்டஜாதி-மிஸ்ரம்.

பல்லவி.

இத்தனைதாமதமேனையா யீராறுகையா
இத்தனைதாமதமேனையா

அநுபல்லவி.

இத்தனைதாமதமேது சித்தமுவந்தருள்செய்ய
கத்தனேதிருமயுரத் தத்தனேமுத்தனேயென்மேல் (இத்)

சரணம்.

கந்தனேயுன்பாதம்பணிந்தேன் அடியேன்சிரம
காலடியிருத்தத் துணிந்தேன்
நொந்துமேதுயரால் தணிந்தேன் நுண்ணறிவுள்ள
நட்பநெறி தேடத்துணிந்தேன்
மைந்தனேமபங்கேலென வந்தருள்புரிவாய்சாமி
மலாடிதனைத்துதிக்க மைபல்கொண்டேன்காமி (இத்)

2. காணும்பொருள்சகலம்விட்டேன் கதிபைநாடி
பூணுதர்க்குன்பாதந்தொட்டேன்
தாணுவேதுறையுறைத்திட்டேன் சகலமான
சங்கடமுந் துரந்துவிட்டேன்
வேணுமென்றபொருள்தனை வேலவனேநீயளித்து
ஆணுவமதைபகற்றி யடியாருடனேசேர்க்க (இத்)

3. குன்றைமலைகோவில்கொண்டவா குமாரதினை
கோலவெடம்பூண்டு கண்டவா
அன்றமரர்துதி பூண்டவா தாசனிந்த
ஆண்டவனுக்கரு ளாண்டவா
நன்றியென்றுமேநினைப்பேன் நாதனேகருணைசெய்து
மன்றுளாடும்பாதமதை மனமகிழ்ந்தேயளிக்க (இத்)

உஅ. இராகம்-சஹானா-தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஆதாரம்வேறேயேது எனக்குஉந்தன்
பாதாரவிந்தம் அல்லாது

அநுபல்லவி.

காதாரவுன்புகழைக் கருதியறியாமல்நான்
வாதானபந்தத்தினல் மனமெலிந்திருக்கின்றேன் (ஆ)

சரணம்.

1. பெற்றார்பிறந்தார்தன்னைப் பிரீதியாக விரும்பேன்
பேரின்பவாழ்வுக்கு நாயேன்ஒருதரும்பேன் (ஆ)

2. மண்ணும்பொருளும்பெண்ணும் மனதிலுறுதிகொள்ளேன்
எண்ணும்எண்ணத்திற் கருளிசையவுனையல்லாது (ஆ)

3. எந்தத்தெய்வமானாலும் இருதயத்திற்பதியேன்
சொந்தத்தெய்வமாஞ்செம்பொற் சோதியுனையல்லாது (ஆ)

4. ஏழைகதிபைநோக்கி இரங்கித்தயைபுரிந்து
கோழைமனதகற்றிக் கொள்ளவுனையல்லாது (ஆ)

5. ஆண்டவன்றினந்துதி ஆதிப்பரமநாதா
வேண்டும்வரத்தைத்தா விமலாவுனையல்லாது (ஆ)

உசு. இராகம்-பூபாளம்-தாளம்-மிஸ்ரஜாதி.

பல்லவி.

கந்தநாதனேயுந்தன் அந்தமுழுதுங்காண
காதலித்துவந்தேன் ஆதரித்தாள்வாய்

அநுபல்லவி.

விந்தைபதாகவேநீ சொந்தமயிலிலேறி
கந்தமலர்க்குழலாள் கன்னிவள்ளியுடனே (கந்)

சரணம்.

1. எந்தனையுகமாக இப்பிறவியுழல்வேன்
இன்னமனமிரங்கேல் யெப்போக்கெதிபெறுவேன்
பத்திசெயுமடியார் பந்தத்துடன்வருவேன்
பார்த்திடத்தோணிநின்றுற் பதத்துக்காவிதருவேன் (கந்)

2. வெட்டுப்பட்டேயெரியும் விறகுக்கட்டையென்றெண்ணி
வேதனைநானடைந்து வெகுவாகமனங்குண்ணி
கட்டுப்பட்டேயிருக்கும் கன்னியர்மயற்கண்ணி
கட்டவிழ்த்துமேயுந்தன் கழலிணை தனைநண்ணி (கந்)

3. தேடித்தேடியலுத்த தேசம்உலகில்மெத்த
திக்கெங்குங்காணுமற் றிரிந்தேனுன்வாரிவத்த
கூடிக்குன்றையில்வந்து கொண்டேனுன்பதிநத்த
குலுங்குமலர்ப்பதத்தைக் கொடுப்பாயாண்டவன்பத்த (கந்)

---

நடூ. இராகம்-முகாரி-தாளம்-மிஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி.

யெப்போதெனக்குகிடைக்கும் உன்றிருச்சேவை
யெப்போதெனக்கு கிடைக்கும்

அநுபல்லவி.

முப்போதுமமரர்கள் முடிபணிந்துமேநிற்கத்
தப்பாமற்சாயுச்யம் தந்தாள்கந்தநாதனே (யெப்)

சரணம்.

1. யேழைபங்காளனே யெழியவர் தோழனே
இந்தப்பிறவிதன்னை யீடேற்றும் லோலனே

தாளடிபணிந்துநான் றண்டமதுசெய்தேனே
தாமதமாயிருத்தல் தர்மமோமெய்யனே (மெ

2. நல்லமுயற்சிகளை நான்செய்யத்தோணேன்
நாதனேயுன்பாதம் நாடியேபூணேன்
புல்லனுன்றனழகைப் புந்தியிற்காணேன்
பொய்யாற்சடமெடுத்த புலையன்யான்வீணன் (மெ

3. பரலோகசாதனம் பற்றுதற்கரியேன்
பாவிமாதரின்பத்தை பற்றியே திரிவேன்
கரதலாமலகம்போற் காணுதற்குரியேன்
கடைக்கண்ணாலாண்டவன்கலிதவிர் சிரியேன் (மெ

௱௩௧. இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆறுமுகத்துடன் பொன்னீருமிலங்கவந்து
அடியனைக்காத்தருள்வாய்

அநுபல்லவி.

திருமுனைக்கண்டாற் ஜென்மப்பிணிகள்யாவும்
வாருமருள்சுரந்து வர்ணமயிலிலேறி (ஆ

சரணம்.

1. கோரியவரங்கள் கொடுக்குந்தயாளனே
குறமாதுடனொருமாது மணாளனே
ஆரியநேயர்க ளன்பிற்குநாளனே
அகுதியிதுதருணம் அப்யவந்தாளனே (ஆ

2. குன்றுமலைகடோறுங் கோவில்கொண்டிருப்பவா
குணக்கொடியோன்மனதைக்குறியாகத்திருப்பவா
என்றைக்கும்நீகெதி எனில்வினையருப்பவா
எழுந்துவரவேணும்நீ பென்மனமிருப்பவா (ஆ

3. செந்தில்வழங்கும்வெற்றி சேவற்கொடிதுலங்க
தேவிமாரிருபுறஞ்செழித்து மனங்குலுங்க
நொந்திருப்பவர்வினை நொந்துதினங்கலங்க
நோக்கியேபாண்டவன் பாக்கியம்பெற்றிலங்க (ஆ

௩௨. சகிபிரிவதென்னம்மா வென்றவர்ணமெட்டு.

பல்லவி.

வர்மம் ஏழைமேல் யேது
வர்மம் ஏழைமேல்

அநுபல்லவி.

தர்மமாயிது தங்கவேலனே (வர்மம்)

சரணம்.

1. கதியழிப்பவா கடுங் காலன்மாளவா (வ)
2. பவச்சடலடக்க வுந்தன் பதத்திணையடுச்க (வ)
3. விருதுகொண்டவா அன்பர் கருதுகின்றவா (வ)
4. எத்தனைகாலம் உனை யேத்தியேயோலம் (வ)
5. சித்தசன்கணை தனை வெத்திகொண்டனை (வ)
6. தேவர்மாதவா ஏழை சேவித்தோதவா (வ)
7. பாதபங்கயமே சூடிப் பற்றினேன்சிரமே (வ)
8. எத்திசைதிகழ இந்த யேழைநான்மகிழ (வ)
9. கருதினேன்பாதம் யேழை உறுதியாய்நிதம் (வ)
10. ஆண்டவன்பணிய தயர் அப்பனே தணிய (வ)

---

௩௩. இராசம்-ஹிந்துஸ்தான்-காப்பி-தாளம்-ஜம்பை.

பல்லவி.

ஆண்டவனேயருள்செய் மயூரகிரியாண்டவனேயருள்செய்

அநுபல்லவி.

தாண்டவமாடிய சங்கரன்குருநாதா
தவமுனிவர்கள்பணி தாமரைமலர்ப்பாதா (ஆ)

சரணம்.

1. வேண்டியகாலத்தில் விரும்பியுனைச்குரியேன்
விரகவெறிபதனால் வேதமுடிவரியேன்
தூண்டும்அவலமான துன்மதியைபரியேன்
சுத்தநிற்குணமான பொருளதனைத்தெரியேன் (ஆ)

2. பாசபந்தங்களொனும் பவக்கடல்தாண்டரியேன்
பற்றற்றுலகிலுந்தன் பதம்படிக்கக்குரியேன்
ஆசாபாசங்களான வத்தனைக்குமுரியேன்
அரிவிலியானவென்னை அய்யநீயா தரியேன் (ஆ)

3. சொடியன்சொடியனென குரிக்கப்பேரெடுத்தவன்
குணத்திற்சுவானம்போல கொள்கையைவெருத்தவன்
குடிகள்புலேகள்தனைக் கொண்டங்கம்பெருத்தவன்
குவலயத்தோர்களைக் கொடுமையாய்க்கடுத்தவன் (ஆ)

4. என்னைப்போலக்கொடிய பாவியுலகிலில்லை
இதுவோஓர்பிரமாதம் இன்னமிருக்குந்தொல்லை
கொன்னைக்குன்றைக்குடியிற் குமாரவுன்றிருவெல்லை
கொடுக்கிலாண்டவனுக்கு குரைவதுவொன்றுமில்லை (ஆ)

---

நூச. இராகம்-காப்பி-தாளம்-ஆதி.

பல்லவி.

கந்தனேயுன்றன் கருணையென்றுகிடைக்கும்
கதிர்வடி வேற் (கந்)

அநுபல்லவி.

அந்தகாரமான இருளைவிட்டுநான்
நின்னைதயடையாமல் நேசித்துவாழ்ந்திட (கந்)

சரணம்.

1. சூழும்நிர்மூலிகள்தன்னை நானழிக்க
சூட்சுமதேகத்தனை வேர்றவொழிக்க
பாழும்புவிவாழ்வை பற்றுமறப்பழிக்க
பாவக்கணக்கான சுமையைக்கழிக்க (கந்)

2. பொய்த்தெய்வங்கள்தன்னை புந்தியில்நாடாமல்
போனவழிமனம்போகவே விடாமல்
மெய்த்தெய்வம்உன்னைநான் வேண்டிக்கெதிபெர
வீணிற்காலங்கழியாமல் ஏழையேற்கு (சந்)

3. ஜெகத்திலுய்யாமற் றேரியிருந்திட
தேவனேயுன்பாதம் பாடியரிந்திட

இகத்திலாண்டவன் இன்பமுறும்படி
என்குறைதன்னையே யேந்துமேகேட்டிட (கந்)



நடரு. இராகம்-ஆரபி-தாளம்-ஆதி.

பல்லவி.

சரவணபவனே ஷண்முகனேயுன்
றருளிணை தருவாய் ஷண்முகனே

அநுபல்லவி.

வரகுணசுகனே மறையவர்கனே
கரபணதகனே கைலையோன்மகனே (சர)

சரணம்.

1. நெறிதருநிரையே நிரையொழிமறையே
மறையொளிர்பரையே பரைதருமிறையே (சர)

2. கதிதருநிதியே நிதிதருமதியே
மதியொழிபதியே பதிதருபதியே (சர)

3. நிரையுறுமதியே மதியொளிரவியே
ரவிநிரைபுவியே புவியொழிகெவியே (சர)

4. உருவெளியுருவே யுருவுணருணர்வே
கருவொழிதருவே தருநிரைமருவே (சர)

5. இனிவருமினிவே வினிநிரைகனிவே
கனிநிரைநனிவே நனிவுறுதனிவே (சர)

6. அருள்நிரைமணியே ஆண்டவன்அணியே
யருள்தொலைபிணியே மரகதவொளியே (சர)

---

நசு. இராகம்-கவாய்-ஏகதாளம்-சாப்பு.

கண்ணிகள்

1. பொல்லாதுமாயம்நில்லாது காயம்
கொல்லாமலென்தனைக்கொல்லுதையா உனை
யல்லாதுவேரே செல்லாதுவாரும்
உத்தமாயேழைக்கிரங்கியையா

2. எல்லாரில்வல்ல நல்லவனே நீ
என்று எனக்கிரங்கிவருவாய் நான்
கல்லாதமூடன் பொல்லாதகேடன்
கருதியிரங்கிக்கிருபைசெய்வாய்

3. தேடிக்குவித்தார் சுகித்தாரழித்தார்கள்
செத்தார்கள்போனார்களன்றினத்தே அந்த
பாடிக்கூடாரத்தைப் பார்த்துப்படுகாமற்
பாரும்வடிவேலா யென்முகத்தை

4. பெண்டுகள்பிள்ளைகள் சொந்தமதென்பாராம்
பிரிந்தசடத்துடன் போயிடாராம் அதை
கண்டுமினிச்செல்லக் கருத்தினிறைடாமற்
கார்த்திகேயனே நீபூர்த்திசெய்வாய்

5. செய்யும்உதவிக்கி அய்யாவேரேயேது
செய்யப்போரேனிந்த ஜென்மத்தில்நான்
உய்யும்வழிதன்னி லுற்றுத்துடர்ந்திட
உத்தமனேநீகருணை செய்வாய்

6. ஆண்டார்களெல்லாரு மாண்டார்களையனே
அதுசொந்தமல்லவென்று தெரிந்தேன்
ஆண்டவனையந்த அசழினிற்றள்ளாமல்
அணைதனைக்காட்டு மனமகிழ்ந்தே

---

௩௭. இராகம்-கமாஸ்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

அறுமாமுக வேலவனேவருவாய் நேயா
அரியேன்வழி தெரியேன்வா (அறு)

அநுபல்லவி.

திருவளர்குன்றைக்குடியில்மேவிய திருவே
சுகமுரவேயெனதிடாற வுனதிருவருடா (அறு)

சரணம்.

1. ஆதிபரம்பொருளோதியருளியஅணியே
நவமணியேகெடுபிணியெனைவிடாலமகமிட (அறு)

2. மோனமளித்திடும் ஞானமுரைத்திடும்முடிவே
கனவடிவேதிடுமுரசொலிபடவரைதுளைபட (அறு)

3. தேவர்கள்நேயனே மூவர்கள்மாபனேசெகனே
சிவன்மகனே யுனதிகழொழிபடமயில்நடமிட (அறு)

4. வள்ளிமணாளனே மாதவர்தோளனேவருவா
யருள்தருவாய்ததிவந்தெமவதையுஞ்சிதைபட (அறு)

5. பாசமொழித்திடும் வாசமளித்திடும் பானே
சுகதரனேகொடுபவமெனை விடவுனைவழிபட (அறு)

6. ஆண்டவன்அணி அழகியமணி அரனே
குருபரனேயுனதடிபிணைபடமிடியெனைவிட (அறு)

---

௩அ. இராகம்-கமாஸ்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சாமியேயின்னந்தாமத மேனையனே இது
சதிமோசமோ கெதிவாசமோ

அநுபல்லவி.

காமிமனமகிழ் கன்னிபகமகிழ் கதியே
தணிதியேபிதுததியெனைவந்தருள்செய (சாமி)

சரணம்.

1 சூர்துலைந்துமே துஞ்சிக்குலைந்துமே சுகமேபெற
சுரர்மகிழ்வுர துதிசெயவிடு சுடர்வடிவொடு (சாமி)

2. மங்குலந்தாவியே எங்குநீமேவியே மணாவே
அருள்நிரைவேயெனமனதிருளரடிருவருடா (சாமி)

3. அண்டர்முனிவரும்கண்டுபணிசோரும் அடியேற்கெதி
யளியேபொழிருமறைபுகள்பிரணவதரு (சாமி)

4. நீருங்கடம்பணி நேயர்துதிபணி நிதியே
மறைபதியே சிவநிமலவனருளமலமூலனே (சாமி)

5. வன்மம்அடியேன்மேலே வைத்தாலொருக்காலே
வருமோசெகிதருமோவெணமனதபமுறுமருளினைமறு (சாமி)

6. தாசனுன் ஆண்டவன் தாவிப்பணிந்தனன் தனமே
கனமனமேகதிதரவொருபொருளதுதனையளி (சாமி)

ரு-கூ. இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கெதியையளிப்பாய் கந்தா பரங்
கிரிவளர் கங்கை மைந்தா

அநுபல்லவி.

விதியை வெல்வதற்கொரு மதியையெனக்குரைத்து
பதியையளிப்பதற்கு சதிகளேதேனுமுண்டோ (கெதி)

சரணம்.

1. மோகக்கடலிலாழ்ந்தேன் நான்
முற்றுங்கெவியிற்றாழ்ந்தேன்
பாகப்படுத்துதற்குப்பரனேயுனையல்லாது
யேகத்துணையுமில்லையினியென்னசெய்வேனையா (கெதி)

2. மண்ணின்சுகத்தைநம்பியே நான்
மதிகெட்டு வாடிவெம்பியே
எண்ணின் அறிவிழந்து யேகந்தனைத்துறந்து
பெண்ணின்பிரங்கிரிந்து பேதைபானேன்மாந்து (கெதி)

3. கொண்டகவலைகொஞ்சமா இந்தக்
குவலயத்தோர்கள் தஞ்சமா
கொண்டல்தருக்கள்சூழுங்குன்றைமலைமுருகா
அண்டவுனையல்லாது அபயமிடம்வேறேயுண்டோ (கெதி)

4. தாமசஞ் செய்யலாகுமாவுந்தன்
தாளன்றியுயிர்போகுமா
யேமன்வதைபைநெஞ்சில்யெண்ணி யிளைத்தேன்பஞ்சில்
காமன்மாரனேசொந்தா கருணைதருவாய்விந்தா (கெதி)

5. வேண்டவரங்கொடுப்பவா மலை
மீதினில்வீற்றிருப்பவா
ஆண்டவன்படுந்துயர் அகற்றுவதருமையோ
தாண்டவம்புரி சிவசங்கரனருள் பாலனே (கெதி)

சடு. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-திஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி.

வாலவடிவேலவனேவா வரமருள
வாலவடிவேலவனேவா

அநுபல்லவி.

வாலவடிவேலவனே வந்துயேழைதனக்கிரங்கி
ஆலமுண்டோன்பாலகனே நீ அருள்புரிவாய் (வால)

சரணம்.

1. ஓயாத்துயர்பிறவி ஒழிந்துசுகமடைய
மாயாமயக்கமொழிப்பாய் வடிவேலவா (வால)

2. சாரமில்லாசம்சார சாகரத்திலழுந்தினேன்
ஆரவாரமாகவந்துநீ அருள்பாலிப்பாய் (வால)

3. எத்திசையும்வெற்றிகொண்ட இறைவனார்தன்புதல்வா
பத்தியுந்தன்பாதம் நம்பினேன் பவமறுப்பாய் (வால)

4. புள்ளிருக்கும்வேளூரா புரவலர்போற்றுந்தீரா
எள்ளுளெண்ணெபோலவிருந்தே இன்பந்தருவாய் (வால)

5. திருத்தணிவாசகனே சித்தருள்ளப்பாசகனெ
பொருப்பினில்வாழ்கின்றவனே புண்ணியரூபா (வால)

6. தாயும்நீ தந்தையும்நீ தமர்சுற்றம்பாவும்நீயே
சேயும்நீசெல்வமும்நீயே சித்தம்வைத்திடு (வால)

7. யென்னாளும்உன்னடியில் இணைபிரியாதிருக்க
சொன்னலதுவேபோதுமே சுகமெனக்கே (வால)

8. பாரின்மிசைநான்பிறந்து பாவமூட்டைதான்சுமந்து
ஊரின்மிசைகுடியிருக்கவோ ஒவ்வவேமாட்டேன் (வால)

9. யெத்தனையோ சென்மங்களோ இதற்குமுன்னமெடுத்து
முத்திநெறிதன்னைநாடாமல் மூடனானேன் (வால)

10. பாழானயோனிவழி பார்த்திடநான்செனிபாமல்
ஆளாக்குவாயாண்டவனே அரன்மகனே (வால)

சக. சகிப்பிரிவதென்னம்மா யென்றவர்ணமெட்டு.

பல்லவி.

சரணஞ்செய்கின்றேன் சாமி
சரணஞ்செய்கின்றேன்

அநுபல்லவி.

திரணமான புவிவாழ்வை விட்டு
தேகத்தைத்தள்ளி யேஸ்திரமடைந்திட (சர

சரணம்.

1. நீரிற்குமிழியிக்காயந்தனை நம்பி
நித்திபதத்துவம்நாடாமலே வெம்பி
பாரிற்றிரிந்து பழிசுமக்குங் கும்பி
பற்றறவிட்டு உன்பாதந்தனை நம்பி (சர)

2. தினமுந்தினமு மெனக்கோயாக் கவலை
தேடிக்கொண்டுநான் றிரிவது வேலை
இனஞ்சனமற்றதெல்லாமின்னலை போலே
என்றேஎனக்குத்தெரிந்தபி ஞலே (சர)

3. வாழ்வென்னுஞ்சந்தைமபக்கத்தைநான் கண்டு
மற்றதெல்லாம்விட்டுச்செய்தேன்பெண்கள் தொண்டு
பாழ்நமன்வந்துபாசத்தால்உயிர் கொண்டு
பற்றியிழுப்பதைக்கண்டுநான் மருண்டு (சர)

4. இன்னமொருதரம் பிரந்திரக் காமல்
இருதயஞ்சிந்தியேமாந்திருக் காமல்
அன்னவாகனன் சிருட்டிசருக் காமல்
ஆண்டவனெனக்குப்பிரவிபெருக் காமல் (சர)

---

சஉ. சாவேரி-தாளம்-மிஸ்ராம்.

பல்லவி.

எங்கள்முத்தையனை என்றைக்கிக்கண்டு நான்
இப்பிரவி யொழிப்பேன்

அநுபல்லவி.

பாங்காவணிந்திடும் புண்ணியர்புதல்வனை
செங்கையில்வேலேந்துஞ் சிவகிரிக்கந்தனை (எங்)

சரணம்.

1. காத்திகைக்கிப்போனுற் சனசனம்வெருகூட்டம்
கார்த்திருந்தாலும் அங்கே கனவேதியர்கள்கோட்டம்
பார்த்துப்பார்த்துநானேங்கி பாதபித்தேநாட்டம்
பாராதிருப்பதென்ன பாபியென்மேல்வாட்டம் (எங்)

2. தைப்பூசத்துக்குவந்தாற் சாதுசனர்சள்சென்று
சன்னிதிவிலகாமற் ருன்கூடியேநின்று
மெப்படியப்புரண்டு விழுந்திடுவதைக்சண்டு
வேலனெனைப்பாராமல் வெருத்திட்டலென்னநன்று (எங்)

3. பைங்குனியாஸ்த்தையில் பகர்ந்திடுமுத்திரத்தில்
பார்க்கவேணுமென்று பற்றித்துடர்ந்துவந்தேன்
செங்கையில்வேலேந்தி தேரிலாரோகணித்து
திரிந்தால்வீதிகளெல்லாம் தெய்வமேபென்னசெய்வேன் (எங்)

4. நெஞ்சில்நினைத்துஉன்னை நேசிப்பவருக்கெல்லாம்
நித்தியவாழ்வினில்வாழ்ந் திடும்படிக்கெல்லாம்
கெஞ்சும்பேழையெனக்குக் கிருபைசெயாதபொல்லாங்
கென்னமோநானறியேன் கிரிதனில்வாழ்வெல்லாம் (எங்)

5. பிரந்துநான்செய்துள்ள பிழைகள்யாவும்பொருத்து
பேரின்பவாழ்வினைப் பேதைநெஞ்சிலிருத்து
இரந்திடாதற்குமுனம் யென்மேற்கிருபைவைத்து
ஏகாந்தவாழ்வினை யெனக்களிப்பாய்பொருத்து (எங்)

6. மாயாப்பிரவியெனு மயக்கந்தனையொழித்து
வரமிகுகுருமுனிச்களித்த கதியளித்து
தாயாரவயிற்றிலின்னம் பிரந்துநான்றளராமற்
ருசன் ஆண்டவனைக்கார் சாமிகிருபைவைத்து (எங்)

---

சஙு. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

பாபாகிதனைபன்னிரு புயனே
பாலனைக்சார்வா பக்தர்சள்நேயனே

அநுபல்லவி.

ஆபத்துவேளையில் அரிவில்நின்றுதிக்கும்
அருளையெனக்களித்து தெருளையாவொழித்து (பா)

சரணம்.

1. சிவசுப்ரமண்யனே தேவர்கள்புண்யனே
பவமொழிகண்யனே பாமசாத்துண்யனே (பா)

2. அந்தாத்தாபனே சுந்தாரூபனே
ஆதியந்தமில்லா ஆனந்தவாபனே (பா)

3. பிரணவமூலனே பெம்மான்றன்சீலனே
கிரணவலோலனே கெவுரியின்பாலனே (பா)

4. மூலமுதல்வனே முத்திபுதல்வனே
சீலநுதலனே செல்வநுதலனே (பா)

5. மாயூரவாசனே மயிலுலாசனே
கேயூரகேசனே கிரியில்வாசனே (பா)

6. வேண்டித்துதித்தேன், வித்தகநாதா
ஆண்டவன்போற்றும் அகிலப்ராக்யாதா (பா)

---

௪௪. இராகம்-சாமா-தாளம்-கெண்டஜாதிசர்வலெகு.

பல்லவி.

ஷண்முகனே சடாட்சாப்பொருளே
தருணமிதுவெனக்குக் கருணைசெய்வாய் சிவ

அநுபல்லவி.

விண்மகனும் அரிபிரமாதியர்கள்
வேண்டியபடிக்கிரீ தாண்டிவ்வுலகில்வந்தாய் (ஷண்)

சரணம்.

1. மூக்கட்பாமனெளி முகத்திலமர்வினோதா
மூவர்முனிவர்முதல் முத்தியளிகரும்நீதா
இக்கட்டானசமயம் எனைத்தடுத்தாள்வாய்நீதா
இறைவனேயுனையன்றி எனக்குக்கெதியார்போதா (ஷண்)

2. கோளுரைத்தநாரதர் குரித்தமொழியுட்கொண்டு
கோலவேடத்துடனே குராமாதுதன்னைககண்டு
மீளவேஅன்னத்துடன் விழங்சமயிலில்கண்டு
வேலனேயுன்னடிக்கு நான்செய்வேன்திருத்தொண்டு (ஷண்)

3. நித்தியநிர்மலாதீதா நிட்களானநதபோதா
நேசித்தவர்க்குமுத்தி வாமருள்பிரசாதா

பத்திசெயுமடியார் பந்தம்விலக்கும்நீதா
பாலகனெனைக்காக்க பாரமோஉனக்கிதா (ஷண்)

4. ஆலிலைமேற்றுயில் அரவிந்தன்மருகோனே
ஆண்டவன்றினந்தொழு தாக்கின்றமுருகோனே
பாலிற்பிறைகலந்த பான்மைபோற்சிறியேனை
பாலித்தருள்சுமந்து பாதுகார்பெரியோனே (ஷண்)

சரு. இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

பல்லவி.

வேலவனே விமலனருள் வெற்றிவேலவனே

அநுபல்லவி.

ஆலந்துணித்தஅரன் அன்றுபதேசம்கேழ்க்க
கோலமறையதனை குருவாயிருந்தளித்த (வே)

சரணம்.

1. தெய்வானைமனங்கோண தேடித்தினைப்புனத்தில்
தேவிவள்ளிமான்றனை சேர்ந்தணைந்தீர்தனத்தில்
கையாறுமாறிலங்க காட்சிகொடுத்தருளி
கானக்குரமயிலைக் கலந்துமருவுகின்ற (வே)

2. கஞ்சனிடத்தில்வாது கடைப்பொருள்தனையோது
காரணமிதுவேது சலங்குகின்றாயேதீது
தஞ்சமென்றுஉத்தேவர் சாற்றுவதுதகாது
தனிப்பதியுனக்கல வெனச்சேற்றிருந்தவெற்றி (வே)

3. காண்டற்கரியதனிக் கதிர்வடிவேலனே
கலங்கும்யேழை யென்றனைக்காருமைபாலகனே
ஆண்டவன்தினந்துதி யறுமுகவேலவனே
அபயமபயமுந்தன் அடைக்கலம்பாலகனே (வே)

சசு. இராகம்-சஹானா-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

பாலசுப்ரமண்யதேவா துயர்மிகுந்த
காலனிடரைத்தவிர்த் தாள்வாய்

அநுபல்லவி.

ஆலகாலம்போலச்சீறியந்தகன்வருவான்மீறி (பா)

சரணம்.

1. யெவ்விதம்நான்றடுத்துரைப்பேன் இறையவனே
யெந்தவகை விரித்துரைப்பேன்
வெவ்வியசதிர்வேலேந்தும் வேலனேயுன்பாதமல்லால்
கவ்வியேவிழுங்குகின்ற காரணந்தனைக் காணேண் (பா)

2. நன்மைசெய்ய நாடவில்லையேநான் ஜெனித்து
நானுஞ்செய்தேன் கோடிவினையே
இம்மையிலுமறுமையிலுமெனக்கிகபரந்தற
மீசனேயுன்பாதமல்லாற்றாசனுக்குக்கெதியில்லை (பா)

3. ஆதியில்யென் தவஞ்செய்தேனோ இப்பிறப்பில்
அருந்தேகமிதையடைந்தேன்
பாதியில்நழுவவிட்டால்பலனிதில்வேறேயுண்டோ
பத்தனுகவெனையாக்கி பாசமதைவிலக்குவாய் (பா)

4. வேசமிதுமாயமேயென்ற விதத்தைநான்
மெய்யறிவாலுணராவிட்டேன்
வாசனே குன்றையம்பதிருசனேவள்ளிநேசனே
தாசன்யான் ஆண்டவன்பணிசாமியே குமரேசனே (பா)

---

சஎ. இராகம்-சமாஸ்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

நல்லநாளெப்போ எனைரட்சிக்க நல்லநாளெப்போ

அநுபல்லவி.

அல்லல்செயுமிந்தத் தொல்வினைதன்னைநான்
வெல்வதற்கேயொரு நல்வழிகாட்டிட (நல்ல)

சரணம்.

1. ஓடமதன்றிநான் ஆற்றிலிரங்கியே
ஒருவர்துணையுமில்லாமற் கலங்கியே
மேடொன்றிருக்கநா னதனில்மேவியே
மெலிந்திருப்போனை மெல்லெனத்தூக்கிட (நல்)

2. அச்சில்லாமலோடும் அந்தச்சகடைமேல்
ஆசைகொண்டுன்மத்தா யதனிற்றுவியே
தைச்சில்லாதசட்டை தரிப்பார்போலவே
தன்மதிசெட்டோனே தாவிப்பிடித்திட (நல்)

3. பூவிலும்பிஞ்சிலும், காயிற்பழத்திலும்
புனத்தடத்திலும் போவதினைக்கண்டு
தாவியேயிச்சையாய்த் தரித்திருக்கவும்
தன்மதிகொண்டோனைத் தடுத்தாட்கொண்டிட (நல்)

4. பச்சைமண்பானையை வஜ்ஜிரமென்றுநான்
பாவினைபண்ணியெ ஜலத்தைவார்க்கவும்
நிச்சயமில்லாமல் நெரிவதைக்கண்டும்
நேசித்திருப்போனை வாசிப்படுத்திட (நல்)

---

சஅ. இராகம்-சுருட்டி-தாளம்-சாப்பு.

நோட்-பல்லவி.

1. குன்றைவாசனே குருமாதுநேசனே
சென்றவேசனே சிவயோகராஜனே

2. வேல்பிடித்தவா வினைகால்ஒடித்தவா
மால்துதித்தவா மனமாசறுத்தவா

3. ஹரஹரத்கா ஒளிர் ஆறுமாமுகா
வரகுருசுகா யேழை வாடினேன்குகா

4. பன்னிருபுயா சிவபத்தர்கள்நேயா
என்னிருதயா மிக ஏழைகள்தூயா

5. கீர்த்திகொண்டவா வினை கெடுக்கும்ஆண்டவா
சீர்த்திபூண்டவா ஏழை சிரத்திற்றுண்டவா

6. சைவவாசனே மன மகிழுலாசனே
துய்யநேசனே உனை துதிகள்செய்தேனே

7. எத்தனைசென்மம் நா னெடுத்தனேசன்மம்
இத்தனைவன்மம் எனக் கிதுவோஉன் தன்மம்

8. சூரசங்காரா தேவர் துதியலங்காரா
தீரசிங்காரா தினை மாவுணுங்காரா

9. வள்ளியானையுஞ் சொந்த மயிலுமாகவே
துள்ளியேவந்து ஏழை துயர்தவிழ்த்தருள்

10. ஆண்டவன்றுதி பொளி ராறுமாமுகா
தாண்டவம்புரி யென்றலையிற்சண்முகா

---

௪௬. இராகம்-சக்ரபாகம்-தாளம்-ஆதி.

1. சிவசுப்பிரமண்யனேயுன் றிருவடித்தாமரையைத்
தெரிசித்தகமகிழ்வ தெப்போயெப்போ
பவமதனைவென்றுநான்பரனே உன்னடிதன்னைப்
பற்றித்துடருவது மெப்போ யெப்போ

2. அவலச்சமத்தனென்று அகிலத்தோரேசிடாமல்
அண்டித்துடருவது மெப்போ யெப்போ
சவலமில்லாத இந்த சம்சாரக்கடல்தன்னைத்
தாண்டிக்கரை யேறுவ தெப்போ யெப்போ

3. குடிகள்வெறிகள்விட்டுக் குமரனேயுன்பதத்தைக்
கூடிப்பிடித்திடுவ தெப்போயெப்போ
துடிகள்துடிக்கவெதிர் தோன்றுமலைமறலி
தூரவிலகுவது மெப்போ யெப்போ

4. தானென்பதைபரிந்து சகம்பிணிதனைவென்றுன்
சன்னிதிவருவது மெப்போ யெப்போ
வானுமகிதலத்தும் மதிக்கும்அடியார்களை
வணங்கிக்கதிபெறுவ தெப்போ யெப்போ

5. வேலுமிலங்குதண்டைக் காலும்எதிர்துலங்க
வேண்டித்தவம்புரிவ தெப்போயெப்போ
சேலைப்பழித்தகண்ணாள் தெய்வானைவள்ளியுடன்
தேவனேயுனைக்காண்ப தெப்போ யெப்போ

6. சூரைத்துடைத்தவெற்றிச் சுந்தரத்திருப்புயம்
தோன்றிக்கனிவுறுவ தெப்போ யெப்போ
நீரைத்தரித்துஉன்னை நேசித்தாண்டவன்உயர்
நெறியில்அடிப்பதுவும் யெப்போ யெப்போ

---

௩௰. இராகம்-அசாவேரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வேலுங்கடப்பமலர் நாலுமிலங்கவந்து
வினைதீர்த்தருள்வாயே

அநுபல்லவி

பாலுந்தெளிதேனும் பகர்ந்தபிடேகங்கொள்ளும்
சீலகுருபரவென் சிறுமையதனைத்தள்ளும் (வே)

சரணம்.

1. அந்தணர்வேதியர் அருமறையாற்போற்ற
அடியவர்வந்துதினம் அரகராவென்றேற்ற
விந்தையாய்ப்பாமாலை வித்வசீலர்கள்சாற்ற
விழங்கக்கிருபைசெய்து வருவாயென்முன்றோற்ற (வே)

2. இடும்பன்அடிவாரத்தில் இருந்துமேகார்த்திருக்க
இளையநவவீரர்கள் இருபுரஞ்சேர்ந்திருக்க
அரும்பணியுடையவர் அருகில்நின்றேயர்ச்சிக்க
அன்னங்களிருபுரம் அகமகிழ்ந்தேஇருக்க (வே)

3. குயிலுமயிலினமும் கூவியேகீதம்பாட
கொண்டற்கிளிகளெங்கும் தாவியேநாதம்பாட
ஒயிலாய்மாதர்கள்நின்று ஒதுங்கியேநிர்த்தமாட
ஓம்ஹரஹரவென்று தேவர்கள்சத்தம்போட (வே)

4. ஆறுமுகத்துடனீராறு புயந்திகழ
ஆண்டவன்பார்த்துப்பார்த் தானந்தமதுகொள்ள
நீருமுருத்திராக்கமும் நிறைந்துமேனிதிகழ
நித்தியானந்தமதில் வாழ்ந்தென்னகமகிழ (வே)

---

௩௧. இராகம்-ஆபரி-தாளம்-ஆதி.

பல்லவி.

உனக்கபயம் மனக்குறைதீர்
உன்னைத்தவிரவேறுண்டோ புகலினி

அநுபல்லவி.

தினக்கவலையடைந்து வாடினேன்
சேவித்துந்தன்பாதம் நாடினேன் (உன)

ஸ்ரீ மயூரகிரி

சரணம்.

1. தனக்கொடிமார் தழுவியபோகா
தஞ்சமென்றே னமரர்களியோகா
இனக்கொடியே நானினியாகா
என்னையாள்வாய் பூசுரர்வாகா (உன

2. மாலயன்முதலோர் தேடியுங்காணு
மறைமுதல்மதலாய் நெஞ்சினிற்பூண
ஆலயந்தோறும் தேடியேவேண
அவதிப்பட்டே றுனைக்காண (உன

3. நிலையிலாவாழ்வை நிசமெனநம்பி
நித்தியதத்துவந் தேடேன்வெம்பி
அலையடிபட்ட துரும்பானேன்சோம்பி
ஆதரித்தெனையாள் அத்தியின்றம்பி (உன

4. பெண்டுபிள்ளைகள் பந்துக்கள்கூடி
பிரேதனமானபின் கூவெனவாடி
தண்டிகைமீதினி லேற்றியேயோடி
தகனஞ்செய்துவா ரிதுவென்னகேடி (உன

5. உலகின்மிசையிற் பிறந்திரவாமல்
ஒருவருக்குமே கொடியனென்னாமல்
பலவழிபதனிற்சிந்தை செல்லாமல்
பாதுகாரண்டவனை வர்மமில்லாமல் (உன

---

ருஉ. இராகம்-பியாகடை-அடதாளசாப்பு.

பல்லவி.

கண்டுஉன்னைத்தொழுதுநின்றேனே கருணாகரா
கண்டுஉன்னைத்தொழுதுநின்றேனே

அநுபல்லவி.

கண்டுஉன்னைத்தொழுதுநின்றேன கர்மவினைபோக்கிடவே
தொண்டர்க்கருள்செய்யும்நாதனே சுப்ரமண்யனே (

சரணம்.

1. சங்கரியுமைபாள்பெற்ற சண்முகவடிவேலவா
மங்கைவள்ளிமணவாளனே வரந்தருவாய் (

2. ஆதிமூலப்பொருளே யாறுமுகக்கடவுளே
சோதிவடிவேலவா துரையே சுகநிரையே (க)

3. யீசன் அன்றுமனமகிழ்ந்து இருந்துபதேசங்கேட்க
வாசமுடனருள்புரிந்தவா வாகுருவே (க)

4. பத்திசெய்யுமடியாருக்கு பாசமதனையொழித்து
முத்திநெறிசேர்க்கும்வாசனே முருகேசனே (க)

5. தேவர்சேனுபதியாய்த் தேவர்சிறைவிடுத்தோனே
கூவுஞ்சூரைவெற்றிகொண்டவா குமரவேளே (க)

6. சைவசம்பந்தழைச்க ஷண்முகமாயவதரித்து
வைபவமாய்வாழ்கின்றவனே வடிவேலவா (க)

7. பொன்புரிமுன்னூல்துலங்க பூவையிருபாலிலங்க
மின்னொழிபோல்வேலுமிலங்க விளங்கும்நாதா (ச)

8. அன்புடனுனைப்பணியும் ஆண்டவன்கவிக்கிரங்கி
இன்பந்தந்தேயாளுக்தெய்வமே எதிர்நிதமும் (க)

---

ருரு. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-சாப்பு

பல்லவி.

தேடிநான்நொந்திடைந்தேனே உன்னை
நாடியே வந்தடைந்தேனே தேடிநானேவாடினேனே
சிந்தை மெலிந்துநான் (தேடி)

அநுபல்லவி.

1. சோடிசரணஞ் செய்திட்டேனே பெந்தன்
குறையுவந்துரைத்திட்டேனே கூவினேனே
பாவிநானே கொள்வாயுன்பதிதன்னில் (தேடி)

2. காமக்காட்டினில்நான்சென்றேனே அங்கே
கல்லுமுள்ளழுத்த நின்றேனே கதிகொண்டேனே
பதியண்டேனே என் கன்மவினையழிக்க (தேடி)

3. தொண்டனுனக்குநானகை இந்தத்
துன்பக்கடல்கடந்துபோக துப்பர்வேக
உயர்வாக உன்றன் தூயவொழியைக்காண (தேடி)

4. இன்னமுமாங்கிசஞ்சுமந்தே யான்
இழுவைப்படாமலருள்சுரந்தே இன்பந்துடர்ந்தே
அன்புடர்ந்தே இருக்கவரமளிப்பாய் (தேடி)

5. கொல்லுந்தொழிலிற்சிரந்தேனே சத்தி
குமராவுன்புகள் மரந்தேனே குறைந்தேனே
உறைந்தேனே கொடுந்தன்மைநீக்கியருள்செய் (தேடி)

6. ஆண்டவன்பணிந்திடும் கோவே எனை
யாதரித்தாண்டிடவாவே கமழ்பூவே
உயர்தேவே அல்லும்பகலும் பாட (தேடி)

---

௫௪. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-சாப்பு.

பல்லவி.

சரவணபவனே திருவருள்
தருவாய் சண்முகனே

அநுபல்லவி.

வரமளிக்குஞ் செந்தாமரைப்பாதனே
மாதுமையாள்பெற்று மகிழும்விநோதனே (சர)

சரணம்.

1. வர்னமயிலேறும் மந்திரநாதனே
மங்கையர்கொஞ்சிடு மங்களநீதனே
உன்னதமாகிய தேவப்ரசாதனே
உம்மைப்பணிந்திட வேதுவீர்போதனே (சர)

2. குன்றைக்குடியில் தரித்திடும்ராஜனே
சூரவரைக்கண்டு மரைத்திடும்வேசனே
சென்றப்பால்நின்று சிரித்திடும்வாசனே
தேவியைக்கண்டு திசைத்திடும்போசனே (சர)

3. துட்டரைக்கண்டாற் றாத்திடுங்கர்தனே
தூயர்தனக்குத் துலங்கிடும்பந்தனே
கட்டத்திற்சிக்கி கலங்கிடும்யெந்தனே
கருணைசுரந்தருள் கார்ப்பாயென்வந்தனே (சர)

4. ஒருருவாகி யொளிரிடும்வேலனே
உம்பர்தமக்கு அருளழிலோலனே

காரிருள் தன்னிற் கவிந்திடும்பாலனே
கைதூக்கியென்னைக் கரையேற்றுஞ்சீலனே (சர)

5. வேதனையாலே மெலிந்துநான்வாடுறேன்
வேறுவழிதன்னை யெண்ணாமல்நாடுறேன்
சோதியைக்காணத் துடர்ந்துநான்தேடுறேன்
துன்பந்துலைந்து துலங்கிடப்பாடுறேன் (சர)

6. மாதரைக்கண்டு மருண்டுமயங்காமல்
வந்ததேகஞ்சொந்த மென்றுநானம்பாமல்
பாதகவாழ்வினைப் பற்றிநான்வெம்பாமல்
பாதந்துலக்கியருளுவாய் கெம்பாமல் (சர)

7. ஆண்டவன்போற்றும் அதிகசவுந்தரா
அன்பர்க்கிரங்கி அருடருஞ்சுந்தரா
தாண்டவமாடிய தண்பதிமந்திரா
தங்கத்துறையே தரிசனலங்காரா (சர)

---

௫௫. இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

அங்குமிங்குமிலங்கித்துலங்கிடும்
அருள்வடிவே உனைநான்றொழுதேன்

அநுபல்லவி.

மங்கும்ப்ரபஞ்ச வாழ்வினைநம்பி
மனமதுமருண்டு நான்மாய்ந்தேன்
பொங்கும்உந்தன்திருவரு ளதனைப்
புரிவாய்உன்னைநான் ஆய்ந்தேன் (அங்)

சரணம்.

1. சங்கங்கொண்டு சமுத்திரமீது
சயனித்திருப்போர் தன்மருகா
தங்கும்உந்தன்பதிகளை நாடித்
தானேவருவேன் திருமுருகா (அங்)

2. வெட்டிமாத்தை விட்டாற்கீழே
விழுகிறதன்மையது போலே
எட்டிப்பற்றி இழுத்தும் நில்லாத
இயல்பைக்கண்டு தன்னாலே (அங்)

3. கானலைநீரென்றெண்ணியே மானும்
கடுகியேயோடும் மதிபோலே
நானும்பலபுவி வாழ்வினைநம்பி
நாடிவந்தே னதினாலே (அங்)

4. பூட்டிவைத்துத் திறந்துவிட்டால்
பூத்தென்று போகுமாவி
ஓட்டிவிட்டாண்டவன் வந்தேன்
உன்னிடம்பாவி தாவி (அங்)

---

௱௬௫. இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

தஞ்சம் தஞ்சம் தஞ்சம் உந்தன்
கஞ்சமலர்பாதத்திற்கு

அநுபல்லவி.

வஞ்சம் வஞ்சம் வஞ்சம் உந்தன்
நெஞ்சந்தனிலாகாது

சரணம்.

1. ஆடுமாடுவீடுசொந்த மாகுமென்றுயெண்ணியெ
பாடுபாடுபாடுபட்டேன் பாரின்மீதுகுண்ணியே (த

2. கையிற்பணங்காசிருந்தால் கண்டுமகிழ்வாரென்னையே
அய்யாஅப்பாவென்றுசொல்லி அருகிருப்பாரன்னையே (த)

3. பூதலமீதினில்வாழ்வுகளெல்லாம் பொய்யென்றுன்னைநாடினேன்
சாதல்ஆதல்அழித்தெனக்கு தருவாயுன்பதம்நாடினேன் (த)

4. உற்றுப்பார்க்கில்இத்தரைமீதில் ஒன்றுஞ்சொந்தமில்லையே
பற்றுப்பற்றிடாயலென்னைப் பாதுகார்ப்பாய்தொல்லையே (த)

5. இன்றிருப்பார்நாளையெங்கேயென்றால் மாண்டாரென்கிறார்
கண்டிருந்துஞ்செல்லமாட்டேன் காசினிவாழ்வில்யென்கரும் (த)

6. வானத்தின்மீனைப்போலவே மாரிப்போகும்வாழ்நாளை
ஏனத்தைதவிரும்பிநானி முவைப்படவோநாளை (த

7. கண்டதெல்லாஞ்சூதென்றெண்ணிசந்தாஉனைப்போற்றினேன்
அண்டர்முனிவோர்கள்தேவே யாண்டவனுன்னையேற்றினேன் (த)

---

௫எ. இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

1. திருவருளைத்தாதா முருகாவரவாதா
குருமுனிபான்பொதா குகப்பரமநாதா

2. குரவர்பணியோகா குமாரகுருவாகா
மாவர்துதியேகா மகிழ்சயனபோகா

3. தினமலரும்பாதா திவ்யபிரசாதா
கனமுணரும்வேதா கருணையருள்தாதா

4. அசுரகுலகாலா அபிராமிதன்பாலா
பஜாசனவேலா பன்னிருகைலோலா

5. மயுரகிரிவாசா மருமமுறைபூசா
கேயுரமணிகேசா கிரிவளரும்ராசா

6. தருணமிதுவாவா தநியிதெனைக்காவா
அருணகிரிமேவா ஆண்டவன்பணிதேவா

---

௫அ. நானம்பினேன் வேதமென்றவர்ணமெட்டு.

பல்லவி.

வள்ளிமணவாளா வடிவேலவனே தயாளா

அநுபல்லவி.

புள்ளிமயிலேரிவந்துன் பொன்னடிதனிலென்னையாண்டருள்

சரணம்.

1. தாருமுன்தன்பாதந் சாமிநாதனேஎனக்குநிதம் (வ)
2. ஆருதலைகூரும் அடியேன்கெதிபையடைந்திட (வ)
3. இப்புவியின்மாயம்யெனைப்பற்றுமலே செய்சகாயம் (வ)
4. உன்னையன்றிவேறேயோர் துணையுமில்லை இணையடியருள் (வ)
5. வர்மம்செய்யலாமா இதுதர்மமாகுமா அய்யனே (வ)
6. ஆண்டவன்கவிக்கி அருள்தருகுவாய் நீதருகிடாமலே

ருகூ. இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

வேணிபரன்புதல்வன் அருமறைவேதமுடிமுதல்வன் மதி நதி (வே)

அநுபல்லவி.

பாணியொழிதிகழ் தூணிபுளோர்பணி
பாலசேவற்கொடியான் சொர்னமுடியான்
தொண்டரடியான் குன்றைக்குடியான் கெடியான் (வேணி)

சரணம்.

1. பாலகுருநாதன் குருமுனிபணிந்திடும்போதன் சரவண
நீலச்சிகண்டிபிலேறிவலம்வரும் நித்தியஜெயாரன்
கனவீரன் வள்ளிமாரன் புவிபார்ன் சிங்காரன் (வே)

2. சென்னியோராறுடையான் சிறந்திடுஞ்செங்கையீராறுடையான்
(நடையான்
அன்னியர்தன்னிடம் அஞ்சலென்றுவர அனைட்சணந்தருகான்
மனம்பொருகான் அன்புருகான் ஒளிர்முருகான் வருவான் (வே)

3. மதிமுகத்தழகன் கலிதனில்வாரந்தருங்குழகன் புளகன்
துதிசிரந்துமே பதிகளாறினிற் றேன்றும்வடிவேலன்
சத்திபாலன் அன்பர்சீலன் அருள்மூலன் லோலன் (வே)

4. மற்பெருந்திண்டோழன் இமையவர்வணங்கிடுந்தாழன்திடமுறு
அற்புதமாகவேஆண்டவன் சொல்லிடும்அருங்கவிக்குரியான்
விட்டுப்பிரியான்மிகப்பெரியான் சிகைக்கிரியான் அரியான் (வே)

---

கூய. இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

எம்பெருமான்முருகன் அருள்தாநண்பரெதிர்வருவன்கனமுறும்

அநுபல்லவி.

சம்புசதாசிவசங்கானீன்றருள் ஷண்முகத்தோருருவான்
கதிதருவான் சதிபொருவான் யெதிர்வருவான் திருவான் (எம்)

சரணம்.

1. சத்தியளிகுமரன்புவியெங்கும்நத்திநிரையமரன் சமரன்
இத்திசைதனிலேபத்தியாய்நாடுவோர் இருதயம்வாழ்வான்
அணைத்தாழ்வான் மலைவாழ்வான் நமன்மாழ்வான் தாழ்வான் (எ)

2. மெய்யினில்நூலுடையான்றமதிருகையினில் வேலுடையா
னடையான்துய்யவர்மாதவர் அய்யமில்லாமலே துதித்திடும்பாதன்
பிரக்யாதன்வெகுநீதன் குகநாதன் நன்னீதன் (எ)

3. வெற்றிமயில்வீரன் இருவர்கள்பற்றிமகிழ்மாரன் புவியினை
சுற்றிநிமைதனில்பற்றக்கனிதனை தோகைதனிலூர்ந்தவன்
கிருபைகூர்ந்தவன் அருளார்ந்தவன் முத்திதேர்ந்தவன்சேர்ந்தவன் (எ)

4. வைபவத்திற்பெரியோன் அடியவர்வணங்குதற்குரியோன் நெரியோன்
சைவம்விழங்கவேதங்கும்பெருமையைத்தாங்கும் கொடையுடையான்
அன்னக்கொடையான்குணமுடையான் கைவேற்படையான்றொடையான்

5. பிரணவமூலன் இமையவர் பிரியநற்சீலன் வல்லோலன்
கருணைவாரிதியாயிலங்குறு கவிப்பிரகாசன் மலைவாசன்
குமரேசன் முருகேசன் உல்லாசன் (எ)

6. சனகமயூரன் ஒளிதருங்கடககேயூரன் ஒப்பாரன்
அனவாதமும்மனப்பதித்திடும் ஆண்டவன்சீலன்
வடிவேலன் உமைபாலன் வள்ளிலோலன் பூபாலன் (எ)

---

௬௧. இராகம்-பாசு-தாளம்-ஆதி.

பல்லவி.

கார்த்தருள்புரிவீர் பேழைதுயர் தீர்த்தருள்புரிவீர்

அநுபல்லவி.

நேர்த்தியாய்மயிலிலேறும் நித்தனேநாதா பேழைக்குந்தன்
சித்தமேதாதா வடியணைக் (கார்)

சரணம்.

1. கார்த்திகைமாதர்களாறு கன்னியர்களோத்துஞ்சீரு
பார்த்திருந்தேன்றபனைத்தீருநீ பசுபதி (கார்)

2. அண்டர்முனிவோர்கள்வந்து அடிபணிவாரே சிறந்து
தொண்டுசெய்யவந்தேனுகந்து துயர்தவிர் (கார்)

3. முத்தர்நவ சித்தர்களும் முத்தியே யுனைப்பணிவார்
பத்தனுக்கப்பதந்தருகுவாய் பரமனே (கார்)

4. இத்திசை யடங்கலும் நீயேகப்பராயாய் நிறைந்தாய்
நத்தியுனைநாடிவந்தேனு னையனே (கார்)

5. பாண்டவரில் ஒருவனான பார்த்தனுக்குப் பாசுபதம்
வேண்டவந்து கொடுக்கும் நாதனார் விரிபாலா (கார்)

6. காண்டற்கரியபரனே கார்த்தி கேயனே ஹரனே
ஆண்டவனுக்கருள்செய்வோனே ஹர ஹர (கார்)

---

சுஉ. இராகம்-கவாய்-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

1. கார்த்திகேயனே அடியவர் பூர்த்திநேயனே
பூர்த்திநேயனே பொதுவருள் புரிசகாயனே

2. மண்ணும்விண்ணுமாயெங்குமாய் மறைபொருளேவா
கண்ணுதற்பிரான்றிருவருட் சருணைபெற்றவா

3. காலமேயிதுநல்லகதி கருதிப்பெறுவது
சாலமல்லவேயென்றுயர்தனைத் தவிர்ப்பது

4. வர்மமென்சொல்லோ உன்னெஞ்சம்வன்கருங்கல்லோ
தர்மமாமல்லோஏழைமிடி தவிர்ப்பதுமல்லோ

5. சிந்தைநோகுதேயுனையெண்ணி திகைக்கலாகுதே
எந்தையேயுனதிருவருள் ஏழைக்கீவதே

6. ஆண்டவன்றினந்துதித்திடும் அண்ணலேதேவா
அண்ணலேதேவா இதுதகி யாண்டிடவாவா

---

சுங. இராகம்-கவாய்(ஏகதாளம்-சாப்பு)

கண்ணிகள்

1. வேலேந்தும்வீரா வெற்றி ஒய்யாரா வித்தகமாரா
வேண்டினேன்பான்

காலாந்தகாரன் கைப்பாசக்காரன் கண்ணோக்கி
வாராக்கருணை செய்நீ

2. பெற்றார்பிறந்தார்கள் பிரிவின்றிவாழ்ந்தார்கள்
விட்டார்கள்நான் பேதையாயினேனே
உற்றார்உறவின்முறையாரொருவரும் நற்றுமல்
நான் தனியாயினேனே

3. உன்னடியல்லாது என்னுயிர்தனக்கு
உறுதியதுமுண்டோ சொல்லு சொல்லு
என்னேரமுமுன்னிணையடி போற்றவென்
இருதயந்தன்னிலே நில்லு நில்லு

5. சுந்தரமான அந்தமின்னார்கள் சோகம்
எனைநீங்கவாகு செய்வாய்
வந்திடுவானேயந்தகனென்னிடம்வந்தணு
காமற்கிருபைசெய்வாய்

6. எத்தினமுமுனைப்பத்திசெய்யாண்டவன்
ஈடேறிடக்கருணை செய் செய் செய்
மித்திரமான கன்மங்கள்யாவும் விலகும்படி
சித்தம் வை வை வை

---

கூச. இராகம்-சக்ரபாகம்-தாளம்-ஆதி.

பல்லவி.

சத்திபாலகனே கிருபைதா சத்திபாலகனே

அநுபல்லவி.

நித்தியமுனதருளைநத்தியேபிரவிபொழி
சித்தியே சிவனளித்த முத்தியே முருகையனே (சத்)

சரணம்.

1. வேலாசிலாவுந்தன்பாதம் நாலாகாலமுமரிந்து
கோலாகலனேபணிய வாலாயமாகத்தெரிந்து
ஆலாலமுண்டோன்மகனே பாலாபாலாவென்றழைந்து
காலமதிலெபளிப்பாய்கந்தனே கருணைசெய்து (சத்)

2. ஈசன்மகனேவுன்னருளிப்பவேதரவொண்ணாதா
வாசமலர்மாலையனே வானவர்துதிக்கும்பாதா

பாசனை தரிச்சும்நீதா பாவலர்வணங்கும்போதா
ராஜனே குன்றையில்வாழும்நாதாநீதாகிருபைதாதா (சத்)

3. மஞ்ஞைதனிலேறும்பாதா வல்வினைவிலக்கும்போதா
பிஞ்ஞகன்சுதனே தாதா பேசொணுதாகந்த நாதா
நிஞ்ஙிமிர்முழங்குங்கிபாதா நித்தனேகருணை தாதா
பஞ்சிதத்தைப்போலழகா பாலாவேலாலோலாசிலா (சத்)

4. செந்தூர்தனில்வாழுந்தேவா சித்தம்வைத்தேழையைக்காவா
நந்தலில்லாவாழ்வைத்தரவா நாதனேமஹானுபாவா
பந்தன் ஆண்டவன்பணியும் பன்னிருகைவேலாவாவா
இந்தவேளைவந்தருள்வாய் எய்யா தய்யா தூய்யா மெய்யா (சத்)

---

கூடு. இராகம்-ட தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

கார்க்கநீவருவாயேமயூரமேரி கார்க்கநீவருவாயே

அநுபல்லவி.

பார்க்கவிமருகா பாங்கிரிமுருகா
மார்க்கமதாகவேநீ மயூரமேரி (கார்)

சரணம்.

1. சூரகங்காரத்தாற் சுரர்கள்தனைவருத்த
சூரரைவென்றளித்தவா தோகைமிலேரி (கார்)

2. வேங்கைமரமதாக வேடர்கள்பிர்மைகொள்ள
பாங்குடன்பழுவமர்ந்தாய் மயூரமேரி (கார்)

3. ஆறுகுடியமரும் அய்யனேகார்த்திகேயா
நீருடன்யெதிர்வருவாய் மயூரமேரி (கார்)

4. வேதப்பொருள்முடிவே வித்தகத்தின்வடிவே
நாதத்தினறும்பொடிவே மயூரமேரி (கார்)

5. சுந்தரியமுதிரு சோதிக்கொடிகள்நைய
மந்தரமேருவானாய் மயூரமேரி (கார்)

6. திருத்தணிமேவா தினமென்னைக்காவா
கருத்தணிதரவாவா கதிமிலேரி (கார்)

7. ஆண்டவன்றினந்துதி ஐயனேதவபதி
தாண்டவன்குருபதியே சைலமீரி (கார்)

---

௬௬. ஆனந்தங்கொண்டாடும்பதத்தை யென்றமெட்டு.

பல்லவி.

காணரும்பொருளானபாதத்தை காண்பதெப்போதே நாதா

அநுபல்லவி.

தோணும்படிதோகையேரி சுந்தரனேவா நாதா (கா)

சரணம்.

1. மாணிக்கநீர்கெங்கையாடி வந்தடிபணிந்தே நாதா (கா)
2. நித்தனேசுகநீதனேயுன்றன் உற்றபாதத்தை நாதா (கா)
3. அறிவிலாதார்க்கரியநீதா அண்ணலேதாதா நாதா (கா)
4. தெரிவையர்கள்மயலுருது சீர்திருத்திடுவாய் நாதா (கா)
5. எத்தனைநாட்டுயருருவேன் இன்பந்தந்தாள்வாய் நாதா (கா)
6. ஆண்டவன்சவிக்கருளும்பாதா அய்யனேவேதா நாதா (கா)

---

௬௭. இராகம்-பைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

வருவானோ குமரேசன் கலிதீர்க்கமயிலேரி யெப்போ (வரு)

அநுபல்லவி.

ஒருபொருளருளிய குருதிருவடிஎனதெதிருரவேப்ப (வரு)

சரணம்.

1. ஔவைமருள அடவிசென்றவன்
அருமதலையென வெங்காவல்நின்றவன்
செவ்வைபதுவாயுறை தெரியதிருபெரு
வரிகொடிதினிதென்போன் (வரு)

2. கானசந்தனில்மாமாய் நின்றவன் மத
கரிவருகெனப்புதர் மறைந்தவன்

தானவர்கள்பதியளியெனத் தஞ்சமென்றுவா
அஞ்சலெனக்கார்ப்போன் (வரு

3. பிரமனைச்சிறை தனிலடைத்தவன் பெரு
மபுரமாமெனுமலை யுடைத்தவன்
சிரமொருதசமிரண்டுடன் சேவல்மயிலுடன்
மேவியென்னெதிரில் (வரு

4. சரவணந்தனில்வளருங் காங்கேயன் அரு
தனமதில்வருசுவையுணும் வாயன்
சிரவணங்கரவணமதாய்த் சென்னியில்மொழிவோன்
துன்னியவொழிவோன் (வரு

5. ஆண்டவன்சொலுங்கவிக் கிசைந்தவன் அரு
ளமலவிமலமா யசைந்தவன்
தாண்டவசிவனருள்குரு ஷண்முகவேலவன்
தண்ணுமைபாலகன் (வரு

---

கூஅ. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

அய்யாநீவந்தருள்வே குன்றையரிமருக
வெனதிருளர திருமுகமொழிதகதகவென (அ

அநுபல்லவி.

மெய்யாமயிலேரி ஒப்யாரமாக
விரிசுடரிருபுரகரமது தெரிதரவெதிர்கரியிளையவா (அ

சரணம்.

1. அண்டமனைத்துநீ முண்டமதாக்கி
அடைவுடனேமடலவனைநீவிடு சிறைதனிலிடுகுருபரா (அ

2. தொண்டர்கள்தீவினை அண்டாமலேமுனை
துதிசிவகுருசரவணபவசுகமது தாநிதமுமெனெதிர் (அ

3. வள்ளியைத்தேடியே துள்ளிநீரோடியே
வனமதுதனிலனமெனையணைதினமுமுனுடனமதையெனும்

4. சேவல்மயிலுடன் செங்கையயிலுடன்
திடுதிடுவெனநடமுடனெதிர்திரி புரமெரிநெரியோன்மகனே

5. தாசன்யானுண்டவன் சாமியைவேண்டுவன்
சகமதையுனதகமதுதனில் மிகவழாவேசுகநினைவுறு (அய்)



சுசுகூ. இராகம்-கல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சிவகுருவே ஷண்முகநாமத்தருவே
சிவகுருவே ஷண்முகநாமத்தருவே

அநுபல்லவி.

துவேஷப்ரபலர்மாய்ந்த செருவே செருவுருவே
மோனத்திருவே (சிவ)

சரணம்.

1. சாதுசனர்கள்பணிதுரையே அருள்
சைவந்தழைக்கவந்தநிரையே நிரையுரையே
அருமறையே (சிவ)

2. சூரர்தனைப்பழித்தசினமே பஞ்சைச்
சுரருக்கருளளித்தகனமே கனமனமே
யருடினமே (சிவ)

3. தீனதயாளகுணபானே இந்தச்
செகமதிலெங்குநிறைவானே வரதானே
குருகானே (சிவ)

4. இங்கிதவள்ளிலோலப்பிரியனே விண்ணின்
இந்திரன்தெய்வானைதனக்குரியனே உமைசிரியனே
வீரியனே (சிவ)

5. குன்றைநகருனக்குப்பதியே கொண்ட
குமாரவெனக்குனருள்கெதியே கெதிமதியே
தவநிதியே (சிவ)

6. ஆனைமுகன்றன் சகோதரனே
ஆண்டவனகவிக்கருள் கிருபாகரனே
கிருபாகரனே (சிவ)

---

எம. இராகம்-பூரிகல்யாணி-அடதாளம்.
மதுராநிலையிலிருந்தமாது என்றமெட்டு.

பல்லவி.

தினமுங்கிருபைசெய்யாததேது
திருவடிதனைத்தரவேண் வாது

அநுபல்லவி.

வன்மங்கைபிடங் கனமுடன்சென்று
மருவிச்சேரெனக்குருநகை கொண்டு
கனமுடன்கரி யெதிர்வரக்கண்டு
கந்தனேஉமைமைந்தனேயெனவந்தேசேரேன்றவா (தின)

சரணம்.

1. குருமுனிதனக்கரு ளளித்தவா
கொடியவசுரர்கிளை யொழித்தவா
இருளெனுமாயைதனை யழித்தவா
யீசனுமலர்வாசனுமரி பூசைபேற்கின்றவா (தின)

2. ஐங்கரன்றனக்கிளைய கந்தனே
அருண்மைவாலைபெற்றெடுத்த மைந்தனே
திங்களையணிதியாகன் சொந்தனே
சேயனேகனிவாயனே மறைநேயனேபிரணவமூலா (தின)

3. பூதியணிந்திடும் ஆதிபணிந்திடும்
பூவலனேகாம மோடியொழிந்திடும்
சாதிசமயச்சழக் கழிந்திடும்
சற்குருவாகியகுகபவ நிக்ரககாரணா (தின)

4. பவக்கடல்தனைக்கடக்குந் தெப்பமே
பாவலருனக்குத்தருவார் கப்பமே
சிவக்கொழுந்தே மற்றெவருஞ் சொற்பமே
சிலனேயாண்டவன்கவிபுனே வேலனேயேழைமேல் (தின)

---

குமாரகுரு-வென்ற.மெட்டு.

எக. இராகம்-சாவேரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கருணாகர ஸ்ரீசுந்தரிநந்தன வடிவேலவ (கரு)

அநுபல்லவி.

தெருணகார்த்திகேயா சிந்தனைதெளிவுரவந்
தருளென்றனையிணையடி கொண்டருள் (கரு)

சரணம்.

1. அருணாபகனேதேவா அறுமுகவனேவாவா
தருணமிதுவே காவாசஞ்சலவேதனைபொடிபட
தஞ்சமென்மன மலரடியிட (கரு)

2. கோடிசூரியப்பிரகாசா குன்றில்வாழ்முருகேசா
வாடினேன்குமரேசா வந்தெனையாண்டருளிது
ததிகந்தனேயுன்பதமது கெதி (கரு)

3. மூவர்கள்தேடும்பாதா முன்வர இன்னம்வாதா
நாவலர்பணிவேதா நஞ்சொடுவரவணிபாலனே
வெஞ்சமராகிய வேலனே (கரு)

4. மயிலேறுமுருகையா மவுனயோகிகள் மெய்யா
அயிலேந்துங்கரத்தையா ஆண்டவனுறைகவி
யணிபததாண்டவ சிவஷண்முகநாதா (கரு)

---

எஉ. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வேலனே கெதிமனமே உமையம்பிகை
பாலனே துதிதினமே (வே)

அநுபல்லவி.

கோலாகல கல்யாண குணகரனேபிர்மாண
சீலாவனந்தகுண சிவசுப்ரமண்ய குக (வே)

சரணம்.

1. ஆதிமத்யாந்தபிர்ம அருமறை தேடும்மர்ம
சோதிசிற்பரதர்ம சுருதியுணர்ந்த சத்தி (வே)

2. பக்தவடியார்கோடி பாவலர்வந்துகூடி
முக்தசரிதம்பாடி முடிபணிந்திடும்வடி (வே)

3. வேதன்குறையிரந்த வேளைபருள் சுரந்த
நீதன் விழிபிரந்த நித்யதத்துவ வடி (வே)

4. தினகரனெழியணி தேசிகநவமணி
அனவரதமும்பணி ஆண்டவன்கவிக்கருள் (வே)

---

எங. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

வேலாயிது ததிவந்தெந்தனையாத்ரிகந்தகுணகர (வேலா)

அநுபல்லவி.

சீலாபுவனபரிபாலா அசுரகுலகாலா
அருமறைசொல்மூலா வனந்தகுண (வே)

சரணம்.

1. வாகாகுரமாதுசம்போகா நித்யதத்துவயோகா
நவரத்னதேகா கல்யாணகுண (வே)

2. தாதாவிமையோர்பணிபாதா அகிலபிரக்யாதா
ரகுநாயகசீதா மருககுக (வே)

3. மாராஅவுணர்கள்சங்காரா கலாபமயில்வீரா
ஜெயகெம்பீரதீரா தயாளகுண (வே)

4. நேமியணிபவளுன்மாமி யவள்மகளுன்காமி
ஆண்டவன்பணி சாமியருள்தருணை (வே)

---

எச. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

கந்தாநீவந்தருளென்முன் கதிதரு முயர்பதி
சரவணநிதிசிவகுரு சதிபவமா மதிரவியொளிரிட (கந்)

அநுபல்லவி.

சிந்தாகுலந்தவிர்த்து திரிபுரமதை யெரி கரியுரி
பவனெரியருமறை தனைவிரி யெனவொரு மொழிதெரி (கந்)

சரணம்.

1. வாதாவென்மேல்வள்ளிநேயா வழர்மதியொழிரிடு
மழுகியமுகமொடு வளமயில்நடமிடு களபநன்மணமொடு (கந்)

2. நாதாவுந்தன்பாதந்தாராய் நதியொடு மதிமழு
டமாகமரவொடு கெதியுடனடமிடுபதிசிவனருளிய (கந்)

3. தேவாவன்மயேனோ சொல்லாய்திலதமதிலகிடு
மதிமுகமொடு சொலிபரிபுரவொலியொடு வருசிவையுதவிடு (கந்)

4. பத்தியாயாண்டவன்பணி பலகதிரொளியது
வொருபொழுதினிலுறுபவிசிதுவெனவருமவிபெருசிவதரு (கந்)

---

எரு. இராகம்-சங்கராபரணம்-தாளம்-கிஸ்ரம்.

அய்யனேவாவா வென்றமெட்டு.

பல்லவி.

உன்னருள்தாதா அம்மை உமையாளருளியபாலக
விமையோர்பிணி தணிவேலவ (உன்)

அநுபல்லவி.

பொன்னகர்க் குறுபுரந்தரன்றந்த பூவையையமணமுறு
சீலனே மாமறைபுகழ்மகிலோலனே (உன்)

சரணம்.

1. பாரையாகுகனே இந்தப்படிமீதினிலடியேன்
வினைபொடியாய்மிடிபரவே எனை பாரையா
நீர்நறுந்தொடைபாரரவுந்திகழ் நெரியுணர்சிவனரு
மறைதனைவிரியெனவரியெனுமுருகனே (உன்)

2. ஆரிறுவத்தமதால் உன்றனயில்மயின்மிசை ஒயிலு
டனிறுகுயிலிறுபுரமபலுரவனை ஆரிறு
நேறுமித்ததிநின்மலனேயிந்த நிலமீதுறுதலமா
றினினலமாகவேயுலகாள்பவா (உன்)

3. கார்த்திகேயனே நீ இந்தக் கலியினிலுறுமாவலிகா
ணலிவுற வரமேபருள்வாய் கார்த்தி
சிர்த்திரம்புனையாண்டவன்பணி சீலாகுணலீலா
கன கோலாகல வேலாததி (உன்)

---

எசு. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-ரூபகம்

சோமசுந்தரேசா வென்றமெட்டு.

பல்லவி.

வாவெழுந்துவேலவா என்முன் மயிலிலேறி

அநுபல்லவி.

காவதனிற்சென்றதுய்யா கன்னியைமருவுங்கையா
சேவடிதந்தென்னையாளையா சிறியேன்மெய்யா (வா)

சரணம்,

1. பச்சைமயிலேறிவந்து பாலனுக்கருள்சுரந்து
நிச்சயமாயுன்பதந்தந்து நிதமுவந்து (வா)

2. ஆறுடனீராறிலங்க அன்னையிருபாற்றுலங்க
தாருடன் முத்தாரமலங்க சலசலென்க (வா)

3. தந்திமுகன் முன்னேயுர தந்தையன்னை பின்னேவர
விந்தையிதென்றேமகிழ்வுர விணையேயர (வா)

4. தாண்டவனுக்குற்றநாதா ஷண்முகாவமரர் நீதா
ஆண்டவன்பணிந்திடும்பாதா அருளைத்தாதா (வா)

---

எஎ. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

அய்யா இதென்ன சொல்லையா ஏழையென்மீது
மெய்யா இரக்கமில்லையா

அநுபல்லவி.

கையாறிரண்டுடைய துய்யாபுகழ்சிறந்த காமாந்தகன்பயந்தபூமா
தருணமிதுகாரு கருணைக்கண்ணாற்பாரு
கதியெனக்குக்கூறு நேரு கலியைத்தீரு (அய்)

சரணம்.

1. இன்னமென்மீதுகோபமா முன்னமேசெய்த
என்னூழ்வினையின் பவமா
அன்னம்பொலியுஞ்செந்தூரத்தா வருள்புரியவேணும்
மலரடியைக்காணுந் திரமெனக்குத்தாராய்
தசரிலூர்ந்துவாராய் தமியன்முன்னேநேராய் சாமிநீசீராய் (அய்)

2. ஆகிநீசெய்வதாகுமா சிறுகுழந்தை
அன்னையைவிட்டுப்போகுமா
ஏதிப்படிஇருப்பதேதோ என்றன்மேலென்னவாது
எனக்கிரங்கிபோது நீசெய்வதுதகாது மனமிரங்கிப்பாது
கார்த்திடுவாயிப்போது எழியன்மீது (அய்)

3. வேலாஎன்மீதில்வர்மமா தினமுமெனை
மேவாதிருத்தல்தர்மமா
காலாந்தகன்புகழுங் கந்தாவுன்றன்கழலைக்காட்டும்
பவமதனையோட்டும் படிக்கருள்செய்வீரா
அவுணர்கள்சங்காராகுமாதனே மாராமிகும்ஒய்யாரா (அய்)

4. தேவாயின்னமுந்தூரமா தயவுசெய்து
சித்தமிரங்க நேரமா
காவாயாண்டவன்கவிக்காகக் கருணைசெய்வாய்
காமிமனமகிழுஞ்சாமி தவத்தில்வந்தகந்தா
குருமுனிக்குகந்தாதருள்பரவுமைமைந்தா விநோதவிந்தா (அய்)

---

௭௮. இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பல்லவி.

கோலமயில்வாகனுபதம் கொடுத்தாள்நிதம்

அநுபல்லவி.

சிலமறைதேடரிய செம்பொற்பதமதனிற்
சேர்ந்திலங்குந்தாட்சிலம்பு சில்சில்சில்சில்சில்சில்சில்
சிருசதங்கை கல்சல்கல்கல்கல்கல்கல்
பசும்பொன்றண்டை வில்வில்வில்வில்வில்வில்வில்
வில்லெனவொளிர தேவர்கள்பாவலர் நாவலர் காவலர்
ஆவலாய்ப்போற்றிய சேவடிதந்தருள் (கோல)

சரணங்கள்.

1. பங்கபாசனன்வணங்கவே பரிந்திணங்க
கங்காதரன்புகழும் கர்த்தனேயுன்மெய்யடியர்
கழல்சொரியுங்கற்பகப்பூ கம்கம்கம்கம்கம்கம்கம்
கந்தப்பொடிகள் ஜம்ஜம்ஜம்ஜம்ஜம்ஜம்ஜம்
ஜவாதுமணம் கும்கும்கும்கும்கும்கும்கும்
வடியார்கோட்டம் திம்திம்திம்திம்திம்திம்திம்
திம்மெனவே யெங்கணுமன்பர்கள்பொங்கமுடன்
பணிதங்கவேளே பாதபங்கயந்தந்தருள் (கோல

2. சீரலைவாய்தன்னிலிருந்து தினமகிழ்ந்து
பாரிற்சிரந்த பரங்குன்றிலரிபாவைதனைபாரியென
சங்கிதனைசை பம்பம்பம்பம்பம்பம்
மிர்தங்கத்தொனி கிண்கிண்கிண்கிண்கிண்கிண்கிண்
தம்பட்டவொலி டுண்டுண்டுண்டுண்டுண்டுண்டுண்
பேரிசைதவில் டிண்டிண்டிண்டிண்டிண்டிண்டிண்
டிண்டெனவே கானகத்துச்சூரமானைப்புணர்ந்துயர்
தீனர்க்குதவிய ஞானப்பதமருள் (கோல

3. வானோர்கள்வந்து காரேனமகிழ்ந்தாரென
மேனான்வினைப் பபனதாலவுணர்மிஞ்சினர்க
ளென்றிடவும் வெல்வெல்வெல்வெல்வெல்வெல்வெல்
வெல்லெனச்செலவே நில்நில்நில்நில்நில்நில்நில்
நில்லெனப்படையை செல்செல்செல்செல்செல்செல்செல்
செல்லெனவேவாளால்கொல்கொல்கொல்கொல்கொல்கொல்
கொல்லென்பதாக பின்னவர்சூழவேநன்னயமாய்ச்
சென்றுஒன்னலரைவென்று பொன்னின்பதமருள் (கோல

4. பாவாலுன்றன்பாதம் போற்றினேன்பணிந்தேற்றினேன்
தேவாயித்தரியாண்டவன் றீமைதனையேயகற்றிச்
செல்வமதையெனையணுகச் செய்செய்செய்செய்செய்செய்செய்
செய்தேகிருபை வைவைவைவைவைவைவை
வைத்தமுதமழை பெய்பெய்பெய்பெய்பெய்பெய்பெய்
பெய்யெனச்சூவித்தேன் கைகைகைகைகைகைகை
கையைச்சிரத்தில்நீருங் கடம்பும்பைந்தாருடனற்கெதி
சேருமபடியெந்த னேருன்பதமருள் (கோல

———

நடராஜா-பென்றமெட்டு.

ஏகூ. இராகம்-நாட்டை-தாளம்-ஆதி.

பல்லவி.

வடிவேலா மயூரகிரி வடிவேலா வெம
வாதைபாதுமொரு தீதுமணுகா தருள் (வடி)

அநுபல்லவி.

படிமிசையுறுபவமணுகா தெனைக்கடைக்கண்பார்
பரமன்மகிழ்-பார்-ப்பதிபருளு-பா-லகவுனது-பா-தம
துறவேபதிபிறுபுரமது தனிலுறமயின்மிசை
பரிவுடனிருபரிபுரவொலியுடனருள் (வடி)

சரணம்.

1. பா-வலர்கள்புனை-பா-மலர்களணி-பா-மலிவுறுக்கு
பா-கரவுனது-பதிதனிலிமையவாரிபிரமர்களொடு
பகாருமறைபுகளிணையடிதொழவருள் (வடி)

2. மான்-பணியுமழு-மான்-கரமுறுபெம்-மான்
பாவியசீ-மான்-புவியதனில் வடிவுறுமடவலர்
விழிவலைதனிலுறுமயல்தனையயர்வுற மதிதனைமிகவருள் (வடி)

3. வா-சவனருள்தெய்-வா-னையைமருவி-வா-
ரணமதனை-வா-வடவியென வருகரிமுகனெதிரா
வெருபயமுறுமடமயில் தனைவலமிருவெனவாமருள் (வடி)

4. கா-வலவினைபு-கா-தனவர் த-கா-லமுமுனது
கால்தனிலாண்டவன்-கவனமதுரமருகவனம
தனைவிடு-கவனமதனையெனதகம்-வளரவேயருள் (வடி)

---

மூலாதா கணேசா பென்ற மெட்டு.

அய. இராகம்-ஸ்ரீ-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

ஆறுதார குகேசா ஆண்டருளீசா
ஆண்டருளீசா கிருபை பூண்டசர்வேசா (ஆறு)

அநுபல்லவி.

ஈறுறுசாமுளநாதா ஏழைமேல்வாதா
ஏழைமேல்வாதா எனக்கின்றருள்தாதா (ஆறு)

சரணம்.

1. சூராதியை யழித்தவீரா சுந்தர தீரா
சுந்தர தீராமறை சொல்லும்விஸ்த்தாரா (ஆறு)

2. பாராருனதடியர் நேசா பற்பலவேசா
பற்பலவேசா க்ருபை பண்ணும்ப்ரகாசா (ஆறு)

3. காலாயுதக்கொடியனேவா கர்த்தனேதேவா
கர்த்தனேதேவா என்றுங் கன்மமேமேவா (ஆறு)

4. ஆண்டவன்பணியும் வேலனே ஆதிமூலனே
ஆதிமூலனே விளை யாடும்பாலனே (ஆறு)

---

௮க. இராகம்-ஸ்ரீ-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

பாதாரவிந்தமேதா பாலித்தாள் நீதா
பாலித்தாள்நீதா உன்றன்பாலனேனுதா (பா)

அநுபல்லவி.

நீதாவரந்தரவே வாதா நித்யவினோதா
நித்யவினோதா உன்ற னேசமேதாதா

சரணம்.

1. வாகாகுரமகழ்மணாளா வந்தெனையாளா
வந்தெனையாளாயென்று மாசறுந்தாளா (பா)

2. வாசாதிருமகளுலாசா மந்திரபூசா
மந்திரபூசா குற மங்கைதன்னேசா (பா)

3. ஆண்டவனுக்கருளுந்த்யாகா அய்யனேயேகா
அய்யனேயேகா உன்றனன்பர்கள்மோகா (பா)

---

தில்லைத்தாண்டவராயா வென்றமெட்டு.

அஉ. இராகம்-பரஸு-தாளம்-ஆதி.

பல்லவி.

வள்ளிக்குகந்தநாதா அரியயன்
வணங்குந்திருவடியைப இணங்கியெனக்கருள்செய் (வள்)

அநுபல்லவி.

புள்ளிக்கலபமயில் துள்ளிக்குதிக்சவதில்
வெள்ளிக்குடைநிழற்கீழ் வீற்றிருந்தெனையாளும்
விசுவாசா அன்பர்அகநேசா ஜென்மபவநாசா
எங்கும்பரவி விழங்குகின்ற (வள்ளி)

சரணம்.

1. காயம்நிலைபிராது காலங்கள்வீண்போகாது
நேயம்தரவேவாது நின்மலாவென்னவோது நீபாது
காரிப்போது கலைமாது பெற்றகாலாயுதக்கொடியோய் (வள்)

2. பஞ்சபாதகத்தொழில் அஞ்சாமலேபுரிந்து
வஞ்சக்கணிகையர்பால் தஞ்சமெனத்திரிந்து
தவியாமல்வரந்தாரும் மதிகூறும் என்றுமாறுதெனக்கிரங்கி (வள்)

3. பாரில்யெனக்குவேரே யாருந்துணையில்லாமல்
நேரினில்முறையிட்டேன் காருங்கருணைசெய்து கதிர்வேலா
கதிதாதா மலர்ப்பாதா இருள்கவிந்தகானத்துதித்த (வள்)

4. நித்திரையிலுமுனைப் பத்திசெயாண்டவன்
நத்திபவரந்தனைச் சித்திசெய்வாயென்றும் நமன்வாராமலே
கார்கார் அருள்பார்பார் இந்தஅகிலமுழுதுந்தந்த (வள்)

---

நகுமோமு என்ற கிருத்திகைமெட்டு.

அங. இராகம்-ஆபேரி-தாளம்-ஆதி.

பல்லவி.

வரவெணுமிதுவேளை மாயூரமிசையே
மதகுரோத காலா

அநுபல்லவி.

பரபோகம்துசேர பவமேகநீசெய்ய
பரிவொடுனேயே தொழுதேனருடா பரமன்குமரா (வா)

சரணம்.

1. புவிமீதுபலமாயைபது சூழத்துயர்மீறி
தவியாமல்எனேயாள திரிசூலிதருசேயே
வடிவேலாபடிமீது அடியேனுக்கெவருறவு
பதத்தாளதிற்சேர் பருத்தாள்சருத்தா பழனிவாசகநீ (வா)

2. மதிமோசமதினலே சதிமாதர்வலேமூழ்கி
விதியாரி நிதிபோகி கொடிதானயடிமூண்டு
உழலாமற்கழல்மேவ நிழல்தாராய்குருபரனே
தினைக்கானகத்தே தினைத்தேன்புசித்தாய் தினமுமேவியேநீ (வா)

3. குயிலோடுமயில்மீது அயிலேந்திழையிலாக
வெயில்வீச வருவாயே கருமேனியுறுகாலன்
சினமீறியெனேமேவு முனமேநீதிருவருள்செய்
வணங்காண்டவனேவனஞ்சேர்கழல்சேர் மயூரவாசகநீ (வா)

---

அச. புரோவசமபம் என்றமெட்டு.

பல்லவி.

முருகேசனே மூலாதாரனே

அநுபல்லவி.

கருணாகரா கவுமாரிபாலா
தருணமிதைபா தமியேனையாழ்வாய் (மு)

சரணம்.

1. தெய்வயானைநாதா தேவர்தொழும்பாதா
சேவடியைத்தாதா சித்தமிரங்காதா
அவமாகவே அலைந்துழலாமல்
தவமேயான்செய்ய தயைசெய்துகாரும் (மு)

2. ஆறுபதிநின்றாய் அவுணரைச்சொன்றாய்
மாறுவேடங்கொண்டாய் வனமாதைச்கண்டாய்
தறுகண்வேழந்தனை யழைத்தங்கே
வருசுரமானை மகிழ்ந்தணைந்தாளும் (மு)

3. மலைமகள்பாலா மயிலேறுஞ்சீலா
தலைவாய்ந்தவேலா தர்மகுணலோலா
சிலைமீதினிற் றிருச்கோயில் கொண்ட
அலைசூடுமீசன் அருட்செல்வயேயாள் (மு)

4. காமாறுமாறும் கதிர்சென்னியாறும்
மரமாவைபீறும் வடிவேலுந்தாரும்
பிரமாவைவெல் பிரணவத்தோடு
வரவேயாண்டவன் வல்வினைதீர்த்தாள (மு)

---

அரு. இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பல்லவி.

சஞ்சலந்தனையகற்றும்
சண்முகனேயுந்தன் றிருவருடந்தே மன (ச)

அநுபல்லவி.

தஞ்சயென்றேயுந்தன் சரணடைந்தேன்வேலா நீ
தருணமிதுவேபரகெதிதரகருணைசெய்திரு மருக குகனே (ச)

சரணம்.

1. வஞ்சகமாதர்விழிவலையிற் பட்டு
வாய்ச்சொல்லைமெய்யெனநம்பி மதிகெட்டு
நெஞ்சமுழன்றுதிரிந்து வழிவிட்டு நீ
நெறிதனைபொருபொரு ளலவெனுமருள்
குடிகொழு மனதினிலுறு (சஞ்)

2. கண்டவுடனேமயங்கு குபந்தனைக்
சார்ட்டிடமபல்தனில் மூட்டுபவர்தனை
தொண்டுசெயவே நினைக்கும்நினைவினை நீ
துகள்படவுனதிருவடி தனிலுறுபொடிதனை
யருள் முருகனே (சஞ்)

3. அத்தாஇதுவரையரிந் தரியாமல்
அடியேன்செய்த குற்றங்களனைத்தையும்
சித்தம்பொருத்துச் சிரியன்ஆண்டவனே ரீ
சிறுமைவினையதருகுராமலே வருபிரணவ
கிருபை செய்துநீ (சஞ்)

---

அசு. இராகம்-நாதநாமகிரியை-தாளம்-சாப்பு.

பல்லவி.

இத்ததிவந்தெனையாள் யீசகுருராஜமுரு
கேசகுமரேசனே நீ (இத்)

அநுபல்லவி.

சித்தர்சள்தினந்துதிக்கும் செல்வனேமுத்துக்குமரா
அத்தனேயறுமுகவா ஆதிபரஞ்சோதி பிர்மவாதி
ஜெகநீதிபனே (இத்)

சரணம்.

1. சாரமில்லாசம்சார சாகரத்திலேயுழன்று
தீரமில்லாச்சிந்தையொடு தேடிமிகவாடி
யுனைநாடிப் பதம்பாடினேனே (இத்)

2. மூவாசைதனைமருக்க முடிடாமலேவிழித்து
தேவாபின்னந்திகைத்தேன் தெரித்துயர்மீரி
வரமாரியருள் காரியனே (இத்)

3. காலன்வருவானென்று கலங்குதேசிந்தைமிக
ஓலமிட்டுமொழிந்தேன் ஒகோமனம்நோகாமலே
தாகமொடு போகமளித் (இத்)

4. ஐம்புலன்களைவென்றுநான் அறிவையென்வயப்படுத்த
வெம்பினேன்வேலவனே வேறுகெதியாருமிலைக்
காரும்ஆண்டவனுக் கிரங்கி (இத்)

---

சேவடியே சரணம்யென்றமெட்டு.

அஎ. இராகம்-நாட்டைக்குரிஞ்சி--தாளம்-ஏகம்.

பல்லவி.

வேலவனேசரணம் கதிர்வடி வேலவனேசரணம்

## அநுபல்லவி.

காலனைவீரியஆலசண்டனருள் மூலகணேசனை
யோர்லமிட்டேபுமை வாலகுருபானே
நவமணியேமறை தேடிய (வேல)

## சரணம்,

1. வாரிதிசூழிந்தப்பாரினிலேகொடு மையலிலாழ்ந்தேனே
இன்மைமாசரு ஞானவழிசென்றிடாமலே வாடியேதாழ்ந்தேனே
ஆரியர்தங்களைக்கொரியேசாதன ஞகாமற்போனெனே
பொல்லாவல்லலெனுஞ்சமுசாரத்தினில் நின்றலையவுமானேனே
நாரிகொடுரிபிடாரி ஓங்காரிசங்காரி விஸ்த்தாரிஔயாரியின்சுதனே
காரிமருமகனே வலிமிகு கந்திப்பொடு
தந்திக்கனிமுந்திப்பெர நிந்தித்துரை (வே)

2. மோசமதைத்தவிர் யோசமதைச்செய முற்றுமாந்தேனே
வாசிமுற்றிச்சுழிமுனை நற்றித்துடாமல் மூடன்பிறந்தேனே
ஆகமத்திலுறை யேசனும்நீயென் றறியாமற்போனேனே
நெஞ்சிலன்பிலாவினவறிவுடையோனு யவனியிலானேனே
வாகவிவேகநிர்வாக சையோகவைபோக மையேசமெய்பாக
வருகோனே தாகமதானவனே வனந்தனில் தையற்கிரு
கையிற்பணிபைபக்கொடு மெப்பைத்தொடு (வே)

3. சீலவந்துகருணையுடன்றேவர் சேனுபதியாகி
வெகுதீரமுள்ளவீரவாகுவைத் தூதெனச்சென்றிடெனவேகி
சூரனிடஞ்சென்று சொல்லிக்கேளாததாற் றேன்றிச்சினமாகி
கொடுந்துஷ்டச்சூரர்களைக்கொன்றுதலைச்சத் துணைவருடனேகி
வீரகெம்பீரவுதாரவகோர குடோரவசூர சம்மாரஞ்செய்முருகா
நாமகள்நன்முருகா யென்றும்நாடும் பொருள்கூடும்
படியாடுஞ் சிகியோடிங்கருள் (வே)

4. மதியறுகாவொடுநறுமலர்நதிபது சிரமணிபாசிவன்
மனமதுமகிழ் தினகரசொருபா என்றும்வாழ்வை
எனக்குநீதாழ்வுறுமற்றரவந்திடுவாய் கிருபா
விதியுதவிடுவிதிதனையொரு விதியெனவவன்
விதியிலமெனவெஞ்சினத்தோடடைத்தாய் பின்னும்
வேதனுக்காயரன் சாதகமாய்வா வேண்டிப்பதியளித்தாய்

துதிசெயுமதிதியின் திசதி துகளுரவுன திருவடியது சுபகரமொடு
தாவதின்மிசை சுகியெனவுன திருவருள்புரி சுரர்கனிவுறு
மரகதமணியே பணிஆண்டவன் பணியே கொளுந்திகழ்
பன்னிருபுய வென்னிருதய நன்னயமுய மன்னருள்செய (வே)

---

ஆறுமுகமானலோலனே யென்றமெட்டு.

அஅ. இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

வாருமெனையாளுநீருமே வரந்
தாருமருள் கூருமே

அநுபல்லவி,

நீருங்கடம்பணியும் ஆறுமுககுகனே
நீலகண்டனருள்பாலகுமாரனே நீதமிதோதாஷயா
எனைமேவிடவாதேனயா (வாரு)

சரணம்.

1. வாரிதனிலொழித்த சூரைத்துளைத்திட்டவா
வாசாமகோசரமான முருகனேவர்மமென்மேலாகுமா
எந்தன்வாதை விட்டுப்போகுமா (வாரு)

2. கானகந்தனில்வேங்கையான சரவணனே
காயமிதுமாயம் நேயம்பெறவேநீ கையணைக்கவேணுமே
யுனைக் காணமதி தோணுமே (வாரு)

3. வேதன்குறையிரக்க நீதமுரைத்தவனே
வேலாகுருபர சீலாசிங்காரனே மெத்தத்துயரானேனே
என்றுஞ் சித்தத்தரி வீனனே (வாரு

4. தூண்டாமணிவிழக்கே ஆண்டவனைரெட்சிக்க
தோகைமயின்மீதி லாரோகணித்துவா
சுப்ரமண்யலோலனே சிவசுந்தரிதன்பாலனே (வாரு



ஸ்ரீமர்தவா என்றமெட்டு.

அக. இராகம்-கவாய்தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஓம்வேலவா உன்றன்வெற்றிமயின்மீதிலேரிவா
வேதனைமோதியநீதா குணளவடி (வேலவா)

அநுபல்லவி.

ஆலந்தனையுண்டருள்பவன் சேயனே
சீலமொடுவள்ளி தெய்வானைசூழவடி (வேல)

சரணம்.

1. தேவனுனுந்தன் செய்யமலர்த்தாளினிற்சேர்வனு
உயர்தீனதயாபாஞான குமரசிவ (தேவனு)
பாவமெனுங்கொடும் பாதகந்தீர்த்தோனே
பாரபுயாசல சூரசம்மார்வடி (வேல)

2. காவலாஎன்றன் கர்மவினைதிருந் சேவலாநல்ல
காலமிதனிலே சீலமுடனருள்செய் (காவலா)
ஆவலுடன்றினம் அய்யா துதித்தேனே
ஆறுமுகாகுருமாரா சிங்காரவடி (வேல)

3. நாதனேசுரர் நாடிப்பணிந்திடும் பொற்பாதனேபுவி
நாயகமாகிய தூயபாமதரு (நாதனே)
மாதவத்தோர்கள் மதித்திடுஞ்செல்வமே
வாசவுலாசசர் வேசகுகேச வடி (வேல)

4. ஓடிவாசிலம்போசையெழ நடனமாடிவா வெகு
ஒய்யாரமாகவேமெய்யா எனக்கிரங்கி (ஓடிவா)
தேடியேயாண்டவன் றேடித்திகைத்தேனே
தேவாநீவாவாவா மஹானுபாவா வடி (வேல)

---

சரவணபவசிவ சண்முகநாதா என்றமெட்டு.

கூ௰. இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

பரிபுரவொலியெழ நடமிடுதேவா
பாலனெதிர்மயிலில் வாவாவாவா (பரி)

அநுபல்லவி.

திரிபுரமெரித்திடுஞ் சிற்பரன்பாலா
தினமெனைக்காத்திட வாவடிவேலா
எரிபடுமெழுகென வாடினேன்சீலா
ஏழையென்றனக்கருள் செய்யனுகூலா (பரி)

சரணம்.

1. சரவணமதில்வளர் ஷண்முகநாதா
சதுர்மறைமுடிவினி லிலகியநீதா
பிரயனைச்சிரமிசை சாடியவேதா
பேதைக்கிளையடியைத் தந்திடவாதா (பரி)

2. இமையவர்தனக்கருள் செய்யுபகாரா
எதிர்த்தசூரரை வென்றிடுந்தீரா
உமையன்றிக்கெதியில்லை ஓம்ப்ராணதாரா
உவந்தெனையாதரித்திடவேநீ வாரா (பரி)

3. இன்னம்பராமுகமா யிருந்திடலாமா
என்முறையுன்செவிக் கேறாமற்போமா
அன்னம்பொலியுங்குன்றை யமர்ந்திடும்பூமா
ஆண்டவன்பணிந்திடும் ஆயிரநாமா (பரி)



முங்கிமுழுகிர என்றமெட்டு.

௬௧.இராகம்-தன்யாசி-ஏகதாளம்-சாப்பு.

பல்லவி.

செந்தில்வளர்ந்திடுகந்தா எனக்கருள்
செய்ய வாராயோ

அநுபல்லவி.

தந்தியையொருநாள் வாவென்றழைப்பித்தவா
சாமியிதுதகி தயங்காதேயென்று (செந்)

சரணம்.

1. வஞ்சகமாம்பிர பஞ்சமெனும்பொல்லா
மயல்தனில் வாடுகிறேன்
செஞ்சிலம்பசையுஞ் சேவடிதனையே
தெரிசித்துயானனு தினமுமிருக்க (செந்)

2. கல்லோமலையோ கர்த்தனேயுன்னெஞ்சம்
கரையாததென்னமோ தான்
அல்லல்தனில்நா னகமெலிந்துழன்றேன்
அலைபடுதுரும்பா யாகினேன்றினமும் (செந்)

3. நித்தமுமடியேன் பித்தனெனத்திரிய
நீதமோதர்மந் தானோ
புத்தமுந்தனைப் பத்தியேயருந்தி
புன்மைதவிர்த்துநா னன்மையடையவே (செந்)

4. பாண்டவர்தோழன்பாவிய குகனே
பட்சம்வைத்தெனை யாள்வாய்
ஆண்டவன்சொல்லும் அருந்தமிட்கிரங்கி
அழகுமயின்மிசை அப்பாவருவாய் (செந்)

---

கூஉ. இராகம்-மோகனம்-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

1. தஞ்சங்கிருபைசெய்குவாய் ஷண்முகவேலனே
தக்ஷணமிங்குமேவுவாய்
சற்றுமிதலா நற்றவர்நாடிய
கொற்றவனேகொடும் பற்றறுத்தாளுந்தன் (தஞ்)

2. நெஞ்சமுழன்றுவாடுறேன் நின்மலரூபனே
நித்தியமுன்னைப்பாடுறேன்
நேசமிதுதுயர் தீரமனத்திடன்
வாசமயிலினி லேறிவந்தாளுந்தன் (தஞ்)

3. வஞ்சமயலிலாடினேன் வள்ளிமணாளனே
மாற்றுதற்குன்னைநாடினேன்
வங்கமலாணி பங்கயப்பாதனே
பொங்கமுடனெனையிங்கு வந்தாளுந்தன் (தஞ்)

4. அஞ்சலெனவேசொல்லுவாய் அம்பிகைபாலனே
அங்கசன்றன்னை வெல்லுவாய்
அன்றசுராதியைக் கொன்றுநடம்புரிகின்ற
பதத்தொடு இன்றுவந்தாளுந்தன் (தஞ்)

5. அத்தமீராறிருக்குதே அய்யனேகாங்கேயா
அத்திலோர்வேலிருக்குதே
அன்பன்மனதுறு துன்பந்தனைவெல
இன்பமுடனேவந்துன் பாமாளுந்தன் (தஞ்)

6. சித்தமிரங்கநேரமா சின்மயதேசிகா
தென்பரங்குன்றுந் தூரமா
செய்யமலர்முகத் தைபல்மாருடனே
பையவேவந்துநானுப்பவே யாளுந்தன் (தஞ்)

7. எத்தனைகாலமாகுமோ உன்னையான்காணவே
இப்படியேதான் போகுமோ
என்னதவறுகள் முன்னமேசெய்தாலும்
அன்னைதயையுடன் உன்னிவந்தாளுந்தன் (தஞ்)

8. முத்தையனென்னைக்கார்த்திடு முக்கண்ணன்செல்வனே
முன்னோக்கிருபைபார்த்திடு
பக்தன் ஆண்டவனுக் கெத்திரமுந்தந்து
சித்தமதிலென்னை நத்தியேயாளுந்தன் (தஞ்)



நிந்தாஸ்த்துதி.

கூஉ. இராகம்-சாவேரி-தாளம்-மிஸ்ரம்.

பல்லவி.

எந்தப்பெருமையால் யேழையைப்பாராமல்
இருக்கின்றீர் நீரையா (எந்)

அநுபல்லவி.

சொந்தத்தமையன் ஊருச் சந்திகள்தோருங்குந்தி
எந்தமழைவெப்பிலும் யேந்துகொண்டிருக்கிறார் (எந்)

சரணங்கள்.

1 பெற்றதகப்பன்றினம் பேயோடேபாடினர்
பின்னையுன்றில்லையினுன் ருயோடேயாடினர்
சுற்றிலுள்ளவூர்களைச் சுகிக்கவவர்நாடினர்
சுந்தரமூர்த்திக்கித் தூதாளாயோடினர் (எங்)

2. விசையனுக்காற்ருமல் வில்லினலடிபட்டார்
விறகுசுமந்துவிற்க வீதியில்பிரப்பட்டார்
பசையற்றுமேபிச்சை யேற்றிடத்தலைப்பட்டார்
பாம்பையாபரணமாய்ப் பற்றியேயணிந்திட்டார் (எங்)

3. அம்மான்றரத்தைநன்ரு யரியவேயில்லைப்போனும்
ஆயர்பாடிசள்தோருஞ்சென்ருர் பூனையைப்போலும்
சும்மாசுற்றிநுழைந்து தோய்ந்தார்வெண்ணையும்பாலும்
சுகத்தைக்கண்டவர்யாரிச் சுகிப்பாரோவேருேர்பானும் (எங்)

4. கோபிகாமாதர்கள் நீராடத்துகில்களை
கொண்டுபோய்க்கட்டிவைத்தார் புன்னைமரத்தின்கிளை
தாவிஇடையருடன்சென்றுமே பசுக்களைத்
தட்டிமேய்த்துவந்தார் தடியுடனூருக்குள்ளே (எங்)

5. தாயார்செயலைச்சொன்னற் றாணியில்வெகுகேலி
சற்றுமிரக்கமில்லாச் சாம்பவிகொடுநீலி
வாயாற்புகழ்வோரெதிர் வருகுவாள்திரிசூலி
மற்றவர்களைக்கண்டால் மறைந்திடுவாள்கபாலி (எங்)

6. கணவன்மற்றொருத்தியைக் கனமாய்த்தலையில்வைக்க
கண்டுங்காணுததுபோற் கண்ணுமனஞ்சுழிக்க
நிணம்பொனளவும்பினை நெஞ்சில்மாலையாய்ச்சேர்க்க
நித்தியயானுடன்சேர்ந்தாள் மணங்களிக்க (எங்)

7. மைத்துனன்வழக்கத்தை மனதில்நினைத்துப்பாரும்
மனைவியைநாவில்வைத்தார் மார்க்கமோவிதுகூறும்
பித்தன்கையாற்றலையைப் பிய்க்கக்கொடுத்தார்பாரும்
பெருமையினுற்சிரையி லடைத்தீரதுவேபோரும் (எங்)

8. இந்தப்பெருமைகளையெண்ணி யிருக்கின்றீரோ
இல்லையாண்டவன்மீது வர்மம்நினைக்கின்றீரோ

பந்தமதையறுத்துப் பாதுகார்த்திடுவீரோ
பட்சம்வைத்தேகிருபை பாலித்தருள்செய்வீரோ (எந்)

---

இதுவுமது.

கூச. இராகம்-கானடா-தாளம்-மிஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி.

மலையாண்டி தன்னைக்கண்டு மயலேண்டிமானே
கொண்டாய் மங்கையர்க்கழகாமோடி (மலை)

அநுபல்லவி.

தலையாண்டிபாவிகள்முன் தரியாண்டிகுமாரனைத்
தானடிக்சானேடித்தவித்துமே திரிந்தாண்டி (மலை)

சரணம்.

1. வெட்கமில்லாமல் வேசைவீடுசென்றாண்டி
வெண்ணீறைக்கண்டமட்டும் மெய்யணிவாண்டி
சட்குமாரனென்றுமே தழலில்வந்தாண்டி
தாயில்லாமலறுவர் தனத்தையுண்டாண்டி (மலை)

2. வேடர்கள்தனக்கஞ்சி வேங்கையானாண்டி
மீட்டும்வளையல்தனை விற்கச்சென்றாண்டி
கூடயானையைத் துணைகூவிபழைத்தாண்டி
கோலவள்ளியைத்தானே கூட்டிச்சென்றாண்டி (மலை)

3. வீடில்லாமல்மலையின் மேலிருந்தாண்டி
வேண்டிவருந்துபவர்க் கெதிரில்வாராண்டி
யீடில்லேனென்றுதானே யிபம்பிடுவாண்டி
இன்பமாய்மயில்தனிலேரித் திரிவாண்டி (மலை)

4. கையில்வேலல்லால் அரைக்காசுமில்லாண்டி
கட்டும்உடையோமானே காவித்துணிதாண்டி
வெய்யில்பட்டால்மேனி வெம்பிடுவாண்டி
வேஷம்போட்டுமே தெருவீதிவருவாண்டி (மலை

5. ஆட்டைக்கழவாண்டவன் அப்பனென்பாண்டி
அன்புடன்பரைச்சிலையை ஆத்தாளென்பாண்டி

மாட்டைமேய்த்திடுவோனை மாமனென்பாண்டி
மறைச்குடவனைச்சொந்த மைத்துனனென்பாண்டி (மலை)

6. வித்தைகள்மிகச்செய்து விளையாடுவாண்டி
மேதினிதனிலெங்கும் விறைவிற்செல்வாண்டி
முத்தையன்சவிதிர முன்வருவாண்டி
மோட்சமுடனேயுயர் முத்திதருவாண்டி (மலை)

---

கூ௩. இராசம்-மோகனம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

யென்னவென்றெடுத்துரைப்பேன் இம்மனக்சொடுமையை
யெதுவென் றெடுத்துரைப்பேன் (யென்ன)

அநுபல்லவி,

பன்னகமணி பரமனை யெண்ணி
தன்னரிடன்தாழ்ந்துவணங்காத (யென்ன)

சரணம்.

1. காமக்குரோத லோபமதத்தால்
சருகிவாடியே அழியும்விதத்தால்
யேமக்கருவிக் கினியசுகத்தால்
பெண்றேநம்பி இருக்கும்அகத்தால் (யென்ன)

2. மண்பெண்பொன்னென்ற வாசைகளாலே
வாடித்திரிந்து வேசைகள்மேலே
தண்பண்பென்னும் பூசைகள்போலே
தாவித்தாவி நடிப்பதுவேலே (யென்ன)

3. சாதுஜனர்கள் வருவதுகண்டு
தண்டாவண்ணம் வெகுகெதிகொண்டு
கோதுகுழல்முடி மாதர்கள்தொண்டு
குவித்துநின்றே செய்வதுபண்டு (யென்ன)

4. சூதுமாதுமீதினில் நாட்டம்
சுத்திக்கொண்டே திரிவதுவாட்டம்
ஓதுவதுதனைக் கண்டாலோட்டம்
ஓபாட்பிறவி கிடைக்கின்றஆட்டம் (யென்ன)

5. பத்திப்பத்தி யிளுத்தும்வருத
பாவமதுக்குள் சிக்கிமடங்கி
கத்திக்கத்தி நாவும்வறண்டேன்
காதுகேளா திருக்கிறதுவே (யென்ன)

6. துர்ப்பலமான சகோதரர்மூன்று
தூண்டிக்கொண்டே திரிவதுகண்டு
இப்புவிவாழ்வை நிசமெனக்கொண்டு
பேமாந்திருப்ப திதுவெனநன்று (யென்ன)

7. ஊரார்பொருளை விரும்பிநல்ல
உடமைகள்தன்னைத் தனக்கென்றுகொள்ள
பாரோருளும் மன்னவர்கிள்ள
பற்றியிழுத்துச் சிறையில்தள்ள (யென்ன)

8. தன்புத்தியிலும் வல்லதல்ல
தாளெருவர்புத்தி கேட்பதல்ல
யென்புத்தியிலும் நல்லநல்ல
இனியதென்றே துணிந்துசெல்ல (யென்ன)

9. கூட்டிலிருந்து காட்டிவிட்டு
குடிகொண்டிருப்ப ததுவேமெட்டு
பாட்டிலிருந்து விடுகிறசொட்டு
பாவலர்நாவலர் பொருப்பதுசெட்டு (யென்ன)

---

கூசு. இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஜம்பை.

பல்லவி.

துதிமனமே நீதுதிமனமே சிவ
சுப்பிரமணியனைத் துதிமனமே (துதி)

அநுபல்லவி.

பதிமனமே நெஞ்சில் பழநிவாசனை
பார்வதி அகமகிழ் பாலகுகேசனை (துதி)

சரணம்.

1. அதிகமாகவேதேடு அவர்அந்தஸ்த்தைக்கொஞ்சம்பாடு
விசித்மாகியவீடு அந்தவீட்டையவேநாடு (துதி)

2. காகம்நாய்நரிக்கூட்டம் உன்னைக்கண்டுமேவெகுகொண்டாட்டம்
தாகம்தீரவேஊட்டம் பசிதணிந்தாலாடுமேஆட்டம் (து)

3. வேரில்லாததோர் தூறு அதுவிளையாடுவதைநீபாரு
தாரில்லாமலுழுமேறு அந்தச்சங்சடத்தைநீதீரு (து)

4. வாழ்வுசந்தைபிற்கூட்டம் இங்கேமற்றதெல்லாம்பொம்மலாட்டம்
இந்தப்பாழ்வயிற்றுக்கேஊட்டம் நாளும்பற்றித்தேடுவதில்நாட்டம் (து)

5. ஆடுமாடுசொந்தமல்ல அதைஅநித்தியமென்றுநீதள்ள
வீடுபோவெனுமெல்ல நீவிட்டுச்சுடுகாடுசெல்ல (து)

6. ஆங்காரக்காட்டைவெட்டி அதில்அறிவுத்தீயினைமூட்டி
ஓங்காரப்பொருளைக்கிட்டி நீஉய்ந்துவாழுவாய்மட்டி (து)

7. விருதுபந்தபங்கூறாதே இந்தமேதினியோரைச்சீறாதே
கருவில்நீயுதித்தபோதே இந்தக்காசினிவாழ்வெல்லாஞ்சூதே (து)

8. துஷ்டர்சகவாசஞ்செய்யாதே நல்லதூயனைக்கண்டுவிலகாதே
அஷ்டமந்திரம்நீவிடாதே அய்யோமதிகெட்டிடாதே (து)

9. வீண்காலங்கழிக்காதே கற்புமின்னார்களைப்பழிக்காதே
போங்காலமுனக்கெப்போதே ஆவிபோனாலித்தேகம்வருதே (து)

10. ஆதிபந்தமில்லாநாதன் அவன்அன்பர்க்கிரங்கும்விநோதன்
ஜோதிமயிலேறும்பாதன் சிவசுப்பிரமணியகுருநாதன் (து)

---

கூஎ. இராகம்-ஆகிரி-தாளம்-திரிபுடை.

பல்லவி.

சண்முகனைத்துதித்தாடு குரு
ஸ்வாமிநாதன் பதத்தைத்தேடு (சண்)

அநுபல்லவி.

வண்மையாய்மயிலேறும் மாணிக்கவேலனை
மாதரிருவர் மகிழ்மாதுமைபாலனை (சண்)

சரணம்.

1. துஷ்டக்கொடு வினையைநீக்கும்
மேலாந்தூயபத மளிக்கநோக்கும்

அஅ



கஷ்டப்படாம லுன்னைகாக்கும்
யெந்தக்காலத்திலுஞ் சித்திதேக்கும் (சண்)

2. பாரில்மாதர் பெண்ணத்தைவிட்டு
நல்லபரகெதிவழி யதைத்தொட்டு
ஊரில்வசிப்பதை நீவிட்டுகெட்ட
உந்தன்பிரவி வேறைச்சுட்டு (சண்)

3. மங்குலம்போல்திரேகம் மறையும்முந்தி
மார்க்கத்தைத்தேடருள் நிறையும்
கங்குல்பகலறவே கறையும் படி
கந்தன்திருநாமத்தை உரையும் (சண்)

4. நீர்மேற்குமிழி யித்தேகம் அதை
நினையாமல் நீயின்ரபோகம்போல
பார்மீதுவாழ்ந்திடிற் சோகம்பற்றி
பாழாகாமல்யேக மோகம் (சண்)

5. ஆசைக்கயிற்றினில் நின்றுவிரிந்து
ஆடும்பம்பரஞ் சுழன்று
பாசப்பிணியதனை வென்று உமை
பாலன்பதத்தைநாடு நன்று (சண்)

6. தேகமதுமாமிசக் கட்டி கீர
சிந்தியொழுகும்ரத்தங் கொட்டி
ஓகோயீயெறும்பு ஓட்டி விட்டு
ஓடாதிருக்கு மலீலுக்கட்டி (சண்)

7. ஆவிபோனதின் பின்பு உடல்
அருகேநின்றால் பெருவம்பு
பாவியேநீயிதை நம்பு உனக்கு
பாகதிகிடைத்திடும் தெம்பு (சண்

8. சத்தியந்தன்னைநீ நாடு நல்ல
சற்சனர்களுடனே கூடு
நித்தியவாழ்வினைத் தேடு அந்த
நிர்மலன்பாதத்தைப் பாடு (சண்

9. குன்றைக்குடி யிருக்கும் கந்தன்உனக்கு
குறையாவரங்கொடுக்கும் மைந்தன்

யென்றைச்கும்அவன்பதம் உந்தன்
இருதயம்தனில்வைக்குஞ் சொந்தன் (சண்)

---

இதுவுமது.

௬அ. இராகம்-சாவேரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

குன்றைக்குடி குமாகுருபாநாதனைக்
கொள்வாய்நீநெஞ்சமே

அநுபல்லவி.

தண்டைசிலம்பணிபுந் தாமரைப்பாதனை
சாதுஜனர்கள்பணி தத்துவநாதனை (குன்)

சரணம்.

1. பிறவிச்சமுத்திரத்தை பாவியேதூர்ப்பார்
பேதையென்றுன்னைப் பேணியேபார்ப்பார்
தரையிற்றிரிந்திடாமல் தன்னடிசேர்ப்பார்
தாமரைப்பாதத்தை தந்துமேகார்ப்பார் (குன்)

2. வேலையில்லாமலே விரட்டியேபிடிப்பார்
வேணவாங்களைக் காட்டியேகொடுப்பார்
வாலைபுதல்வனுன்னை வாவென்றுஅழைப்பார்
வாழ்ந்திடவுனக்குமே அரைவீடுகொடுப்பார் (குன்)

3. பசித்தநேரத்தில் பாலன்னங்கொடுப்பார்
பற்பலதீன்களைத் தின்னாமல்தடுப்பார்
வசித்துஇருப்பதர்க்கு வாவியில்விடுப்பார்
வாவென்றுகூட்டிபோய் மரைவினில்அடிப்பார் (குன்)

4. குறைசொல்லிமுறையிடக் கோணமல்கேழ்ப்பார்
கோபத்தைபாற்றியே குளிர்ந்தநீர்வார்ப்பார்
பறைபெற்றமகனுனைப் பாலித்துக்கார்ப்பார்
பாபவழிபகற்றி பரகெதிசேர்ப்பார் (குன்)

5. உலகினுனக்குவேண்டும் உதவிகள்செய்வார்
ஓயாப்பிரவிபை அருத்துமேகொய்வார்
விலகியிருட்டறையில் மீட்டுமேஉய்வார்
வேதப்பொருள்முடிவைத் தரும்படிசெய்வார் (குன்)

6. வெள்ளிரதத்திலேறி வீதியில்வருவார்
வெண்டிபவரங்களைப் பூர்த்தியாய்த்தருவார்
அள்ளிவிபூதிதனை அடியவர்க்கெறிவார்
ஆண்டவன்வாழ்ந்திடத் திருவருள்புரிவார் (குன்)

கூகூ. இராகம்-ஹிந்துஸ்தான்-காப்பி-தாளம்-ஆதி.

பல்லவி.

குருபரநாதனைநாடு குன்றைக்
குழந்தைவேலனைப்பாடு மனமே (குரு)

அநுபல்லவி.

குருபரநாதனைக் குருமுனிபோதனை
திருவளர்தேவனை தெய்வானைகணவனை (குரு)

சரணம்.

1. யேமனவன்வந்துன்னை இடர்செய்யமாட்டான்
யெப்போதுமுன்கணக் கெடுத்திடமாட்டான்
காமனொருபோதிலுங் கணைவிடமாட்டான்
கருத்தினில்நினைத்திடில் கைவிடமாட்டான் (குரு)

2. யென்றும்நிலையில்லாத் தேகமதுவம்பு
இக்கணமறைந்திடும் இதை உறுதியாய்நம்பு
இன்றிருப்பார்நாளை இருப்பதுமில்லைத்தெம்பு
இணையடிமறவாமல் குமரவேள்பாதம்நம்பு (குரு)

3. நிரந்தரமான நிபுணகுருபோதன்
நேசித்தவர்க்கு வரமருள்பிரசாதன்
துரந்தரமாகிய சுபம்பிரபோதன்
சுத்தரூபசுப சுகுணப்பிரகாசிதன் (குரு)

4. கிரியில்மறைந்தொழியும் கிரவுஞ்சன்மேலே
கிரியதுபொடிபட விடுதனிவேலே
அரியின்மலருதித்த அயனொருக்காலே
அரியாமையால் சிறைபடைத்ததினாலே (குரு)

5. வைபகமிசைபுள்ள மறைபொருள்சகலமும்
வருமொருபொழுதிலும் மறைபொழுதிலுமில்லை
ஐயமில்லாமலேதினந் துதிஇதுசொல்லை
ஆண்டவன்துதித்திடும் அறுமுகவனுனக்கெல்லை (குரு)

ரா. இராகம்-யமுனைகல்யாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

சந்தநாதனேசொந்தம் நெஞ்சில்
கருதார்க்குமுடிவில் நிர்ப்பந்தம் (சந்த)

அநுபல்லவி.

சந்தநாதனே சொந்தம்கண்டால்பரமானந்தம்
சந்ததமதுபந்தம் சாஸ்வதமெனக்கந்தம் (சந்த)

சரணம்.

1. உலகத்திலெதுசொந்தம் உடலும்பெருந்துர்க்சந்தம்
கலைச்சுடரின்பந்தம் காமக்கிருமிக்குந்தம் (சந்த)

2. மண்ணில்முளைக்கும்பூடு மாயப்புருவின்கூடு
கண்ணில்மறையும்நாடு கருதாமல்ஒன்றைத்தேடு (சந்த)

3. தைபலில்லாதசட்டை ஜகத்தினிலொடலொட்டை
மெய்யிதுவெறுங்கட்டை மேதினிவாழ்வைவிட்டே (சந்த)

4. பாம்புகழட்டுஞ்சட்டை பாதைமரிக்குங்குட்டை
தாம்பலசொற்கள்கேட்டே தவிப்பதேவிட்டுவிட்டே (சந்த)

5. மின்மினிக்கொற்றவாழ்வு விரும்புதல்பெருந்தாழ்வு
தன்னினதென்றமாழ்வு தரித்திரமில்லாவாழ்வு (சந்த)

6. அன்பர்க்கருளுநீதன் ஆண்டவன்துதிபோதன்
இன்பந்தருவினோதன் இகபரமருள்நாதன் (சந்த)

ராக. இராகம்-காப்பி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

நெஞ்சே நீநினைப்பாய்வள்ளி
நேசனைக்குமரேசனை மறவாமல் (நெஞ்சே)

அநுபல்லவி.

பஞ்சைபைப்போல்நின்று பாரினில்தயங்காமல்
பாழானமாதர்கள்கண்ணில் மயங்காமல் (நெஞ்)

சரணம்.

1. கொஞ்சமும்வேலனைத் தஞ்சமெனத்திடம்
குடியிருக்கவுங்காணேன் நேரில்

அஞ்சலென்றுதினம் சடாக்ஷரமோதி
அருகிருக்கவுந் தோணேன் இந்த
வஞ்சமதிதனை மாற்றியேஅன்பதாய்
மாபாதகந்தீர மனதிலுன்னியே (நெஞ்)

2. தண்ணிக்கிழுத்திடில் கறைக்கிழுத்திடுந்
தன்மையைச்கைவிட மாட்டாய் யென்ன
பண்ணினபோதும்நீ யொருமொழி
பற்றியுரைத்திட மாட்டாய் கெட்ட
யெண்ணந்தனைவிட்டு இன்பப்பயிர்நட்டு
இப்பிரவிதன்னில் மெய்ப்பொருளைக்காண (நெஞ்)

3. இந்தவழிவிட்டு யெந்தவழியிலும்
யெட்டிப்பிடித்தாலும் நேருட்
உனக்கந்தக்குருபரனடி கிடைக்குமோ
அதுவுமில்லை வெவ்வேறாய்உந்தன்
சிந்தைதனைநீ சிதறவிடாமலே
திருவடிதனைப் பெறவிரும்பியே (நெஞ்)

---

ஈ௨. இராகம்-சஹானா-தாளம்-ஆதி.

பல்லவி.

மனமேஒருமொழிகூறுவேன் கேளாய்
வடிவேலனடியில் அண்டிநீவாழாய் (மனமே)

அநுபல்லவி.

சனமேஉனச்குவெகு தனமதுகிடைச்கும்
கருதாவிடினுந்தன் பரசெதியடைக்கும் (மனமே)

சரணம்,

1. பேதைமதியால்பிரர் பொருளுக்காசைப்படாதே
பேரின்பவாழ்வினை வெருத்துநீகைவிடாதே
கோதையெனும்பேய்கள் குழலினைக்கண்ணுறாதே
கோடிதரங்கும்பிட்டேன் குமானைமறவாதே (மன)

2. நிந்தையுரைப்பவர்கள் நேசம்பண்ணாதே
நித்தியவாழ்வினை யிகழவொண்ணாதெ

சந்தையிரைச்சலிதைச் சதமென்றெண்ணாதே
ஷண்முகனடிதனைச் சதாமறவாதே (மன)

3. வேண்டியபொருளீ விரைவினில்தேடு
விமலனிருசரணை மனதினில்நாடு
ஆண்டியவன்புகழை யனுதினம்பாடு
ஆறுமுகவனடி நாடியேகூடு (மன)

4. கல்லுவச்சிரமல்ல காணிந்தத்தேசம்
கண்டமிதர்க்குவரும் புவியிலனேகம்
அல்லும்பகலும்வடி வேலவன்சோகம்
அதுவன்றிவேறில்லை வுனக்குயிப்பாகம் (மன)

5. கோடிதலங்கள்சுற்றிக் கூவிவந்தாலும்
குன்றைப்பதியினைப்போல் கூடுமோவுனக்கு
வாடிமனமெலிந்து மயங்கிநில்லாதே
வள்ளிமணாளனன்றி மற்றைச்சொல்லாதே (மன)

6. பாசமொழிவதர்க்குப் பாலனைப்பாரு
பலயோசனைதன்னில் பலனென்னகூரு
தாசனண்டவன்சொல்லும் தசவலைத்தேரு
சம்சாறக்சடலைத் தாண்டிக்கரையேரு (மன)

முற்றிற்று.

---

## வாழி சந்த விருத்தம்.

ஐங்கரன்றனடியும்வாழி யரனுவாழிவிண்டுவு
மரிய பிர்மனமலைவாணி யழகின்மிக்கமாதொடு
சங்கைமைந்தனனசந்தன் வள்ளிதெய்வயானையுங்
கையில்வேலுமயிலு வாழி சல்விகற்ற சீலர்க
ளெங்கும் வாழியிந்தனூலியற்றினேனின்னூலினை
யின்புறப்படிப்பர் கேழ்பரென்றும் வாழி மதுநதி
தங்குகுன்றைநகரும் வாழி சண்முகப்பிரபந்தமுந்
தளைக்க வாழி வாழி சர்க்குருவும் வாழி வாழியே.

ஸ்ரீசண்முகப் பிரபந்தம்

முற்றிற்று.

ஓம் ஸத்குரவே நம:

உ

சிவமயம்

ஷ மதுரகவி ஆண்டவனென்னும்

# முத்தய்யப்பாவலரவர்களியற்றியது.

## ஸ்ரீ சிதம்பரம்

## நடராஜர்மீது நடனப்பதிகம்.

மணிகொழித்திடு சங்கைநதியாட முடியாட வளரிளம்பிறையுமாட
மணங்கமழ்ந்திடு கொன்றைமலராட அறுகாட வளமிகுந்தும்பையாட்
அணியாயிலங்கின்ற ஆத்திமாமலராட அரவாடமத்தமாட
அதினோடுசேர்வெள்ளெருக்காடவிழியாட அருகுருநந்தேவியாட்
பணியென்ற காதுருங்குழையாடமழுவாட பகாரியமானுமாடப்
பாரமிகுபன்றியின் மருப்பாட வென்பாடபலதலையின் மாலையாடத்
திணிமிகும்பாதச்சிலம்பாட மணியாடதிறல்வீர சண்டையாட
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே (௧)

தந்தியையுரித்தணிந்திட்ட தொருவுடையாட தாவுபுலியதளுமாட
சத்தியோசாதமீசானவாமத்தோடு தறபுருடகோரமாட
சுந்திரமதானதோர் மூவிலைச்சூலமுந் தோன்றிடுபினாகமாட
சொல்லுதற்கரிதான பாசம்வெண்ணீறோடு தூயருத்திருக்கமாட
மந்திரமதான பஞ்சாட்சர வெழுத்தாடவளருமுபநிட தமாட
வண்ணமிகுசடைபாட வுன்னிதமதாகவே வலதுகான்மாரியாட்
சிந்துதருநித்திலக்கோர்வையொடு ரெத்தினந்திகழுமணியாரமாட
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடு சிற்றம்பலக்கடவுளே.(௨)

சலதிதனில்வாழ்கின்ற மாலாடவேசையிற்சங்குசக்கரமுமாடச்
சதுர்முகங்கொண்டிலகுவாணிகேள்வனுமாடசாற்றரியமறையுமாடப்
பலநேத்திரங்கொண் டிலங்கின்றவரியாட பலமானவச்ரமாடப்
பசாரியவெண்டிசைப் பாலகருமாடவுயர் பரிதிமதிதானுமாட
வலமிகுந்திடுமட்டவசுவாட விண்ணின்மேல்வளருடுத்திரளுமாட
வகையானநவநாயகருமாட சத்தியால்வருருத்திரர் தானுமாட
திலதமிடுமுசமழகணைவங்கஜனுட தேவர்பலர்நிர்த்தமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (௩

# நடராஜர்மீது நடனப்பதிகம்.

உ

வீரிட்டிடுந்தந்தியெட்டாடவதினோடு மேவட்ட நாகமாட
வேதனுக்குறுதேவிதானாட மலரின்மேல் மேவுலக்குமியுமாட
வாரிட்டகொங்கையுளரம்பை மேனகையுமூர்வசிதிலோர்த்தமையுமாட
மாதிரதியாட வயிராணிமாதங்கியொடு மாதேவிதுர்க்கையாட
நேரிட்டகெந்திருவர் சித்தவித்தியாதரர்கள் நின்றொருபுரத்திலாட
நெரியுள்ளகருடகிம்புருடரொடு விஞ்சையர்கள் நீண்முடிஇயக்கராட
சீரிட்டிலங்கவேபத்தியாயுந்தனைச் சேர்பூதகணமுமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (ச)

நந்திமத்தளமோடுநின்றாட வீணையொடு நாரதருமங்ஙனாட
நாடுதும்புருவொடுபதஞ்சலிவியாக்கிரமர் நாதருன்னெதிரிலாட
தொந்திவயர்கொண்டிலகு தந்திமுகனாடநற் சுப்பய்யதேவனாடத்
துணைவராம்வீரபத்திரனோடு வைரவன் சூழ்ந்திருபுரத்திலாட
பந்தியாய்நவவீரர்நின்றாட வரிகரன்பாலனா மய்யனாட
பக்கத்தில்மாகாளரோடு லெக்கத்தெண்மா பத்தியாயருகிலாட
சிந்தோடுமண்விண்ணிரண்டாடவதினுநஞ் சீவாசிகளுமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (ரு)

தவமிகுங்கும்பமுனியாதியாய்மேலான சப்தவிருடிகளுமாடத்
தற்பரானந்தவொளிகண்டினிமையா யமருதற்போதசித்தராடப்
புவாநதனுகாதபடி நின்பதம்பெற்றிலகு பாரமுனியோருமாடப்
பகருதற்கரிதான மறையோதுமந்தணப் பக்தவடியார்களாட
நவமிகுந்திடுதில்லை மூவாயிரவராட நாட்டியப்பெண்களாட
நானென்றவாதம் நிலைகண்டிணந்திடு கோடிநாதாக்கள் தானுமாட
சிவமெனும்பிரணவப் பிரகாசவொளியதுன் சென்னிமிசைநின்றுமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (சு)

ஒப்புவமையில்லாதிலங்கிப்பிரகாசிக்குமோரெழுத்ததுவுமாட
உண்மையாமுன்றெழுத் தெட்டெழுத் தய்ம்பத்தியோரெழுத்ததுவுமாட
அப்பனையுன்சேயெனும்பரமதருவமரு மாரெழுத்ததுவுமாட
அகிலமிசையீரெழுத்தாகவேபாவுமுயர் ஆண்பெண்ணெழுத்துமாட
இப்படிவமிவ்வுருவமென்பதற்கரிதா யிலங்குபலவுருவமாட
எழிலானசத்திவடிவங்கனும்பல்கோடி யேகமாயங்ஙனாடச்
செப்புதற்கரிதா யிலங்குமச்சுடராட தீரமுறுவாசியாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (எ)

# நடராஜர்மீது நடனப்பதிகம்.

சந்ததமுமுந்தனடி யகலாதமணிவாசகப்பிரான் றானுமாட
தையலுரைகொண்டுதிருத்தில்லைவருநித்திலத்தாண்டவன்றானுமாட
பந்தவடிவதுதொலைய வெந்தழலில்மூழ்கிவருபக்தமுனிநந்தனாட
படிகமூலப்பொருளிரத்தினசபாபதிப் படிவமதிரண்டுமாட
வந்துதலைமுழுகுவோர் பந்தவினைநீக்குசிவ மாகங்கைதானுமாட
வரிசையொடுசிங்காரமாமாயிரக்காலின் மண்டபந்தானுமாட
செந்திருவமர்ந்திடவு மாகாயமத்தினிற் சேர்சப்தசடையுமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (௮

உந்தனடிகெதியென்று சந்ததம்பாடுநாவுக் கரசுதானுமாட
உம்பர்கள்வணங்குதிரு வாரூரின்மேல்வந்துதித்தசுந்தரனுமாட
தந்தைமனமகிழ்வுறைசொல்லித்துதித்திடுஞ்சம்பந்தமூர்த்திபாட
தையலுமைமாதுபணிசெய்திடும்பாவையொடுசங்கிலித்தாயுமாட
மைந்தனைக்கரிசமைத்திடுசிறுத்தொண்டரொடுவருநாயன்மாருமாட
வையகந்தன்னிற் சிரந்திலங்கின்ற நலமானவைம்பூதமாட
திந்திமித்திமிதியெனமேளதாளங்களொடு சேர்ந்துநிற்பவருமாட
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (௯

பங்கயாசனிகிருபை பெற்றிடுங்கெடிபான பாவாணர்தானுமாடப்
பாடெனச்சொலுமுனங்கவிமாரி பொழிகின்றபலவித்துவான்கடாடச்
சங்கீதமென்றமதுமாரிபைப்பொழிகின்ற தாட்டிகர்கள்கூட்டமாடச்
சப்தசுரபேதந்தொனித்திடுங்கருவிபது தாங்குவோர்தானுமாட
எங்கணுங்கீர்த்திபெற்றிலகின்றபெருமாட்கவீச்சுரன்றானுமாட
இன்பமொடுவன்னவற் கருமைபுளசீடர்பலரேகமாயங்கனாடச்
சிங்காரமானவிடபக்கொடிசூழன்றாட சீரானரிஷபமாடச்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே. (௰

அனவாதமுனதடிமை மாவாதபுத்திபது வடிவேபன்மனத்தினூட
வவ்வலுவினாற்சென்ன மரணமதுநீங்கியே யானந்தவாழ்வுகூடத்
தனதெனுமகந்தைபது சற்றேனுமில்லாது சாயுச்சியபதவிதேடச்
சாற்றுதற்கரிதான வாத்மநிலையெதுவெனச் சங்கராநின்றுபாடக்
கனமானபதிபிதைக் கண்டுகொள்ளெனவுனது கட்புலனுமென்னைநாட
கண்டினிமைபதுபொ விருக்கின்ற முத்தைபன்கவலைபது நீங்கியோட
தினமெனதுசிரமீது வானந்தநிர்த்தனம் செய்யநீவந்தருளுவாய்
சிற்சபையெனும்பெரியபொற்சபையினடனமிடுசிற்றம்பலக்கடவுளே (௰௧

முற்றிற்று.

